# கொங்கு நாட்டியல்




பதிப்பாசிரியர்
டாக்டர் நா. செயராமன்
டாக்டர் இரா. சந்திரசேகரன்

# கொங்கு நாட்டியல்

## கருத்தரங்கக் கட்டுரைகள்

பதிப்பாசிரியர்கள்

நா. செயராமன்
இரா. சந்திரசேகரன்





பாரதியார் பல்கலைக்கழகம்
கோயமுத்தூர் 641 046

பாரதியார் பல்கலைக்கழக வெளியீடு : 7

முதற்பதிப்பு : செப்டம்பர் 1988



---

பதிப்பாசிரியர்கள் :

நா. செயராமன்

இரா. சந்திரசேகரன்

வெளியீடு :

பதிவாளர், பாரதியார் பல்கலைக்கழகம், கோவை 641 046

அச்சு :

சிந்தாமணி அச்சகம், கோவை 641 004



விலை ரூ :

# ப டை ய ல்



கொங்கு நாட்டின் பல்துறை வளர்ச்சிக்கு

உறுதுணைபுரிபவரும்

கொங்கு நாட்டியல் ஆய்வில் மிகுந்த ஈடுபாடு

கொண்டவருமாகிய

புரவலர் அருட்செல்வர்

பொள்ளாச்சி

**டாக்டர் நா. மகாலிங்கம்**

அவர்களுக்கு

இந்நூல் படையலாகிறது

# அணிந்துரை

டாக்டர் கொ. ம, மாரிமுத்து
துணைவேந்தர்
பாரதியார் பல்கலைக்கழகம்

கோயம்புத்தூர் 641 046
நாள்

தமிழ்நாட்டில் இன்றைய தொழில் வளர்ச்சியை மிகக் கம்பீரத்துடன் எடுத்துக்காட்டிக் கொண்டிருப்பது கொங்குப்பகுதி யாகும். நீர்வளப்பம் குறைந்த கரிசல்பகுதிகள்கூடத் தொழில் வளப்பத்தில் தலையுயர்ந்து நிற்க முடியும் என்று காட்டும்பகுதியும் இது தான். தொழில், கல்வி, வணிகம், வேளாண்மை போன்ற அனைத்துத் துறைகளிலும் சிறப்பான வளர்ச்சி பெற்று இன்று தமிழ்நாட்டிற்கு வழிகாட்டும் பகுதி இது என்றால்கூட அது மிகை யல்ல. இத்தகைய கொங்குப் பகுதிக்கு மிகப் பழமையான வரலாறு உண்டு. இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பிருந்தே அரசியல் வரலாற்றில் சிறப்புப் பொருந்திய வாழ்வு இதற்கு உண்டு, இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பு ஆட்சிசெய்த கிரேக்க, ரோமா னிய மன்னர்களின் நாணயங்கள் கொங்கு நாட்டு நொய்யல் நதிக் கரையில் கிடைத்துள்ளன. அது இப்பகுதியின் பழமையைக் குறிப்பதாகும். சேர, சோழ, பாண்டிய, நாயக்க அரசர்களின் ஏராளமான கல்வெட்டுக்கள் கொங்குப் பகுதியில் காணப்படு கின்றன. அவற்றுள் சிலவே படியெடுக்கப்பட்டுள்ளன. சுந்தரர் போன்ற அடியார்கள் உலாவந்து பாடிய திருத்தலங்கள் இப்பகுதி யில் உள்ளன. சைவம், வைணவம், சமணம், இசுலாம், கிறித்துவம் போன்ற அனைத்துச் சமயங்களுக்கும் பெருமை சேர்த்துத் தந்த சமய வரலாறும் இப்பகுதிக்குண்டு.

கொங்கு நாட்டின் தொன்மை, அரசியல், சமூக மற்றும் சமய வரலாறு, அந்நாட்டின் மக்களுக்கேயுரிய சிறந்த

பண்பாட்டுக் கூறுகள், இலக்கியம், தொழில், கல்வி, மற்றும் வணிக வளர்ச்சி போன்றவற்றை முழுமையாக வெளிக்கொணரும் ஆய்வுகள் ஓரளவே வெளிவந்துள்ளன. இத்தகைய ஆய்வுகளை பல்துறை அறிஞர்களும் இணைந்து செய்தால்தான் சிறப்பாக அமையும். இந்த முயற்சியின் ஒரு தொடக்கமாக பாரதியார் பல்கலைக்கழகம் கொங்கு நாட்டியல் ஆய்வுக் கருத்தரங்கு ஒன்றை நடத்தி அதில் அளிக்கப்பட்ட கட்டுரைகளை நூல்வடிவில் இப்போது வெளியிடுவதற்கு முன்வந்த தமிழ்த்துறையை நான் பாராட்டு கிறேன். இதில் அமைந்துள்ள கட்டுரைகள் கொங்கு நாட்டின் பல்வேறு சிறப்புக்களை வேறுவேறு கோணங்களில் ஆராய்ந்து வெளிப்படுத்துகின்றன. மிகத்தொன்மைக் காலத்திலிருந்து மிக அண்மைக்கால இயல்புகள் வரை பரந்துபட்ட வளர்ச்சிப் போக்கு களை இக்கட்டுரைகள் ஆராய்கின்றன. இது பாராட்டுதலுக்குரிய புதிய முயற்சியாகும்.

இம்முயற்சியைத் தொடர்ந்து, கொங்குநாட்டியல் தொடர் பாக மேலும் மேலும் புதிய ஆய்வுக்கட்டுரைகளை வெளியிட முன்வரவேண்டுமென்று தமிழ்த்துறையினரை நான் கேட்டுக்கொள் கிறேன்.

இத்தொகுப்பு கொங்குநாட்டின் சிறப்பை வெளிப்படுத்தும் சிறந்த நூல்களிலொன்றாக அமையுமென்பதில் எனக்கொரு ஐயமில்லை.

கொ. ம. மாரிமுத்து

# பதிப்புரை

இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பிருந்தே கொங்கு நாட்டிற்கு வளமான வரலாறு உண்டு. கிரேக்க ரோமனியப் பேரரசுகளுடன் கி. மு. 15ல் தொடங்கிய வணிக உறவு மூன்றுநூற்றாண்டுகள் மிகச்செழிப்புடன் விளங்கியதற்கான சான்றுகள் கிடைத்துள்ளன. அன்றிலிருந்து இன்றுவரை, கொங்குநாட்டிற்கென்று தனிச்சிறப்புகளுடன் அரசியல், சமூக வரலாறு திகழ்ந்து வந்திருக்கிறது. சேர, சோழ. பாண்டியர், கொங்குச்சோழர், கொங்குப் பாண்டியர் மற்றும் நாயக்கப் பேரரசுகளின் ஆளுமையிலும், பின்னர் ஆங்கிலேயர் ஆளுமையிலும் கொங்குநாடு அமைந்து வந்திருக்கிறது என்றாலும், தன் தனிப் பண்பாட்டுக் கூறுகளைக் கொங்குநாடு இழந்துவிடவில்லை.

கொங்கு வரலாற்றின் பல்வேறு தன்மைகளை ஆராய்வதற்காகச் சென்ற 1987 மார்ச் 10, 11, 12 ஆகிய மூன்று நாட்கள் ''கொங்கு நாட்டியல் கருத்தரங்கு'' ஒன்று பாரதியார் பல்கலைக் கழகத் தமிழ் மற்றும் மொழியியல் துறைகளின் சார்பில் நடைபெற்றது. கொங்கு நாட்டின் தலைசிறந்த தொழிலதிபரும், கொங்கு நாட்டியல் ஆய்வுகளில் ஆர்வம் கொண்டுள்ளவருமாகிய **அருட்செல்வர் நா. மகாலிங்கம்** அவர்கள் இதைத் தொடங்கி வைத்தார்கள். இக்கருத்தரங்கில் படித்து ஆராயப்பட்ட கட்டுரைகள் இப்போது நூல்வடிவில் தொகுக்கப்பட்டு வெளியிடப் படுகின்றன.

பாரதியார் பல்கலைக் கழகத் துணைவேந்தர் **டாக்டர் கே. எம். மாரிமுத்து** அவர்கள் உலகப் புகழ்பெற்ற அறிவியல் அறிஞர்; வெளிநாடுகளில் பல்லாண்டு வாழ்ந்தவர் எனினும் தாம் பிறந்த மண்ணின்மீது, குறிப்பாகக் கொங்கு நாட்டின்மீது ஆழமான

அன்பு கொண்டவர். கொங்கு நாட்டு வரலாறு, பண்பாடு, இலக்கியம் போன்றவற்றில் ஈடுபாடு கொண்டவர். அவர் இத் தொகுப்பினை விரைவில் வெளியிட வற்புறுத்தினார். நல்ல பொருத்தமான அணிந்துரையையும் வழங்கிச் சிறப்பித்துள்ளார்கள். அவர்களுக்கு எம் நன்றி.

பாரதியார் பல்கலைக் கழகப் பதிவாளர் பேராசிரியர் **பா. நல். சிலம்பண்ணன்** அவர்கள் அலுவலக வழியிலான எல்லா உதவிகளும் அளித்ததோடு தனிப்பட்ட முறையிலும் உற்சாகத்துடன் ஒத்துழைப்பு நல்கிச் சிறப்பித்தார்கள். அவர்களுக்கு எம் நன்றி.

கலையியல்புல முதன்மையரும், மொழியியல் துறைத் தலைவருமான டாக்டர் கி.கருணாகரன் அவர்கள் கருத்தரங்கு அமைப்பு, நூல் வெளியீடு ஆகிய அனைத்திலும் ஒவ்வொரு படி நிலையிலும் மிகுந்த ஆர்வம் செலுத்தி நெறிப்படுத்தினார்கள். பொறுப்புக் களைப் பகிர்ந்துகொண்டு உடனிருந்து ஆர்வத்துடன் உதவினார் தமிழ்த்துறை விரிவுரையாளர் டாக்டர் சி. மா. ரவிச்சந்திரன் அவர்கள் அனைவருக்கும் எம் நன்றி.

கட்டுரைகளைப் படி எடுத்தல், அச்சு - சரிபார்த்தல் போன்ற பல நிலைகளில் எம் ஆய்வாளர்கள் உதவினர். குறிப்பாக திரு. மா. மீனாட்சிசுந்தரம், திரு. மா. சோமசுந்தரம், திரு.கிருபாகரன், திரு. ஓ. பாலகிருஷ்ணன் ஆகியோர் செய்த உதவிகளுக்கும், சிறப்பாக அச்சிட்ட சிந்தாமணி அச்சகத்தார்க்கும் எம் நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறோம்.

**பதிப்பாசிரியர்கள்**

# உள்ளடக்கம்

# கொங்கு நாட்டுக் கல்வெட்டுகள்

சி. கோவிந்தராசனார்
கரந்தை பேராசிரியர்

## வாயில்

சங்ககாலத் தமிழகம் ஐந்து நாடுகளாகப் பிரிக்கப்பட்டிருந்தது. அவை : சேரநாடு, சோழநாடு, பாண்டிநாடு, தொண்டைநாடு, கொங்குநாடு என்பனவாகும். கொங்குநாடு சங்ககாலத்தில் வடக்கே காவிரி ஆற்றின் தலைப்பிற்கு அப்பாலும் நெடுந்தூரம் பரவி இருந்துள்ளது. பழங்கொங்கு நாட்டினைச் சேரமன்னர்களும் அதியமான் போன்ற வேளிர் மரபினரும் ஆண்டிருப்பதனை இலக்கியங்கள் அறிமுகம் செய்கின்றன.

கி. பி. 7-ஆம் நூற்றாண்டிலிருந்து, வரலாற்றுக்காலத்தில் அமைந்த பாண்டியர்கள், சேரர்கள், சோழர்கள், கொங்குச் சோழர்கள், கொங்குப்பாண்டியர்கள், கங்கர்கள், ஹொய்சளர்கள், நுளம்பர்கள், விசயநகர வேந்தர்கள், மதுரை நாயக்க மன்னர்கள், மைசூர் உடையார்கள், முகம்மதிய சுல்தான்கள் ஆகிய மன்னர்கள் ஆட்சி செய்துள்ளனர்.

இம்மன்னர்கள் கொங்கு நாட்டில் செலுத்திய ஆட்சி முறைமையினையும், அறச்செயல்களையும், அவ்வவரின் ஆட்சிக்காலங்களில், கோயில்களிலும், பாறைகளிலும், தனிக்கற்களிலும், கல்வெட்டுகளாகப் பொறித்துள்ளனர்.

அவற்றால் அறியப்பெறும் செய்திகளைக் கொண்டு, கொங்கு நாட்டின் வளம், சமுதாய நிலை, சமயவளர்ச்சி, பொருளாதார மதிப்பீடு, வணிகம், வேளாண்மை, நாகரிக வளர்ச்சி, மக்கள் பண்பாடு ஆகியவற்றை அறிய முடிகின்றது. அவற்றுள் ஒரு சில கல்வெட்டுக்களைக் கொண்டும், அவற்றின் செய்திகட்கு ஏற்புடைய சான்றுகளைக் கொண்டும் கூறுவதே இத்தொகுப்புரையாகும்.

## கொங்குநாடு

கொங்குநாடு கல்வெட்டுக்களில் கொங்காணம் என்றும், கொங்கு மண்டலம் என்றும் கூறப்பட்டுள்ளது. சங்க இலக்கியங்கள்

கொங்கென்றே குறிக்கின்றன. மேற்கு மலைத் தொடரின் கிழக்குப் புறத்தே, மிக்க பரப்புடையதாக அமைந்த கொங்கு நாட்டின் பெயரமைதி சிந்தனைக்குரியதாகும்.

கொங்கு என்ற பெயர்ச்சொல் தேன் என்ற பொருளை யும் குறிப்பதால், தேன்மலிந்த நாடு இப்பெயர் பெற்றதென்பர். இந்நாடு மழைவளம் குன்றிய நாடென்பது இயற்கையமைப்பு. ஒரு சில மலைப்பகுதிகளைத் தவிர மற்றைய பகுதிகள் நீர்வளமும் நிலவளமும் சிறப்பில்லாமல் புல்லும் புதரும் மலிந்த வான்வளம் குன்றிய நாடாக இருப்பதில், மலரில் செறிந்த தேன்வளமே மிக்கிருந்தது என்பது அமையவில்லை. ஆயினும், பிறிதொரு பொருளாலும், நிலவியற்கையளித்த பயனாலும் பெயர்ப்பொருத்தம் காண முடிகின்றது.

கொங்கு என்பதன் சிறந்த பொருள் பூந்தாது என்பதாம். பூந்தாதாகிய மகரந்தம் மலர்களின் நடுவண் பொருந்தியிருப்பது. தாவர இனப்பெருக்கத்திற்குக் கருவாகிய இப்பகுதி மென்மையும் மஞ்சள் நிறமும் பொருந்தியதாகவே இருக்கும்.

வடகொங்கின் குறும்புநாட்டுப் பகுதி கங்க நாடாகும். அப் பகுதியிலமைந்த கோலார் என்னும் ஊரிடத்தில் பொன் கனி வளம் பெருகி நிற்பதை இன்றும் அறிய முடிகின்றது. அப் பகுதியைச் சார்ந்த குடகு நாட்டில் தோன்றி வரும் காவிரி, பள்ளத்தாக்குகளில் பாறைகளை அரித்தோடி வருங்கால் பெறும் பொன் துகளை வண்டலுடன் கொழித்துச் செல்வதால் பொன்னி என்ற சிறப்புப் பெயரும் பெற்றுள்ளமை, கங்க நாட்டுப் பொன் வளத்தினைப் புலப்படுத்துகின்றது.

கங்கநாடு வரலாற்றுக்காலத்தில் கொங்குகாணம் என்ற பெயரால் வழங்கப்பட்டுப் பின்னர் ம.நவி கொங்காணம் என்று குறிக்கப்பட்டுள்ளமையைக் கல்வெட்டுகளால் அறிய முடிகின்றது.

கொங்கினைப் போன்ற பசும்பொன் நாணயங்கள் வழங்கப் பட்ட நாடென்பதால் கொங்காணம் என்ற பெயரைப் பெறுவ தாயிற்று. கொங்காணத்தில் வாழ்ந்திருந்த சித்தரும் கொங்கண சித்தர் என்று குறிக்கப்பெற்றார். மற்றும்,

ஒரு நாட்டின் பொருளாதார உயர்வு தாழ்விற்கும் வாணிக மதிப்பீட்டு வளர்ச்சிக்கும் பொன்னின் மதிப்பீடே அடிப்படையாக அமைந்திருப்பதைக் காண்கின்றோம்.

இக்கருத்தின் அடிப்படையில் கொங்கிற்பொன் மலிந்தால் எங்கும் எப்பொருளும் மலிவடையும் என்ற பொருளாதாரக் கணிப்பில், ''கொங்கு மலிந்தால் எங்கும் மலியும்'' என்ற பழமொழியும் நாட்டில் வழக்கில் இருந்து வருகின்றது.

இந்நாட்டில் விலையுயர்ந்த இரத்தின வகைக் கற்கள் கிடைத்-துள்ளன. தாராபுரம் வட்டம் படியூரில் நீலக்கற்களின் படிமங்கள் இருந்துள்ளன.

பதிற்றுப்பத்தில் கபிலர்,

''வான் பளிங்கு விரைஇய செம்பரன் முரம்பின்
இலங்கு கதிர்த் திருமணி பெறூஉம்
அகன்கண் வைப்பின் நாடு கிழவோனே''

என்று கொங்கர்கோமானாகவிருந்த சேரனைப் பாடியிருப்பதும் கொங்கில் நிலக் கனிவளம் மிகுந்ததனைப் புலப்படுத்துகின்றது.

கொங்கு நாட்டினை வென்ற முதல் ஆதித்த சோழன் ''சிற்றம்பல முகடு கொங்கிற் கனக மணிந்த ஆதித்தன்'' என்று சிறப்பிக்கப்பட்டுள்ளான்.[1]

கொங்குப்பொன், பொன்வகையில் உரையும் மாற்றும் உயர்ந்த பசும்பொன்னாக இருந்தமையினால், பொன்னின் தரத்திற்குக் 'கொங்குரை'[2] என்று கூறப்பட்டுள்ளது. ''கொங்கில் பன்னுதுளைப் பசும்பொன்'' என்று சேக்கிழாரும் குறித்துள்ளார்.[3]

இவற்றால், தமிழகத்தில் பிறமண்டலங்களில் இல்லாத உயர்ந்த பசும்பொற் கனிவளமும் இரத்தினப்படிமங்களும் நிலத் தகட்டில் விளைந்திருந்த நாடாக இருந்த சிறப்பினைக் கொண்டு பண்டைச் சான்றோர் பொற்சுரங்கமுள்ள திறத்தாலும் பொன்னின் உயர்தரத்தாலும் இந்நாட்டினைக் 'கொங்கு' என்ற சிறப்புப் பெயரால் குறித்துள்ளனர் என்று கருத முடிகின்றது.

தமிழகத்தில் நிலவளத்தினைக் கொண்டே நாடுகள் குறிக்கப் பட்டிருப்பதனை, சோழ நாடு - நீர் நாடென்றும்; சேர நாடு - மலைநாடு என்றும் கல்வெட்டுகளிலும் குறிக்கப் பெறுவதனை

ஒப்பிட்டு, "பசும்பொன் நாடு" என்பதனைச் சுட்டிவறிய கொங்கு நாடு என்று குறித்தனர் என்றும் கூறலாகும்.

## கொங்குமண்டல நாடுகள்

கொங்கு மண்டலம் 24 நாடுகளாகப் பிரிக்கப்பட்டிருந்தது என்பதனைக் கொங்குமண்டலச் சதகங்கள் கூறுகின்றன. கொங்கு மண்டலத்தில் இதுவரையில் கிடைத்துள்ள கல்வெட்டுச் செய்திகளால் தலைமை நாடுகளின் பெயர்களுடன், அவற்றின் உட்பிரிவான நாடுகளின் பெயர்களும் கிடைக்கின்றன. சதகங்கள் குறிப்பதினின்றும் புதியனவாகவும் சில நாடுகளின் பெயர்கள் உள்ளன. அவை :

1. அண்ட நாடு
ஆறை நாடு
உடுவக்கா நாடு
உமப்பற்காடு நாடு
எருமை நாடு
ஏழுகரை நாடு
கரைவழி நாடு
கள்ள நாடு
காங்கேய நாடு
10. காஞ்சி கூசல் நாடு
காமூர் நாடு
கீழ்கரை நாடு
குறுப்பு நாடு
குறும்பூர் நாடு
கொல்லி நாடு
செங்கள நாடு
செம்பறக்கை நாடு
சேல நாடு
தகடூர் நாடு
20. தட்டைக்கள நாடு
தினைக்கரம்பை நாடு
தென்கரை நாடு
தென்வழிநாடு-ஏழூர்
நரையனூர் நாடு
நல்லுருக்கா நாடு
நாலுகரை நாடு
நாலூர் நாடு
புன்னாடு
பூந்துறை நாடு
30. பூவாணிய நாடு
பொறை நாடு
பொன் களூர் நாடு
பேரூர் நாடு
முதிரை நாடு
மேல்கரை நாடு
வஞ்சி நாடு
வடகரை நாடு
வடபரிசார நாடு
வளை நாடு
40. வாய்க்கரை நாடு
வாயுறைக்கா நாடு
வெங்கல நாடு
வெள்ளப்ப நாடு
வையாவி நாடு

## கொங்குச் சேரர்

கொங்கு நாட்டில், கேரளம் என்று பெயர் பெறும் சேரநாட்டு அரசர்கள் கி. பி. எட்டாம் நூற்றாண்டு முதலாக நாட்டைக்

கைப்பற்றி ஆட்சி செய்துள்ளமையினைக் கல்வெட்டுகள் உணர்த்துகின்றன.

கி. பி. ஒன்பதாம் நூற்றாண்டில் சேர மன்னன் கோக்கண்டன் ரவி, இரவிகண்டன் என்னும் அரசர்கள் கொங்குப் பேரூரில் ஆட்சி நிகழ்த்தியுள்ளமையினை அங்குள்ள பழைய கல்வெட்டு களால் அறியமுடிகின்றது. [4]

உரோமானிய நாணயங்கள் கிடைத்துள்ள வெள்ளலூரில் உள்ள வட்டெழுத்துச் சாசனங்களால், கோக்கண்டன் வீரநாராயணன், கோக்கண்டன் ரவி என்ற இரு சேர அரசரின் பெயர்கள் உள்ளன.

முதல் ஆதித்த சோழன் ஆட்சியில் (கி. பி. 871-907) கொங்கு நாட்டுடன் கங்கநாடும் இருந்துள்ளது. [5] அக்காலத்தில், ஆதித்த சோழன் தன்னால் வெல்லப்பட்ட சேருடன் நட்புரிமை கொண் டிருந்தானென்று வரலாறுகள் கூறுகின்றன. [6] ஆதித்தன் கொங்கு நாட்டினை வென்றமையினைக் ''கொங்கு தேச ராசாக்கள்'' என்ற வரலாற்று நூல்,

''சோழ வம்சத்திலே விசயாடராயன் (விசயாலயன்)
மகன் ஆதித்தவர்மராயன் சோழதேசம் தஞ்சா
வூரிலே பட்டங்கட்டிக் கொண்டு கொங்கு தேசத்
துக்கு வந்து ராசா வேடர்களைச் செயம்பண்ணித்
தலைக்காடு என்ற பட்டணங்கட்டிக் கொண்டு
இந்த இராச்சியங்களிலே அனேக அக்கிரகாரம்
சர்வமானியமாய்த் தருமம் பண்ணி அந்த அரசை
ஆண்டனன்.''

என்று கூறுகின்றது. ஆதித்தன் ஆட்சி கொங்கு நாட்டில் நிலவியபோது, சேரமான் தாணுரவி என்னும் சேரவரசன் நட்பு-ரிமை கொண்டு நிலவியதைச் சோழநாட்டுத் திருநெய்த்தானக் கல்வெட்டொன்றால் அறிய முடிகின்றது. [7] இச் சேரமன்னன் தாணுரவியின் பெயரே வெள்ளலூர், பேரூர் கல்வெட்டுகளிலும் இடம் பெற்றுள்ளன.

கி. பி. எட்டாம் நூற்றாண்டளவில் வீரகேரளன் என்ற விருதுப் பெயருடைய சேர மன்னனொருவன், பேரூர் பெருநகராகவும் (கோவன்) புத்தூர் ஊராகவும் இருந்த காலத்தில் புத்தூர்க்கு வீரகேரள நல்லூர் என்று பெயரிட்டுள்ளான்.

பின்னர் புத்தூர் கோவன் புத்தூராகி வந்த காலத்தில் பேரூரில் பொறிக்கப்பட்ட கல்வெட்டொன்றில்,

''பேரூர் நாட்டு கோவன்புத்தூரான வீரகேரள நல்லூர்'' என்று குறிக்கப் பெறுவதால் இச் செய்தி அறியப்பெறுவதாகும்.

ஆதித்தசோழன் வந்து ராசாவேடர்களைச் செயம் பண்ணினது என்று ''கொங்கு தேசராசாக்கள்'' என்னும் நூல் குறிப்பது, அக் காலத்தில் கொங்கின் வடபகுதிகளில் வாழ்ந்திருந்த கொங்கின் பூர்வீகக் குடியினராகிய இருளர், காடர் போன்ற வனவாசிகளின் தலைவர்களை வென்றுள்ளமையினைக் குறிக்கின்றது. இவ் வேடர்கள் பூவலியர், மாவலியர் காவலியர், வேட்டுவர், வேடர் என்ற பஞ்சவருணவாளரச வகுப்பினர் என்று கொங்கு மண்டலச் சதகம் கூறும்.

## கல்வெட்டில்-கோவன்புத்தூர்

கொங்கு நாட்டின் நிலவளம் மழை குன்றிய நிலப்பரப்புடையதாகக் குன்றுகளும் காடுகறம்புகளும் நிறைந்திருந்தது. பழங் காலத்தில் இந்நாட்டில் இருளர் என்ற பழங்குடிமக்கள் கோவன், காடன், கோத்தன், கேத்தன், சீயன், போத்தன், போயன், மாச்சன், மாயன், மாடன், இருளன், வீரன், வாடன் என்ற பிரிவினராக வாழ்ந்திருந்தனர்.

இவர்களுள், கோவன்குடி பெருகிநின்ற இடத்தில், காடழித்துக் குடியிருப்பாகத் திருத்திய ஊர் புத்தூர் எனப்பட்டது. தலைவனாக இருந்த கோவன் என்னும் பெயரினன் தன்பெயர் நிலவ, 'கோவன்புத்தூர்' என்று பெயரிட்டுள்ளான்.[8]

கொங்கு நாட்டில் புத்தூர் என்ற பெயரமைந்த ஊர்கள் பல இருப்பதனை, காட்டுப்புத்தூர், காங்கேயன்புத்தூர், சீரநாயக்கன் புத்தூர், பாப்பாநாயக்கன்புதூர் என்பனவற்றால் அறியலாகும்.

பண்டைய இருளர் குடிப்பிரிவின் தலைவர்கள் தங்கள் பெயரால் கொங்கில் உண்டாக்கிய ஊர்கள் போத்தனூர், கேத்தனூர், மாச்சனூர், குள்ளனூர், கருப்பனூர், மாயனூர் என்னும் பெயர்கள் மாறாமல் இன்றும் கொங்கில் இருப்பதைக் கொண்டு, கோவன் பெயர் அமைத்த புத்தூர் கோவன்புத்தூர் என்ற பெயருடன் நிலவி கோயம்புத்தூரென்று திரிந்துள்ளது என்பதாம். கோயமுத்தூர் என்று குறித்த செய்திகளும் உண்டு.

"கொங்கு மண்டலத்துப் பேரூர் நாட்டு கோவன் புத்தூரான வீரகேரள நல்லூர்" என்பது பேரூர் கல்வெட்டு தரும் செய்தியாகும்.[9]

## கோனியம்மன்

புத்தூரைத் தன் பெயரால் ஆக்கிய கோவன் என்னும் இருளர் தலைவன் வாழ்ந்திருந்த காலம் கி. பி. 11ஆம் நூற்றாண்டாகும். கோவன் தங்கள் குல தெய்வமாக விளங்கிய கோனியம்மனைத் தனது கோட்டையின் வடக்கு வாயில் காவல் தெய்வமாக நிறுவியுள்ளான்.

இவ்வம்மனின் பெயர்ப்பகுதி 'கோனி' என்று குறிப்பிடப்பட்டிருப்பதைச் சிந்திப்போமாயின், கொங்கு மண்டலத்துப் பூந்துறை நாட்டின் கீழ்கரை நாட்டிலுள்ள திருச்செங்கோட்டு மலைப் பாறையிலுள்ள கல்வெட்டுச் செய்தியால் ஒப்பிட்டறிய முடிகின்றது.[10]

## கல்வெட்டு

"ஸ்வஸ்திஸ்ரீ கோப்பரகேஸரிபன்மற்கு
செல்லா நின்றயாண்டு இருபத்தாறா
வது காடன்பூதி மாணிக்கன் மகள்
முண்டக்கோனை சாத்தி திருச்செங்
கோட்டு திருவாதிரை கணப்பெருமக்கள்
கைய்யில் வைத்த பொன் ஐங்கழஞ்சு."

என்பதாகும். இருளர் குடிப்பிரிவினருள், சோழர் பாண்டியரின் கீழ், காடன் குடியில் விளங்கிய தலைவன் நாட்டதிகாரியாகப் பூதி என்ற பட்டப் பெயருடன் இருந்துள்ளான். அவனுடைய மகள் கோனை என்ற சிறப்புப் பெயரான் குறிக்கப்பட்டுள்ளாள். இக்கல்வெட்டு, கொங்குசோழரின் கி. பி. 11 - ஆம் நூற்றாண்டுக்குரியதாகும்.

கோன் என்பது அரசியல்வழி ஆண்களின் சிறப்புப் பெயராதலைப் போன்று, காடர் குலத்தில் உயர்ந்தாரின் பெண்களுக்குக் கோனை என்ற பெயர் கூறப்பட்டுள்ளது.

இச்சிறப்புப் பெயராலேயே பண்டைய இருளரின் தெய்வமாக விளங்கிய கோனையம்மனை, கோவன் தனது கோட்டைக்காவல்

தெய்வமாக நிறுவியுள்ளான். அப்பெயர் கால வழக்கில் கோனியம்மன் என்று திரிந்துள்ளது என்று கருதலாகும்.

### பேரூரில் திருமால் பெருங்கோயில்

கொங்குநாட்டுக் காஞ்சிவாய்ப் பேரூரென்று கல்வெட்டுகள் கூறும் பேரூர், கி. பி. 8, 9-ஆம் நூற்றாண்டில் பேரூர் நாட்டில் பேரூர் நகரமாக விளங்கியது. அக்காலத்தில் பாண்டிய மன்னர்கள், கொங்குநாட்டைக் கைப்பற்றி ஆட்சி செய்துள்ளனர். அவருள் மாறன் சடையன் என்று கல்வெட்டுகள் குறிப்பிடும் நெடுஞ்சடையன் பராந்தகன் (கி. பி. 765 - 790) பரமவைணவனாகத் திகழ்ந்தவன்.

இம்மன்னன் பேரூர் நாட்டைக் கைப்பற்றி ஆட்சி நிறுவிய காலத்தில், பேரூரில் திருமாலுக்கு பெரிய அமைப்பில் பெருங்கோயில் கற்றளியாகச் செய்து நிவந்தங்களும் செய்துள்ளான். இச்செய்தியினைச் சீவரமங்கலச் செப்பேட்டில்

''காஞ்சிவாய்ப் பேரூர்புக்குத் திருமாலுக்
கமர்ந்துறையக் குன்றமன்னதோர்
கோயிலாக்கியும்''

என்ற செய்தி அறிவிக்கின்றது''. [11] குன்று போல் உயர்ந்திருந்த அப்பெருங்கோயில் இன்றில்லை. திருமகளுடன் விளங்கிய ஸ்ரீ இலட்சுமி நாராயணர் திருமேனிகள், பேரூர் திருக்குளக்கரையில் தனித்திருந்து, பின்னர்சிவன் கோயில் திருச்சுற்றில் இடம் பெற்றுள்ளன.

இப் பெருங்கோயில், ஹொய்சள வீரவல்லாளன் ஆட்சிக் காலத்திலும் (கி. பி. 1290-97) பேரூரில் விளங்கி இருக்கவேண்டுமென்பதனை கல்வெட்டொன்றில்,

''ஸ்ரீ இலட்சுமி நாராயணப்பெருமாள் திடைவிடை
யாட்டத்துக்குத் தெற்கு''

என்னும் இறையிலி நிலவெல்லைக் குறிப்பால் அறியமுடிகின்றது.[12] திருமால் கோயில்களுக்கு இறையிலியாக அளிக்கபெறும் நிலம் திருவிடையாட்டம் என்று பெயர் பெறும்.

### கொங்கில்-வஞ்சி

கொங்கு நாட்டில் ''வஞ்சி'' என்னும் சேரர் தலைநகரின் சிறப்புப் பெயரோடு கூடிய நாடு, நகரம், ஊர் ஆகியவைகளின் பெயர்கள் சேரர் ஆட்சியின்போது அமைக்கப்பட்டுள்ளன.

நாடு : கொங்கு வடகரை நாட்டில் பருகூர் மலையை உடைய தாக வஞ்சிநாடு இருந்தது.

நகரம் : கொங்கின் தலைநகரமாக இருந்த கருவூர் வஞ்சி மாநகரம் முடிவழங்கு சோழபுரம் என்று பாண்டியர் ஆட்சியில் பெயர் பெற்றுளது ஆயினும், சேரர் ஆட்சியில் 'கருவூர் வஞ்சி' என்று பெயர் பெற்றிருந்தது.

ஊர் : ''கொங்கு வஞ்சி லாடபுரம்'' இவ்வூர் வஞ்சி நாட்டில் உள்ளது. இவ்வூரில் சேர மன்னர் நிறுவிய பகவதியம்மன் 'வஞ்சியம்மன்' என்று பெயர் பெற்றுள்ளதனை அறிய முடிகின்றது. பழமையான லாடபுரமே, சோழராட்சி யில் ராசராசபுரமாகி, நாயக்கர் ஆட்சியில் தாராபுர மாகத் திரிந்துள்ளதனைக் கல்வெட்டுகள் உணர்த்து கின்றன. இத்தாராபுரமே சங்ககால்த் தகடூராகும்.

### தாராமங்கலம்-கட்டி முதலிகள்

கொங்கு நாட்டுக் கல்வெட்டுகளில் கட்டி முதலிகள் என்ற குறுநில மன்னர்களின் கல்வெட்டுகளும் கிடைத்துள்ளன. கட்டி மரபினர் சங்ககாலத்திலிருந்து புகழ் பெற்ற மரபினராவர். இவர்கள் வடகொங்கில் இடம் பெற்றிருந்த கன்னட நாட்டின் தென்பகுதி யினை ஆண்டுள்ளனர். இவர்களின் நாடு 'புன்னநாடு' என்பதும், தலைநகரம் 'கட்டூர்' என்பதும் கல்வெட்டுகளால் அறியப்பெறு வதாகும்.

இவர்கள் கங்கமரபினர் என்பதனை, 'துன்னருங் கடுந்திறல் கங்கன் கட்டி' என்று அகநானூறு புலப்படுத்துகின்றது.[13]

கட்டிமரபினர், கி. பி. 9-ஆம் நூற்றாண்டு முதலாக, கொங்கு வடகரை நாடு, வடபூவாணிய நாடு, பூந்துறை கீழ்கரைநாடு, கீழ்கரை நாடு ஆகிய பகுதிகளைச் சோழ மன்னர் ஆட்சியின் கீழிருந்து காவல் செய்துள்ளனர் என்பதனை பவானி, கொடுமுடி, திருச்செங்கோடு, தாராபுரம், தாராமங்கலம் ஆகிய இடங்களி லுள்ள கல்வெட்டுகளால் அறியமுடிகின்றது.

பூவாணியநாடு, கங்க நாட்டின் தென் பகுதியுடன் நிகிவிய பரப்பாகும். முதல் ஆதித்தன் இப்பகுதியினை வெற்றி கொண்டு நட்புரிமையுடன் ஆண்டமையினை வரலாறு கூறும்.[14]

கொங்குச் சோழர்காலக் கட்டி மன்னர்களின் தலைநகரம் சேலம் மாவட்டத்திலுள்ள தாரமங்கலமாகும். இப்பெயர் முன்னர் சூரமங்கலமாக இருந்தது. சோழர் ஆட்சியில் வீரசோழபுரம் என்றாகிய நிலையில், நாயக்கர் ஆட்சியில் கட்டி முதலிகள் தாம் கட்டிய கைலாசமுடைய ஈசுவரர் கோயிலுக்கு ஊரை தாராபூர்வ தேவதானமாகக் கொடுத்ததால் தாராமங்கலம் என்ற பெயரால் விளங்கிய நிலையில் காலவழக்கில் தாரமங்கலம் என்றாகியுளது. இவ்வூர், 'கொங்கில் வீரசோழ மண்டலத்தில் வடபூவாணிய நாட்டு தாரமங்கலம்' என்றும், 'கொங்காண வீரசோழ மண்டலத்து வடபூவாணிய நாட்டு தாரமங்கலம் என்றும் கல்வெட்டுகளில் குறிக்கப்படுகின்றது.[15]

## கல்வெட்டு

''ஸ்வஸ்திஸ்ரீ கோற்சடைபன்மரான திரிபுவனச்
சக்கரவத்திகள் ஸ்ரீசுந்தர பாண்டிய தேவற்கு
யாண்டு பதினாலாவது-கொங்கான வீர
சோழ மண்டலத்து பூவாணியனாட்டு
நாட்டவரோம்
இன்னாட்டு தாராமங்கலத்து முதலிகளில்
நீருணி இளையான் நல்ல உடையப்பர்
தங்கள் முதலியார் பேரால் வைக்கிய இளைய
பெருமாள் அகரம்''

இக்கல்வெட்டு கி. பி. 1265-ல் தோன்றியதாகும். கட்டி மரபினர் கங்கவமி சத்தினராகவும், வேளாண் குடியினராகவும், முதலியார் என்ற பட்டமுடையவர்களாகவும், கன்னட மொழி பேசுபவராகவும் இருந்துள்ளனர்.

கட்டிமுதலிகள் பெற்றிருந்த சிறப்புரிமை, விருதுகள், கொடி இலச்சினை ஆகியவற்றைக் கல்வெட்டுகள் குறிப்பிடுகின்றன.

## கல்வெட்டு

''கொங்கான வீரசோழமண்டலத்து வட
பூவாணிய நாட்டுத் தாரமங்கலம் வெள்ளாழர்
நிலங்கிழார் மத்ஸகுடோரி மகுடசூடாமணி
வண்ணத்தடுக்கும் வாடாமாலையும் புலிக்
கொடியும் உள்ள வணங்காமுடி முதலியார்

நல்லுடையப்பர் கோட்டை முதலியார்
இம்மடி கட்டி முதலியார்-''

என தாரமங்கலம் கல்வெட்டு அறிவிப்பதைக்கொண்டு, இவர்களின் விருதுகளும், புலிக்கொடியும் அறியப்பெறுவதுடன் வணங்காமுடி என்ற தனிச் சிறப்புப் பெயரும் கோட்டை முதலியார் என்ற உயர்நிலையும், இம்மடி கட்டி என்ற மரபுப் பெயரும் அறியப் பெறுகின்றன.[16]

## கல்வெட்டு

''மன்னர் வணங்கினும் வணங்காமுடியான்
முதலியார் நல்லுடையப்பர் வண்ணமுதலியார்
இம்மடி இளம் நயினாமுதலியார் என்னுடைய
தான தாரமங்கலத்தில் நல்பள்ளியான திருத்
தோன்றி பட்டியை அப்பேர் மாற்றி இளம்
சமுதத்திரம் என்னும் பேர் நாட்டி உடையார்
கைலாசமுடைய நயினார்க்கும் இராமீசுர
முடைய நயினார்க்கும் இறையிலிதேவ
தானமாக விட்டு தன்ம சாதனமாகக்
குடுத்தோம்.''

இவ்விரண்டு தாரமங்கலக் கல்வெட்டுகளும் கி. பி. 1541-ல் ஏற்பட்டுள்ளன. வணங்காமுடியின் சிறப்பும், தாரமங்கல உரிமையும், தானச்சிறப்பும் இரண்டாவது கல்வெட்டால் அறியப்பெறும்.

## கட்டி மன்னர்-கொடி இலச்சினை

கட்டி மரபில் வந்த மன்னர்கள் தங்களுக்குப் புலி இலச்சினையுள்ள கொடியினை உடையவராக இருந்துள்ளதைனைக் கல்வெட்டுகள் கூறினாலும்,

தாராமங்கலம் திருக்குளமேல்கரைப் படிகட்டின் தென் புறச் சுவர்க்கட்டில் உள்ள கல்வெட்டுடன் கூடிய சிற்ப இலச்சினையாலும், இவர்கள் சேர சோழ பாண்டியராகிய மூவேந்தர் ஆட்சியின் கீழ், வழிவழியினராக நட்புறவுடன் வந்த குறுநில மன்னர்கள் என்பதனை அறிய முடிகின்றது.

சிற்பக் கொடிச்சின்னத்தில், சோழ மன்னருக்குரிய சிறுத்தைப் புலி, வடிவில் ஆண் பெண் வேற்றுடையுடையதாகப் பாண்டிய

மன்னர்கள் கொடியில் கொண்டிருந்த இணைகயல்கள், சேரரின் நாண்பூட்டிய வில் உருவம், ஆகியவற்றுடன், நடுவே தோற்ற முடைய வடிவில் 56 கட்டங்கள் முறையே (7x8 = 56) பெற்றொளிரும் பொற்கட்டி இலச்சினை ஆகிய வடிவங்கள் பொருந்திய கொடியாக அமைந்திருப்பதனைப் படத்தில் காணலாம். 56 - தேசத்தாராலும் இவர்கள் பெற்றிருந்த மூலதனமாகும் பொற்கட்டி புகழ்ப்பெற்ற தாகக் கொள்ளத் தகும் தோற்றத்தில் சதுரக் கட்டி உருவம் அமைந்திருப்பது குறிப்பிடத்தக்கதாகும். பொற்கட்டி முதலிகளாகத் திகழ்ந்தமையினாலேயே 'கட்டி முதலிகள்' என்ற சிறப்புப் பெய ரால் குறிக்கப் பெற்றனரெனக் கருத முடிகின்றது.



தாரமங்கலம் கட்டி முதலி மன்னர்கள் ஆட்சி இலட்சினை

## கொங்கில் கம்மாளர் உரிமைகள்

கொங்கு நாட்டின் தலைமை நகரமான வீரசோழமண்டலத்து வெங்கல நாட்டு கருவூர் திருவானிலை ஈசுவரமுடையார் கோயி லுள்ள கல்வெட்டொன்றில், கொங்கு மண்டலத்திலிருந்த கம்மாளர்க்கு, திரிபுவனச் சக்கரவர்த்திகள் கோனேரின்மை கொண்டான் ஆட்சியாண்டு பதினைந்தில் சமுதாய உரிமைகள் சில கொடுக்கப்பட்டுள்ளதைக் குறிப்பிடப்பட்டுள்ளது. அவை,

தென் கொங்கில் வாழ்ந்த கம்மாளர்க்கு அமையும் நன்மை தீமைகட்கு இரட்டைச் சங்கு ஊதிப்பேரிகையுள்ளிட்டன கொட்டு வித்துக்கொள்ளவும், செல்லுமிடங்கட்கு பாதரக்ஷை அணிந்து செல்லவும், தங்கள் வீடுகட்குச் சாந்திட்டுக் கொள்ளவும் அரசன் அனுமதியளித்துச் சாசனம் செய்து கொடுத்துள்ளான்.

இவ்வாறு, கோனேரின்மை கொண்டான் என்ற மன்னனுடைய ஆட்சியில் கொங்கு நாட்டிலிருந்த கம்மாளர்க்கு அனுமதியளிக்கப் பெற்ற உரிமைகள் முன்னர் வழக்கில் இருந்திலது என்று கருதமுடிகின்றது.

அரசின் ஆணையின்படியே, அக்காலக் கம்மாளர்கள், தங்கள் சமூகத்தினராகிய பொற்கொல்லர், கருமான், கல்சிற்பி, தச்சன், கன்னான் ஆகிய பஞ்ச கம்மாளர்கள் மிகுதியாக வாழ்ந்திருந்த பேரூர், பாரியூர், மொடக்கூர், குடிமங்கலம் ஆகிய ஊர்களிலுள்ள திருக்கோயில்களில் இக்கல்வெட்டினை சாசனவாசகம் பிழையாமல் பொறித்து வைத்துள்ளனர்.

கல்வெட்டு

ஸ்வஸ்திஸ்ரீ திரிபுவனச் சக்கரவர்த்தி கோனேரிமேல் கொண்டான் தெந்கொங்கில் கண்மாளர்க்கு தங்களுக்கு பதினைஞ்சாவது ஆடிமாதம் முதல் நன்மை திந்மைக்கு, இரட்டைச்சங்கும் ஊதிப் பேரிகையுள்ளிட்டன கொட்டி வித்துக் கொள்ளவும், தாங்கள் புறப்பட வேண்டும் இடங்களுக்கு பாதரக்ஷை கோத்துக் கொள்ளவும், தங்கள் வீடுகளுக்கு சாந்திட்டுக் கொள்ளவும் சொன்னோம். இப்படிக்கு நம்மோலை பிடிபாடாகக் கொண்டு சந்திராதித்தவரை செல்வதாகத் தங்களுக்கு வேண்டும் இடங்களிலே கல்லிலும் செம்பிலும் வெட்டிக் கொள்க.

இவை விழுப்பாதராயந் எழுத்து. யாண்டு யரு-ள் இவைக் கலிங்கராயந் எழுத்து உ

கி. பி. 1014 முதலாகச் சோழ நாட்டை ஆட்சி செய்த முதல் இராசேந்திர சோழனுடைய விருதுப் பெயர்களுளொன்றாகக் ''கோனேரின்மை கொண்டான்'' என்பதும் இருந்துள்ளமையினைக் கரந்தைச் செப்பேடுகள் காட்டுகின்றன. ஆயினும், இக்கல்வெட்டுக்

குரிய 'கோனேரி மேல் கொண்டான்' என்ற பட்டப் பெயரை வழ்ங்கிக் கொண்ட கொங்குச் சோழர்கள் காலத்தில் எழுந்த கல்வெட்டுகள் கொங்கு நாட்டில் அறுபதுக்கும் மேல் கிடைத்துள்ளன.

இப்பட்டம் புனைந்து கொண்ட மன்னர்கள் சோழப்பேரரசர்களின் வழித்தோன்றல்களாக விருதும் பட்டமும் முடியும் பெற்றுக் கொங்கு நாட்டாட்சியைப் பெற்று, வழிவழியாக வந்தவர்களாதலின் ஆராய்ச்சியாளர் கொங்குச் சோழரென இவர்களை குறிப்பராயினர்.

இவர்கள் கொங்கு நாட்டில் பலபிரிவினராக இருந்து ஆட்சி செய்த காலம் கி. பி. 1050-1258 எனலாம்.

எனவே, இக்கல்வெட்டின் சொல்லமைதி, எழுத்து நிலை ஆகியவற்றைக் கொண்டு, கொங்குக் கம்மாளர் சமுதாய உரிமைச் சாசனம் கி. பி. 12-ம் நூற்றாண்டில் தோன்றியுள்ளதென்று கூறலாகும்.

## கொங்கில்-வீரமானியம்

கீழ்கொங்கு நாட்டின் உட்பிரிவு வையாபுரி நாடாகும். வையாபுரி நாடு பழநித்தலத்தினைக் கொண்ட பகுதியாகும். இன்று மதுரை மாவட்டத்தில் பழநி வட்டமாக உள்ளது.

இவ்வட்டத்தில் ஓடும் அமராவதி ஆற்றுக்குச் செல்லும் வழியிலுள்ள அத்திமரத்து வலசைக்கு வடபுறம் திருமலைநாதர் கோயிலுக்கு அருகிலுள்ள கல்தூணில் இக்கல்வெட்டு பொறிக்கப்பட்டுள்ளது.

## கல்வெட்டு

''ஸ்வஸ்திஸ்ரீமன் மஉறாமண்டலேசுவரன் அரியராயர் விபாடரான ஸ்ரீமன் அச்சுதராயர் காரியத்துக்குக் கடவரான வரதப்ப சிவாதட வண்ணகள் ஊழியத்து வீரவிற்குலதீபன் தேமாசையன் கொங்கு மண்டலத்து நரையனூர் நாட்டு ராசராசபுரத்திலிருந்து இராச்சியம் பண்ணுகையில்,

சென்ற கலியுக சகாப்தம் 4643-க்கு மேல் பிலவவருஷம் கார்த்திகை மாதம் 10 தேதி மேற்படியூரில் தளவா கொப்பைய நாயக்கர் யனுபவிக்க, நாயக்கர்க்கு இரத்தக்கோடகை சறுவ மானியங் கொடுத்த பரிசாவது

இற்றைநாள், இவருடைய சிறிய தகப்பன் மல்லையதேவனார் நீலகிரி மலையிற் துட்ட நிக்கிரகம் பண்ணுவதற்கு நாம் அனுப் புகையில், அவன் வினை முகத்தேறி யுத்தம் செய்து, சமர்பூமியில் மரணமகையினாலே, இவற்கு நாம் கற்போடக் கொடுத்தது, தென்பொங்கலூர் நாட்டு அலங்கயப் பள்ளி - தலைவயல் இருபது மா நிலம்''.

### செய்தி

கொங்கு நாட்டில் இராசராசபுரம் என்னும் தாராபுரத்தில் அச்சுதராயர் ஆட்சி செலுத்துகையில் அவ்வூரில் தளவாயாகவும் நாட்டதிகாரியாகவும் இருந்த கொப்பைய நாயக்கரின் சிறிய தகப்பனார் மல்லைய தேவனாரை நீலகிரி மலையில் இருந்து அரசுக்குத் துன்பம் செய்த பகைவரைப் போரிட்டு அழிப்பதற்கு அனுப்பியுள்ளார்.

படையுடன் சென்ற வீரன் மல்லையதேவனார், நீலகிரி மலையில் பகைவரின் முன்தாக்குததலை முறியடித்து முன்னேறிய மலையிடத்துப் போரிடுகையில், களத்தில் வீரமரணம் அடைந்துள்ளார்.

மல்லைய தேவனாரின் வீரச்செயலை மெச்சிய ராயர், அவருக்குச் செய்யும் நினைவாக நடுகல்தூண் நாட்டி, அவருக்கு மகன் முறைமையாரான தளவாய் கொப்பைய நாயக்கருக்கு சர்வ மானியமாக இருபது மாநிலம், 'இரத்தக்கோடகை' என்னும் பெயரால் அளித்து,

அந்நிலத்திற்கு எல்லைக் கற்கள் நாட்டி, சாசனத்தில் சாட் சியங்கள் செய்யச் செய்து, வீரமானியத்திற்கு அழிவு வராமல் காப்புரையும் செய்து, நடு கற்றூணின் நான்கு முகப்பிலும் சாசனத்தினை வெட்டச் செய்துள்ளார்.

இக்காலம் கி. பி. 1542-ஆகும்.

### கொங்கில் ஊரும் - பேரும்

ஈரோடு (ஈரோடை) : இவ்வூர், கொங்குச் சோழ பாண்டியர் கல்வெட்டுகளில், ''பூந்துறை நாட்டுக் காஞ்சித் துண்டத்து ஈரோடு'' என்றும்,[19] ஈரோடான மூவேந்திர சோழச் சதுர்வேதிமங்கலம்'' [20] என்றும் கூறப்பட்டுள்ளது.

'ஈரோடான' என்பதால் ஊரின் பழைய பெயர் வடிவினை ஆராயலாகும்.

காவிரியாற்றின் மேல்கரைப் பகுதியில், மேல் பூந்துறை நாட்டில் ஈரோடு உள்ளது. இவ்வூரினைச் சார்ந்து பேரோடை, சித்தோடை என்ற ஊர்கள் உள்ளன.

காவிரியினின்றும் பிரிக்கப்பட்ட பெருங்கால் வாயும் அதன் கிளைக்காலும் இவ்விரண்டு ஊர்களின் நிலவளத்திற்கு அமைந்திருந்தன. பெருங் கால்வாயினால் பாசன நீர் பெற்ற ஊர்-பேரோடை என்றும், சிறிய கால்வாயினால் பாசன நீர் பெற்ற ஊர் - சித்தோடை என்றும் பெயர் பெற்றன. இவை இரண்டு கால்வாய்களும் பழைய கொங்கு நாட்டு வழக்கின்படி ஓடை என்ற பெயரால் குறிக்கப்பட்டன.

இவ்விரண்டு ஓடைகளாலும் நீர்ப்பாசனம் பெற்றதாக இடையே சார்ந்திருந்த ஊர் 'ஈரோடை' என்று அன்று பெயர் பெற்றுளது. அப்பெயர் மருவி ஈரோடு என்றாகியுள்ளது.

2. திருச்செங்கோடு : செங்குத்தான சிகரத்தினை உடைய குன்றமைந்த ஊராதலின் தேவார ஆசிரியர்கள் செங்குன்றூர் என்று குறித்தனர். இதனை, ''கொங்கு மண்டலத்து பூந்துறை கீழ்கரை நாட்டு திருச்செங்கோடு'' என்று கல்வெட்டுகள் கூறுகின்றன.

3. தகடூர் (தாராபுரம்) : சங்ககாலப்பழமை உடையதும், வலிய கோட்டையால் சூழப் பட்டிருந்ததுமான ஊர். அதியமான் போன்ற வேளிர் குலமன்னர்களின் இருப்பிடம். இதனை

''நிகரிலிசோழ மண்டலத்து கங்க
நாட்டுத் தகடூர் நாட்டுத் தகடூர்''

என்று கல்வெட்டுகள் சுட்டுகின்றன.

4. தாரமங்கலம் : கொங்கில் சங்ககாலம் முதலாக ''கங்கன் கட்டி' என்ற விருதுப் பெயருடன் ஆட்சி செய்த குறுநில மன்னரின் பிற்கால உரிமை ஊர். ''கொங்கான வீரசோழ மண்டலத்து வட பூவாணிய நாட்டுத் தாரமங்கலம்'' என்று கல்வெட்டுகள் குறிக்கும்.

5. சேலம் : இவ்வூர் ''வீரசோழ மண்டலத்து சேலநாட்டுச்

சேலமான இராஜஸ்ரயகதுர்வேதிமங்கலம்'' ''என்றும் மேலை செம்பறக்கை நாட்டு அகரம்'' என்றும் குறிப்பிடப்பட்டுளது.[21]

6. காவேரிப்பட்டணம் : சேலநாடான உத்தமசோழபுரமான காவேரிப்பட்டணம்''.

(உள்நாட்டில், காவிரியின் கரையில் உள்ள வணிகம் நிறைந்த ஊர் பட்டிணமாகும்)

7. நீலகிரி : ''உடுவக்காநாட்டு நீலகிரி சாதாரன் கோட்டை'' என்பது கல்வெட்டு.

8. பல்லடம் : ''வாயறைக்கால் நாட்டு பல்லோடமான அதிராசநல்லூர்'' என்றும், 'வாய்ரைக்கால் நாட்டு பல்லவிடம்' என்றும் கல்வெட்டுகள் குறிக்கின்றன.[22]

(சூழ்ந்த நாடுகளின் எல்லைக் கட்டிடங்களில் பலவாறு இடம் பெற்றுருவான ஊர் எனலாம்)

9. கொளஞ்சிவாடி : ''காங்கேய நாட்டு நரையனூர் நாட்டு காங்கேயர் உடையபிராட்டிச் சதுர்வேதிமங்கலம்'' பிற் காலத்தில் கொளஞ்சிவாடி என்று பெயர் பெற்றுள்ளது.

10. சேவூர் : ''கொங்கு வடபாரிச நாட்டு சேவூர்'' (சேவூர்) செவலை என்ற உயர் இனப்பசுவினம் பெருகி நின்றவூராக இப்பெயர் பெற்றது போலும்!

11. பருத்திப்பள்ளி : கீழ்கரை பூந்துறை நாட்டு எழுகரை நாட்டிலுள்ள ஊர். சமணர் கொங்கில் வாழ்ந்த இடங்களில் ஒன்றாகும்.

## கொங்கு-பூவாணிய நாட்டு வேளாண்மையும்-வணிகமும்

பூவாணிய நாடு ஆற்றுப்பாசனமும் பொருந்திய தாரமங்கலம் கட்டி முதலிகளுடைய நிலைத்த இருப்பிடமாகவும் இருந்துளது. இந்நாட்டின் நீர்வளம் பெரும்பான்மையும் ஏரிப் பாசனமாகவே இருந்துளது. இந்நாட்டு ஏரிகள் :

காரைக்குளம், பெருமாளேரி, காமிண்டன் ஏரி, கஞ்ச மலைய நாயனார் ஏரி, கண்ணந்தை ஏரி, தண்டுநாயக்கன் ஏரி, பொய் கரை ஏரி, களக்குளம் ஏரி, சேம்ப்பள்ளி ஏரி-என்பனவாம்.

நன்செய்பயிர்கள் : கார்-(குறுவை) பசானம்-(சம்பா) ஒரு பூ-(ஒருபோகம்) மறு-(தளாடி) வம்பு-(விதைப் புப்பயிர்) கடைப்பூ-(சித்திரைக் குறுவை) என்னும் நெற்பயிர் வகைகளாகும்.

தோட்டப்பயிர் : கமுகு, தெங்கு, வாழை, கொழுந்து (மருக் கொழுந்து) மஞ்சள், இஞ்சி, கருணை, கரும்பு எனபனவாம்.

பயன் மரங்கள் : மா, பலா, இலுப்பை, புளிஆகிய மரங்கள்.

புன்செய் பயிர்கள் : புல், வரகு, திணை, சாமை, இறுங்கு-(சோளம்) ஆவணக்கு, பருப்பு-(மொச்சை) வகுதினை, பூசணி, எள்ளு, கொள்ளு, பயிறு, அவரை, துவரை-என்பனவாகும்.

வணிகப் பொருள்கள் : புடவை, பாக்கு, மிளகு, கால்நடை, எள்ளு, பருத்தி, நூல், பஞ்சு பருத்தி, ஆவணக்கு முத்து, உணவுப் பொருள் வகைகளாகிய தவசங்கள்-என்னும் பொருள் களாகும்.

வணிக மதிப்பீட்டு நாணயங்கள் : பொன், அச்சு, ஆனை அச்சு ஸ்ரீ இயக்கி சலாகை, பணம், காசு, மாபொன்-முதலிய நாணயங்களாம்.

இவை, பூவாணிய நாட்டுக் கல்வெட்டுகவால் அறியப் பெறுவன வாகும்.

---

## சான்றுக்குறிப்பு


1. திருத்தொண்டர் திருவந்தாதி பாடல்-65
2. புதுக்கோட்டைக் கல்வெட்டுகள்
3. பெரியபுராணம்- இடங்கழி நாயனார்-பா-3
4. Ep. Reports - 147, 148/1910
5. கொங்கு தேசராசாக்கள், The Cholas Vol I. P. 138
6. பிற்காலச் சோழர் சரித்திரம்-பக்-29
7. தெ. கல். தொகுதி-3, கல்-89
8. திரு. C. M. இராமச்சந்திரன் செட்டியார் "பேரூர் சரித்திரம்"
9. A. R. No. 554, 565/1893
10. திருச்செங்கோடு-கல்வெட்டு *
11. Indian Antiquary Vol XXII. P-69-75
12. A. R.No. 566/1893
13. அகநானூறு, பா-44
14. பிற்காலச் சோழர் சரித்திரம், பக்-28
15. தாரமங்கலம் கல்வெட்டு *
16. A R. No. 23/1900
17. தாரமங்கலம் கல்வெட்டு *
18. கருவூர் திருவானிலை-கல்வெட்டு *
19. A. R. No. 13/1891
20. ஈரோடு அரங்கநாதர் கோயில் கல்வெட்டு *
21. A. R. No. 56/1888
22. A. R. No. 572/1892

* ஆசிரியரால் படியெடுக்கப் பெற்ற கல்வெட்டுகள்

# 2. கொங்கு நாட்டுச் செப்பேடுகள்

புலவர் செ. இராசு
கல்வெட்டியல்துறை
தமிழ்ப் பல்கலைக் கழகம்
தஞ்சாவூர்- 613 005

பல்லவர், பாண்டியர், சோழர், தஞ்சை மராட்டியர் செப்பேடுகள் பெரும்பாலும் புதுப்பிக்கப்பெற்றுள்ளன. ஆனால் சேரர், விசய நகர மன்னர், நாயக்கர், சேதுபதி, தொண்டைமான், மைசூர் அரசர் ஆகியோரின் செப்பேடுகள் இன்னும் பல புதுப்பிக்கவில்லை.[1] குறிப்பாக இவற்றில் காணப்படும் கொங்கு நாட்டுச் செப்பேடுகளில் பெரும்பகுதி இன்னும் வெளிவரவில்லை.

## கங்கர் செப்பேடு

தஜைக்காட்டுக் கங்க மன்னர் செப்பேடு ஒன்று பேரூரில் இருந்த சமணப் பள்ளியைக் குறிக்கிறது. பேரூர் உள்ளிட்ட தமிழ் நாட்டு ஊர்ப் பெயர்கள் சிலவற்றைக் கூறும் அவ்வடமொழிச் செப்பேடு கி. பி. ஆறாம் நூற்றாண்டிற்குரியதாகும்.[2] கொங்கு நாட்டுச் செப்பேடுகளில் இப்பேரூர்ச் செப்பேடே தொன்மை வாய்ந்ததாகும்.

## சேரர் செப்பேடுகள்

கி. பி. 13 ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த சேர மன்னர் கல்வெட்டுகள் கொங்கு நாட்டில் கிடைக்கின்றன.[3] சில செப்பேடுகளும் அண்மையில் கிடைத்துள்ளன.

(அ) பூந்துறைச் செப்பேடு : ஈரோடு வட்டம் பூந்துறை புட்பவனநாதர் கோயில் திருப்பணியின் போது சுவரில் பதிக்கப் பெற்றிருந்த பானையின் உள் இச்செப்பேடு கிடைத்தது.[4]

கோ ரவி கோதை தன் இரண்டாம் ஆட்சியாண்டில் ஈரோடு அபிஷேக விண்ணகரம் பெருமாள் கோயிலில் அபிஷேகம் செய்து கொண்டான். அதன் நினைவாக உசாவூர் என்ற திருவாழி மங்கலத்தை மானியமாக அளித்த செய்தி இச் செப்பேட்டில் கூறப்படுகிறது. இத்திருவாழி மங்கலம் திருச்செங்கோடு வட்டத்தில்

இருக்கும் கொக்கராயன் பேட்டை ஆன திருவகழிமங்கலமாக இருக்கலாம்.[5]

இச்செப்பேடு தமிழ் எழுத்து, வடமொழி கிரந்த எழுத்துகளுடன் வட்டெழுத்தும் கலந்து எழுதப்பட்டுள்ளது.[6]

(ஆ) ஈரோட்டுச் செப்பேடு : ஈரோடு பள்ளி கொண்ட பெருமாள் கோயிலில் உடைந்த பாத்திரங்கள், சிதைந்த செப்புப் படிமங்களின் இடையில் இச்செப்பேடு கண்டுபிடிக்கப்பட்டது.[7]

கோ ரவி கோதை தன் 5 ஆம் ஆட்சியாண்டில் கருவூர்ச் சித்திரா கூடத்தில் ஏறி எழுந்தருளியிருக்கும் போது [8] நாடு கேட்ட வேம்பன், பொன்னன், நக்கன் முதலி, செல்லன் தேவன் ஆகியோருக்குப் பூந்துறை நாட்டு அனுமன்பள்ளியை அளித்த செய்தி தமிழில் உள்ள இக்குறைச் செப்பேட்டில் காணப்படுகிறது.

கோ ரவி கோதை கங்கைக்குலத்து மன், காவேரி வல்லவன் நந்தகிரி நாதன் என்று அழைக்கப் பெறுகின்றான். அவன் உழவை மேம்படுத்தியதும், கொங்கு நாட்டையும், மைசூர்ப் பகுதியையும் வென்ற செய்திகளும் இவற்றின் மூலம் புலப்படுகின்றன.

(இ) கொல்லிமலைச் செப்பேடு : ஏறத்தாழக் கி. பி. 10ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த 'பொன்மாடத்து ஆண்ட மணிமுடி மகாராசா' என்ற அரசனின் செப்பேடு ஒன்று கொல்லி மலையில் கண்டுபிடிக்கப்பட்டுள்ளது.[9]

இம்மன்னர் சேரமரபினரே என்று ஆய்வு செய்யப்பட்டுள்ளது.[10] இருப்பினும் இச் செப்பேட்டின் சரியான படி கிடைத்த பின்னரே இதனை உறுதியாக்க முடியும்.

கொல்லிமலை குச்சக நாட்டில் உள்ள கருங்கயம் என்ற ஊரை நாற்பாங்கிலும் சூழ்ந்துள்ள எல்லைகள் முழுவதும் இச்செப்பேட்டில் கூறப்படுகின்றன. 'கருங்கயம்' என்ற ஊர் இன்று கலிங்கம் என்ற பெயருடன் கொல்லிமலையில் வழங்கும் ஊராக இருக்கலாம்.

### சோழர் செப்பேடுகள்

சோழன் இராசகேசரியின் 5, 10 ஆம் ஆட்சியாண்டுக்குரிய இரண்டு செப்பேடுகள் திருச்செங்கோட்டில் கிடைத்தன. [11] அவை 'திருச்செங்கோட்டுச் செப்பேடுகள்' என அழைக்கப்பெறும். இச்

செப்பேடுகளில் குறிக்கப்பெறும் இராசகேசரி இரண்டாம் பராந்தக னாகிய சுந்தர சோழன் என்பது அறிஞர் கருத்தாகும். [12]

சங்க காலம் தொடங்கி இப்பகுதியில் வாழ்ந்து வரும் மழவர் [13] குடியைச் சேர்ந்த 'கொல்லி மழவன் ஒற்றியூரன் பிரதிகண்டவர்மன் சுந்தர சோழன்' சோழரின் கீழ் வாழ்ந்து ஈழ நாட்டுப் படை யெடுப்பில் இறந்த தன் தந்தையின் ஆவி குளிரும் பொருட்டுச் செய்த சில கொடைகளைப் பற்றியும், தூசியூர் திருமூலட்டான முடைய கற்றளிப் பரமேசுவரருக்கு அளித்த நிலக்கொடை பற்றியும் இச்செப்பேடுகளில் கூறப்படுகிறது.

தூசியூர் நகரத்தார் செலுத்த வேண்டிய மனை வரி பற்றிக் கூறியபின் குற்றம் புரிந்தவர்களுக்கு 'நந்திபுர மற்சாதியில்' தண்டனை கிடைக்கும் என்று கூறப்பட்டுள்ளது. [14] நந்திபுரம் என்பது சோழ நாட்டுப் பழைய தலைநகரான பழையாறை ஆகும். [15] அமணகுடி, பள்ளிச்சந்தம் ஆகிய தொடர்களால் திருச் செங்கோட்டுப் பகுதியில் அன்றிருந்த சமண சமயச் செல்வாக்கைக் காணுகின்றோம். கொடையாக எடுத்துக் கொள்ளப் பெற்ற பொது மக்களின் நிலத்துக்கு மாறாக வேறு நிலங்கள் அளிக்கப்பட்டுள்ளன. பெருவழி கூறப்பெறுவதுடன் 'கட்டிநாகன் கூவலிட்டேரி' என்ற சிறுவழியும் கூறப்படுகிறது. [16]

இச்செப்பேடுகளில் குறிக்கப் பெற்ற தூசியூர் நாமக்கல் வட்டத்தில் தூசூர் என்ற பெயரில் உள்ளது.

## மைசூர் மன்னர் செப்பேடுகள்

(அ) சாமராஜ உடையார் : வாரக்க நாட்டுக்கிணத்துக்கடவு பொன்மலை வேலாயுத சுவாமிக்கு அந்நாட்டு வணிகர் 1734ஆம் ஆண்டு மகமை அளித்தனர் என்று அக்கோயில் செப்பேடு கூறும். [17] அப்போது கோவைச் சீமைக்குக் குமார தேவப்பராயர் அதிகாரியாக இருந்தார். [18]

(ஆ) கிருஷ்ணராஜ உடையார் : இவர் காலத்தில் கோவைத் தலைவனாக விளங்கியவன் குறிக்கார மாதய்யன்,

'கோயம்முத்தூர் அட்டவணை கத்தாசாரம் சுங்கம்
பேரம் மகமை தேவஸ்த்தானம் முதலாகிய சகல
அதிகாரமும் செய்கின்ற ராசஸ்ரீ குறிக்கார
மாதய்யன் அவர்கள்'

என்பது செப்பேட்டுப் பகுதி.

மாதய்யன் கிணத்துக்கடவு வேலாயுத சுவாமிக்கு 1761 ஆம் ஆண்டு காட்டம்பாடியில் நிலம் அளித்தான் என ஒரு செப்பேடு கூறுகிறது. [19] மற்றொரு செப்பேட்டில் கோவை சங்கரய்யன் மனைவி லிங்கம்மாள் காசியில் கட்டிய அன்ன சத்திரத்திற்குக் கிருஷ்ண ராசப்பேட்டை, நெருஞ்சிப்பேட்டை, கொல்லங்கோடு, கொடுப்பேட்டை, பாலைக் காட்டுப் பேட்டை, பிலாப்பத்து, வண்ணார்க்காடு ஆகிய இடங்களில் உள்ளவணிகர்கள் 1765ஆம் ஆண்டு மகமை அளித்த செயல் கூறப்படுகிறது. [20]

கோயமுத்தூர்ச் செப்பேட்டில் செப்பேடு எழுதும் முறை கூறப் படுகிறது. கையெழுத்திட்ட பல பெயர்கள் மூலம் அக்காலத்திய கோவை நகர்ச் சமுதாய நிலை நன்கு புலப்படுகிறது. [20] அ

வணிகர்கள் ஏறுசாந்து இறங்கு சாத்து பாக்கு, மிளகு, அரக்கு, நீலம், பவத்து பலசரக்கு புகையிலை சவளி நூல் நெய் சீரகம் சந்தனப்பொதி கோதும்பை இவைகளின் பொதி ஒன்றுக்கு கெண்டி ராயன் பணம் ½ .

நவதானியம் வெற்றிலை வெல்லம் லவணம் சேகன்று முதலான கால் நடை ஒன்றுக்கு கெண்டி ராயன் பணம் மாகாணி.

கோவையில் மாதய்யன் பெயரில் அக்கிரகாரம் ஒன்று இருந்தது. [21]

கிருஷ்ணராய உடையார் காலத்தில் சங்ககிரி துர்க்கத்தில் அதிகாரம் செலுத்திய சஞ்சி வேட்டத்து ராசா அய்யன் ஆனைப்படி கீழ்க்கரைப் பூந்துறை நாட்டு நாட்டுக் கவுண்டர், காணியாளக் கவுண்டர் பின்னமிருக்கும் கவுண்டர்கள், குடியானபேர் தலத்துக் கணக்குப்பிள்ளை ஓபளி பாராபத்தியக்காரர், சேனைபாகர் ஆகியோர் ஊருக்கு 6 பொன் 5 பணம் திருச்செங்கோட்டுக்கு அளித் தனர் என்று திருச்செங்கோட்டுச் செப்பேடு கூறுகிறது. [22]

சாம்பள்ளி வெங்கடேச சாஸ்திரி முதலிய 7 அந்தணர்கட்கு 14845 ராஜகோபாலிகை சக்கரவராகன், வருவாயுடைய நிலம் கிரய பூதானமாக வாங்கி அளிக்கப்பட்து, சுரோத்திரியமாக 1070 வராகன் வருவாய் நிலம் அளிக்கப்பட்டது. இவற்றுக்கு முறையே $1484\frac{1}{2}$ வராகனும், 107 வராகனும் வரியாகும். பத்தில் ஒன்றே அந்தணரிடம் வரி வாங்கப்பெற்றது எனச் சாம்பள்ளிச்செப்பேடுகள் கூறுகின்றன. [23]

(இ) இம்மடி வீரராய உடையார் : குன்றத்தூர் வடசா வடிக்குச் செல்லா நின்ற வஞ்சி நாட்டுக் காவேரிபுரம் சீமையில் உள்ள வனவாசி சோமேசுவரருக்கு 1775 ஆம் ஆண்டு நிலம் அளிக்கப்பெற்ற செய்தி வனவாசிச் செப்பேட்டில் கூறப் படுகிறது. [24]

## பழனிமலைச் செப்பேடுகள்

(அ) திருமலை நாயக்கன் (1623-1659) : இவர் காலத்தில் தெற்குமடச் சிவாலயம் பழனியில் கட்டப்பட்டது. இதற்கு இரகுநாத சேதுபதி என்ற திருமலை சேதுபதி நிலம் அளித்துள்ளார். பழனி சீமை அதிபன் சின்னோப நாயக்கன், தேவராச பண்டிதர், பாவிபத்திர உடையார், பெரிய விருமயண பிள்ளை, பழனிக் கவுண்டர் ஆகியோர் பூசைக்குக் கொடை அளித்துள்ளனர்.

நாயக்கர் சீமையில் 64 கிரி துர்க்கம், 56 வன துர்க்கம், 36 சலதுர்க்கம் ஆக 156 கோட்டைகள் கூறப்படுகின்றன. [25] 'தனது ரட்சியமாகிய கொங்கு மண்டலம் நரையனூர் நாடு வஞ்சி லாடபுர சீர்மையில் வையாபுரி நாட்டில் பழனிமலை வேலாயுத சுவாமியார்" என்றும், 'பழனி அப்பன்' என்றும் இச் செப்பேட்டில் கூறப் படுகிறது. [26]

மடத்தில் உப்பு ஊறுகாய் நீராகாரம் அளித்த செயல் குறிக்கப் படுகிறது. [27]

(ஆ) குமார முத்து விசைய ரகுநாத சேதுபதி (1729-1735) : இவர் காலத்தில் பழனிக் கோயிலுக்கு நிலம் அளிக்கப்பட்டது. [28]

(இ) ராய விஜய ரகுநாதத் தொண்டைமான் (1730-1769) : சிலருடைய நலத்துக்காகப் பழனிக் கோயிலில் விழாக்கள் எடுக்கப் பெற்றன. இச் செப்பேட்டில் டபீர் வேங்கடராவ் என்ற அலுவலர் குறிக்கப் பெறுகின்றார். அவர் மராட்டிய அலுவலர் ஆவார். [29]

## சாதிச் செப்பேடுகள்

(அ) வேளாளர் :

(1) அனுப்பப்பட்டிச் செப்பேடு [30] சோழர் படையெடுப்பின் போது பயந்து ஓடிய இராமலிங்கம் பிள்ளை உரிமைகளைப்

பறித்த எண்ணை குல சங்கம கவுண்டர் புகழ் பாடுகிறது. சேரரும், பாண்டியரும் இணைந்தது கூறப்படுகிறது. இச் செப்பேட்டின் இடையில் அழகிய வெண்பா ஒன்று காணப்படுகிறது.

'கொங்குமலை நாடும் குளிர்ந்தநதி பன்னிரண்டும்
சங்கரனார் தெய்வத் தலமேழும்-பங்கயஞ்சேர்
வஞ்சிநகர் நாலும் வளமையால் ஆண்டருளும்
கஞ்சமலர்க் கையுடையோன் கான்' [31]

(2) வேட்டம்பாடிச் செப்பேடு : அழகு நாச்சியம்மன் தேரோட்டம் தொடர்பாகப் பெரிய குல வேளாளர்கட்கும் மேளக் காரர்கட்கும் ஏற்பட்ட வழக்கு இதில் கூறப்படுகிறது. மகளைப் பொட்டுக் கட்டி விட்டவரே பொங்கல் வைக்கலாம் என்று கூற ஒரு பெண்ணை விலைக்கு வாங்கிப் பொட்டுக் கட்டிய விபரம் கூறப்படுகிறது. பெருங்குடியர் வரகுதின்னாப் பெருங்குடியர் எனப் பெயர் பெற்ற விபரம் கூறப்படுகிறது.[32]

(3) மல்லி குந்தம் செப்பேடு : காமாட்சி அம்மன் தேரை சிம்ம அனுமன் என்ற மந்திரவாதி தன் மனைவி ஆவல் தீத்தம் மாளைப் பலி கொடுத்து ஓட்டிய விபரம் கூறப்படுகிறது.[33]

(4) திருவானைக்காச் செப்பேடு : ஞான சிவாச்சாரியார் இம்மடி அகிலாண்ட தீட்சிதருக்கு பூந்துறை நாட்டுக் கவுண்டர்கள் எந்த நாட்டில் இருந்தாலும் தலக்கட்டி ஒன்றுக்கு 5 பணம் அளித்துச் சஞ்சாரம் வந்தால் பாத பூசை செய்வதாகவும் கூறப்பட்டுள்ளது.[34] இச் செப்பேடு நாக ஆசாரி மகன் அழகாத்திரி ஆசாரி கயி எழுதி அடிச்சது' என்று கூறப்படுகிறது.[35]

(5) பிடாரியூர்ச் செப்பேடு : பொருள் தந்த குலம் செங்கோட கவுண்டர் மகள் வெள்ளை வேலம்மாளை வள்ளி எறிச்சில் ஆந்தை குலத்து குமர வேலப்ப கவுண்டன் மணந்து பிடாரியூரில் கால்காணி உரிமை பெற்றது கூறப்படுகிறது.[36]

(6) கண்ணன் கூட்டத்தார் செப்பேடு : கன்னிவாடியிலிருந்து புறப்பட்டு கீழ்க்கரைப் பூந்துறை நாட்டில் காணி உரிமை பெற்ற வரலாறு கூறப்படுகிறது.[37] இச் செப்பேட்டில் வெள்ளாளருக்கு ஆதிபாதி பங்காளி வேட்டுவர் என்றும், வேட்டுவர் வீட்டில் பெண் எடுத்தனர் என்றும் கூறுவது புதுயையான செய்தி.[38]

(7) குருப்ப நாட்டுச் செப்பேடு : வேளாளர்கள், செங்குந்த கோத்திரம் போக்கங்கூட்டம் நஞ்சராயப் புலவனை நாட்டுப்

புலவனாக்கிப் பால் சாப்பிடும் உரிமையும், புலமை நிலைநாட்டும் செய்தது கூறப்படுகிறது.[39]

(8) திருமுருகன் பூண்டி கிரைய சாசனச் செப்பேடு : பால வேளாளர் பாளையக்காரர் பயிசலி கோத்திரம் வீர விக்கிரம சோழியாண்டக் கவுண்டரிடமிருந்து எழுமாத்தூர்ப் பனங்காடை பொய்ங்காக் கவுண்டர் பட்டக்காரர், மருதுறை ஆந்தை செல்லப்ப கவுண்டர், கொற்றனூர் ஆந்தை சரவண கவுண்டர் ஆகியோர் திருமுருகன் பூண்டியின் உரிமைகளை விலைக்கு வாங்கியது கூறப்படுகிறது.[40]

(ஆ) வேட்டுவர் :

(1) ஊசிபாளையம் செப்பேடு : சாந்தப் படை வேட்டுவன் நல்ல காளியப்ப கவுண்டரின் வெள்ளை மகளை மணந்து கரைய வேட்டுவன் காளியப்ப கவுண்டன் காணி பெற்ற வரலாறு கூறப்படுகிறது.[41]

(2) அல்லாள இளையான் செப்பேடு : பரமத்திச் சீமை வடகரை ஆத்தூர் மூளை கோத்திரம் அல்லாள இளையானும் குன்னாடி வேட்டுவர், பொன்ன வேட்டுவர், பாண்டி வேட்டுவர், வெம்ப வேட்டுவர், ஆகியோரும் திருச்செங்கோட்டில் காமாட்சித் தம்பிரானுக்கு மடம் ஏற்படுத்தியதை இச்செப்பேடு கூறுகிறது.[42]

(3) வேட்டுவர் பூர்வ பட்டயம் : கொங்கு நாட்டின் நாடு, கோயில்களின் காணியுரிமைகளை வேட்டுவரிடமிருந்து வேளாளர் பெற்றதை இச்செப்பேடு உணர்த்துகிறது.

'சிறுத்தலை வேட்டுவன்', மாகாளி வேட்டுவன், வெங்கச்சி வேட்டுவன், மகத்தார் கவுண்டர், குட்டியண கவுண்டர் இந்த 5 பேர் (வேட்டுவ) கவுண்டர்கள் வெள்ளாளச் சாதி திருமலைக் கவுண்டன் பெருங்குடி வெள்ளாளன் கையிலே 1000 பொன்னு வாங்கிக் கொண்டு கால் பங்கு அவர்கட்கு நடந்த விபரம் மேரு மிராசு பத்திக் கொண்டது' என்பது ஒரு ஒப்பந்தப்பகுதி.[43]

முதல் உரிமை முப்பாடு என்றும், அடுத்த இரண்டாம் உரிமை பிப்பாடு என்றும் இச்செப்பேடு கூறுகிறது. முப்பாடு உடையவன் முப்பாட்டுக்காரன் எனப்பட்டான்.

(இ) வேட்கோவர் : 24 நாட்டுச் செப்பேடு,[44] சென்மப் புலவன் செப்பேடு,[45] வலிப்பூர்ச் செப்பேடு,[46] மீனாட்சி செப்பேடு[47],

தீர்த்தகிரிச் செப்பேடு[48] என்பனவற்றில் வேட்கோவர்களாகிய குலாலர் சமுதாயச் செய்திகள் பல கூறப்படுகின்றன. ஊத்தலூர், ராதாபுரம், ஈரோடு, பட்டக்காரர்கள் சிறப்பாகக் குறிக்கப்படு கின்றனர். குலாலர் மட்பாண்டங்கள், பொம்மை செய்ய வரி நீக்கம் பெற்றதும், பட்டன், புலவன், தொம்பன், கூத்தாடிகட்கு வரி நீக்கமும் மீனாட்சி செப்பேட்டில் கூறப்படுகிறது.

(ஈ) செங்குந்தர் செப்பேடுகள் : திருச்செங்கோட்டில் நாட்டு நியாயமும், காஞ்சிபுரத்தில் பெரிய நாட்டு நியாயமாகிய கம்பளி நியாயமும் பற்றிக் கூறும் அலைவாய் மலைச் செப்பேடும், கச்சி அண்ணாமலை முதலியார் மகன் முத்துக்குமார நயினார் சேவூரில் திருப்பரண் ஏறிக் கழுத்தலகு பாய்ச்சிக் கொண்டு சிவலோகம் ஏகிய செய்தி கூறும் சேவூர்ச் செப்பேடும் செங்குந்தர் செப்பேடுகளில் முக்கியமானவை.

(உ) பிற சாதிச் செப்பேடுகள் : நாடார், சக்கிலியர், பறையர், தேவர், நாவிதர், செக்கார், போன்ற பிற கொங்குச் சாதியர் கட்கும் உரிமையுடையனவாகப் பல செப்பேடுகள் உள்ளன.

### ஓலைப் பட்டயங்கள் :

மேற்கண்ட செப்பேடுகள் போலவே கொங்கு நாட்டுச் சமூகச் செய்திகளைக் கூறும் பல ஓலைப்பட்டயங்களும் கிடைத்துள்ளன.[49] ஓலைப்பட்டயங்கள் பலவற்றிற்குச் செப்பேட்டு நகல்கள் கிடைத் துள்ளன. வேறு சில ஓலைப்பட்டயங்களில் செப்பேட்டு நகல்கள் உள்ளதாகக் கூறப்பட்டுள்ளன.

### மெய்க்கீர்த்திகள்:

பிற்காலச் செப்பேடுகளில் அரசர்கட்கும், பாளையக்காரர்கட்கும் மெய்க்கீர்த்தி போன்ற புகழ்மொழிகள் கூறப்படுகின்றன.[50] அண் மைக்கால எழுத்தாளர் ஒருவர் கூறியது போல அவற்றில் கீர்த்திகள் மட்டுமே உள்ளன; மெய் இல்லையோ என எண்ணத் தோன்றுகிறது.

### மொழிநடை :

இச்செப்பேடுகள் பலவும் வடமொழிக் கலப்பு இல்லாமல் நாட்டுப்புற மக்களின் பேச்சுச் சொற்களைக் கொண்டு எழுதப்

பட்டுள்ளன. மொழியியல் ஆய்வாளர்கட்குப் பல புதிய களங்கள் இவற்றில் அமையும்.

அப்பனை (உத்தரவு), உடுகரை (சிறப்பு), வாங்குதல் (அழித்தல்) மேறை (விகிதம்), நிகுதி (வரி), கொத்து (உரிமை) போன்ற புதுச் சொற்களையும், சாதினம் (சாசனம்), ராடபுரம், லாடபுரம், ராதாபுரம் (தாராபுரம்), சிலம்பரம் (சிதம்பரம்), அவுதாரம் (அபராதம்), பகழம் (பவளம்), வங்குசம் (வமிசம்) நேமுகம் (நியமனம்) போன்று வழக்காற்றில் மாறும் சொற்களையும் இச் செப்பேடுகளில் காணலாம்.

## முடிவுரை :

சமுதாயச் செப்பேடுகள் பலவற்றில் காலக்குறிப்புகள் சரியாகப் பொருந்திவரவில்லை. எப்பொழுதோ நடைபெற்ற ஒரு வரலாற்று நிகழ்ச்சியை வாய்மொழியாகவே பரம்பரை பரம்பரையாகச் சொல்லக் கேட்டவர்கள் பிற் காலத்தில் ஏதோ தேவையின் பொருட்டு அதனை ஆவணமாகப் பதிவு செய்திருக்கின்றனர் என்று கருதலாம்.

கி. பி. 15 ஆம் நூற்றாண்டுக்குப்பின் விஜயநகர மன்னர், உம்மத்தூர்த் தலைவர், மதுரை நாயக்கர், மைசூர் உடையார்கள், ஐதர், திப்பு, பாளையக்காரர்கள் கிழக்கிந்தியக் கம்பெனி ஆகியோரிடையே மாறிமாறி வந்த அதிகார காலத்தில் சிலர் தங்கள் பழைய உரிமைகளை நிலைநாட்டவும், தங்களைப் பெரியவர்களாகவும், தலைமைப் பண்பு உடையவர்களாகவும் காட்டிக் கொள்ளவும் நாடு ஊர் கோயில்களின் உரிமைகளுக்-காகவும் இச் செப்பேடுகளை உருவாக்கியிருக்கலாம்.

எப்படியிருப்பினும் இச்செப்பேடுகள் பிற்காலக் கொங்குநாட்டு வரலாற்றுக்கு மிகவும் இன்றியமையாதவை என்பதில் ஐயமில்லை.

இச்செப்பேடுகளில் ஆள் அடிமை முறை பற்றியும், மனிதர்கள் விற்பனை பற்றியும், ஒருவர் மற்றவரிடம் அடைக்கலம் புகுவது பற்றியும், கோயில்கட்கு விலங்குகளை மட்டுமல்ல மனிதர்களைப் பலி கொடுப்பது பற்றியும், அரசனுக்காகவும், குறுநில மன்னர் களுக்காகவும், தலைவர்களுக்காகவும் பிறர் தங்களைத் தாங்களே பலிகொடுத்துக் கொள்வது பற்றியும், காட்டை அழித்து நாடாக் கியது பற்றியும், புது ஊர்கள் ஏற்படுத்தியது பற்றியும், மக்கள்

ஓரிடத்திலிருந்து மற்றொர் இடத்திற்குக் குடி பெயர்வது பற்றியும், அரசர் பாளையக்காரர் - பொது மக்கள் உறவு பற்றியும், சாதிப் போராட்டங்கள், சாதி ஒற்றுமைகள் பற்றியும், தனிப்பட்டவர் பொருட்களை மட்டுமல்ல ஊர், நாடு, கோயில் உரிமைகளை விற்பது பற்றியும், தீண்டாமை, தீண்டாமை நீக்கம் பற்றியும், முன்னோர் வழிபாடு பற்றியும், தலயாத்திரை பற்றியும் கற்றறிந்த அறிஞர் புலவர் நிலைபற்றியும், நீதி விசாரணைகள், தண்டனை பற்றியும், தேவரடியார் முறை பற்றியும், கால்நடைகளை மேய்ச்சலுக்கு ஓட்டிச் செல்வது பற்றியும், வணிகம் பற்றியும், கலப்புமணம் பற்றியும், உரிமைகள் அளிக்கும் முறை பற்றியும், அந்தணர்கள் நிலை செல்வாக்குப் பற்றியும், வரிவிதிப்பு, வரி நீக்கம் பற்றியும் வேட்டையாடிய மக்கள் வேளாண்மை செய்யத் தொடங்கியமைப் பற்றியும், அக்காலத்தியப் பண்பாடு, பழக்க வழக்கம், சடங்குகள் இவைகளைப் பற்றியும் நமக்கு அறிவிக்கும் வரலாற்றுக் கலைக்களஞ்சியங்களாக இவை திகழ்கின்றன.

கொங்கு நாட்டுக் கல்வெட்டுக்கள் அனைத்தும் பதிப்பிக்கப் பெறுவதுடன் இச்செப்பேடுகள் அனைத்தும் ஆய்வுப்பதிப்புக்களாகப் பதிப்பிக்கப்பெறும் நாளே கொங்கு நாட்டு வரலாற்றில் ஒரு பொன்னாளாகும்.

## குறிப்புகள் :

1. தஞ்சை மராட்டியர் செப்பேடு, கல்வெட்டுக்களைப் பதிப்பித்த தமிழ்ப்பல்கலைக்கழகத்தின் கல்வெட்டியல் துறை, சேதுபதி, தொண்டைமான் செப்பேடுகளைப் பதிப்பிக்கும் பணியில் ஈடுபட்டுள்ளது.

2. இண்டியன் எக்ஸ்பிரஸின் (சென்னை) துணை ஆசிரியர் ஹாரிமில்லரிடம் உள்ள இச்செப்பேடு இந்தியத் தொல்லியல் அளவீட்டுத் துறையின் கல்வெட்டுப் பிரிவு இயக்குநர் முனைவர் கே. வி. ரமேஷ் அவர்களின் 'COPPER PLATES OF GANGAS' என்னும் நூலில் வெளி வந்துள்ளது.

3. முட்டம், வெள்ளலூர், பேரூர் பழனி, குமரலிங்கம், பொள்ளாச்சி, ஈரோடு, ஆகிய இடங்களில் பிற்காலச் சேரமன்னர் கல்வெட்டுக்கள் கிடைத்துள்ளன. கோவை, 'கோவந்புத்தூரந

வீர கேரள நல்லூர்' என்றும், ஆனைமலைப்பகுதி 'வீரகேரள வளநாடு' என்றும் அழைக்கப்பட்டது.

4. ARE A 5 of 1966-67 ஆண்டறிக்கையில் இச் செப்பேடு 'An important charter among the collection of this year' என்று பாராட்டப் பெறுகிறது.

5. 'ஸ்வஸ்தி' ஸ்ரீ கோப்பரகேசரி பந்மக்கு யாண்டு ஆறாவது திருவகழி மங்கலத்தில் சபையோம் மேற்படியூா யிருக்கும் கரைய வேட்டுவந்காழிப் பிடாரநாந கரைய வேளானுக்கு மாடு மீட்டதுக்கு சிறப்புச் செய்த நிலம்......

6. தமிழ் எழுத்துக்களுடன் வட்டெழுத்துக்கள் கலந்து எழுதப் பெற்றதைச் சர்க்கார் பெரியபாளையம் சுகர்வேசுவரர் கோயில் கல்வெட்டில் காணலாம்.

7. இச்செப்பேடு இக்கட்டுரையாளரால் தமிழ் நாடு அரசு தொல் பொருள் ஆய்வுத்துறை இயக்குநர் முனைவர் இரா. நாகசாமி அவர்களிடம் அளிக்கப்பட்டுள்ளது.

8. சங்கச் சேரமன்னன் ஒருவன் **கருவூர் ஏறிய** ஒள்வாள் கோப்பெருஞ்சேரல்' என்று அழைக்கப்பட்டான் (புறநானூறு - 5).

9. இச்செப்பேட்டைக் கண்டு பிடித்தவர் நாமகிரிப்பேட்டைத் தமிழாசிரியர் புலவர் வெ. ரா. துரைசாமி ஆவார்.

10. 1982 இல் ஈரோட்டில் நடைபெற்ற SOUTH INDIAN HISTORY CONGRESS இன் மூன்றாம் மாநாட்டில் இக் கட்டுரையாளர் வாசித்த Identity of Kings in Kollimalai copper plats' என்னும் கட்டிரை காண்க.

11. இச்செப்பேடுகளை அளித்தவர் தி. சு. முத்துசாமிக் கோனார் அவர்கள் ; S. I. I. Vol. III Part IV 212, 213, ARE. A 10, 11 of 1913-14; தேனோலை இதழ் 23.

12. தி. வை. சதாசிவப் பண்டாரத்தார் இந்த இராசகேசரியை முதலாம் இராசராசன் என்பார். பிற்காலச் சோழர் வரலாறு பக். 135. ஆனால் இச்செப்பேட்டில் குறிக்கப் பெற்ற நந்தி புர மன்னர் சுந்தரசோழரே என்பது 'மேதகு நந்திபுர மன்னர் சுந்தரசோழர்' என்ற வீரசோழிய உரை மேற்கோள்

பாடலாலும் (யாப்பு-11), இச்செப்பேட்டில் சுந்தர சோழன் என்ற பெயர் வருவதாலும் உறுதிப்படுகிறது.

13. அதியமானை மழவர் தலைவன் என்று அவ்வையார் பாடுகின்றார் ; புறநானூறு 88, 90; மழவர் வாழும் கொங்குப் பகுதி மழ கொங்கம் எனப்பட்டது. வேள்விக்குடிச் செப்பேடு

'பூவிரியும் பொழிற்சோலைக் காவிரியைக் கடந்திட்டு
அழகமைந்த வார்சிலையின் மழகொங்கம் அடிப்படுத்து'

என்று கூறுகிறது. பிற்காலச் சோழருடன் திருமண உறவு கொண்டவர் மழவர். சோழப் பேரரசி செம்பியன் மாதேவி மழவரையர் மகளார் ஆவார்.

14. 'கொல்லிமலை மரியாதை' 'காந்தளூர் மரியாதை' என்று பிற கல்வெட்டிலும் செப்பேட்டிலும் காணுகின்றோம். மரியாதை-மற்சாதி ஆயிற்று.

15. பிற்காலச் சோழர் வரலாறு, ப. 81.

16. இட்டேரி என்ற பெயர் இன்று இட்டாலி என்றும் கூறப் படுகிறது.

17. மகமை-வணிகர்களும் மற்றவர்களும் தாமாகவே விரும்பித்தம் வருவாயிலிருந்து ஒரு பகுதியைக் கொடையாகக் கொடுத்தல்.

18. ARE. A 12 of 1936-37.

19. ARE. A 13 of 1936-37.

20. இச்செப்பேடு திருவாவடுதுறை ஆதீனத்தில் உள்ளது. அக்காலத்தில் கிணத்துக்கடவு வேலாயுதசுவாமி கோயிலும் திருவாவடுதுறை ஆதீனத்தின் பொறுப்பில் இருந்துள்ளது.

20. (அ) 'திராவிட அட்சரத்தில் தாம்பர சாசனத்தில் எழுதினவன் தானப்ப முதலியார் குமாரன் நீலகண்டன்; யிந்த அட்சரம் கொத்தினவன் கோயம்முத்தூரில் இருக்கும்விசுவகற்ம வங்குஷத்தில் வீரப்ப ஆசாரி மகன் ஆனந்த ஆசாரி'

கையொப்பமிட்டோர் : 'அஞ்ஞூறு குடி பாட்டத்துப் பலர், பட்டக்காரர், 24 மனை தெலுங்கச் செட்டியார்

பன்னிரண்டு நகரத்துப் பலர், வேடசந்தூர் ராவுத்த மார், கோமுட்டியளில் குப்பி செட்டி, அல்லித்துறை வற்தகர், தேவாங்கு செட்டியள், சங்கராசபேட்டை வற்தகர் பலர்"

21. ARE A 7 of 1927-28

22. தி. சு. முத்துசாமிக் கோனார், விவேகதிவாகரன், 1915 ராட்சச, பங்குனி சித்திரை ; தேனோலை எண் 23.

23. ARE. A 1, 2of 1947-48.

24. ARE A 1 of 1942-43 ; குன்றத்தூர் - சங்ககிரி.

25. பிற செப்பேடுகளில் மலைக்கோட்டை 'துர்க்கம' என்றும், தரைக் கோட்டை 'கெடி' என்றும் கூறப்பெறும்.

26. ARE. A 41 of 1946-47.

27. பழைய கோட்டைக் கும்மிப்பாட்டு இதனோடு ஒப்புமை யுடையது.

'உத்தமிக் காமிண்டன் தண்ணீர்ப்பந்தல் - அதில்
ஊறுகாய் மோறுஞ்சோறு ஊற்றுவதால்
எத்தனை பஞ்சம்வந் தாலும்இவ் வம்மிசம்
ஏறும் என்று கும்மி பாடுங்கடி'

28. ARE. A. 35 of 1946 47.

29. ARE. A 22 of 1917-18.

30. அனுப்பர்பாளையம் மருத்துவர் மணியன் அவர்கள் கண்டு பிடித்தது.

31. ஆறுகள் பன்னிரண்டை மண் சதகங்களில் காண்க ; தேவாரப் பாடல் பெற்ற ஏழு சிவாலயங்கள் குறிக்கப்படுகின்றன.

32. வேட்டம்பாடி அ. பழனிசாமிக் கவுண்டரிடம் உள்ள செப்பேடு; தேனோலை 33.

33. மேச்சேரி. மல்லிகுந்தம் இராம கவுண்டரிடம் இச்செப்பேடு உள்ளது ; தேனோலை 6.

34. திருவானைக்கா பாசூர் தீட்சிதர் மடத்தில் இச்செப்பேடு உள்ளது.

35. 'அடிப்பித்துக் கொடுத்த சாசனச் செப்பேடு பட்டயம்' என்று பேரூர் அணை கட்டிய பட்டயம் கூறும்.

36. சென்னிமலை, கூரபாளையம் பழனிசாமிக் கவுண்டரிடம் இச் செப்பேடு உள்ளது. இவ்வாறு திருமணம் மூலம் உரிமை பெற்றதாகக் கூறும் செப்பேடுகள் பல உள்ளன.

37. இச்செப்பேட்டின் பல ஓலைப்படிகள் கிடைத்துள்ளன. இதன் செப்பேடு நகல் ஒரு வழக்கின் நிமித்தம் பொள்ளாச்சி காவல் நிலையத்தில் உள்ளது.

38. இச்செய்தி ஆய்வுக்குரியது. ஒரு ஓலைப்படியில் வேட்டுவன் என்ற சொல் வெண்டுவன் என உள்ளது. வெண்டுவன் என்பது வேளாளர் குலங்களில் ஒன்று.

39. தம்பிராட்டிபாளையம் நாச்சிமுத்துப்புலவர் ஓலைப் பிரதியும், கள்ளிப்பட்டி க. கு. கோதண்டராம கவுண்டர் அவர்கள் அளித்த செப்பேட்டு நகலும், ஈரோடு கலைமகள் அருங் காட்சியகத்தில் உள்ளன.

40. இதன் ஓலைப்படிகள் ஈரோடு கலைமகள் அருங்காட்சியகத் திலும், தமிழ்ப் பல்கலைக் கழக ஓலைச்சுவடித்துறையிலும் உள்ளன. அண்மையில் விஜயபுரம் வெங்கடாசலக்கவுண்ட ரிடம் செப்பேட்டு நகல் உள்ளது கண்டுபிடிக்கப்பட்டுள்ளது.

41. அறச்சலூர் ஊசிபாளையம் ஆறுமுகக் கவுண்டரிடம் இச் செப்பேடு உள்ளது; தேனோலை 17.

42. தேனோலை 22.

43. கொங்கு தொகுதி 3, பக். 3, 90, 129; தென்னிலை வேட்டுவப்பட்டக்காரர் வீட்டில் இச்செப்பேடு உள்ளது.

44. நாமக்கல்லில் வாழவந்தி நாட்டுப் பூசாரியிடம் இச்செப்பேடு உள்ளது; தேனோலை 1; தமிழ்ப் பல்கலைக் கழக ஓலைச் சுவடித்துறையில் இச்செப்பேட்டின் ஓலை நகல் உள்ளது.

45. மேற்படி பூசாரியிடம் உள்ளது; தேனோலை 5.

46. கோவை தொல்பொருள்துறைப் பதிவு அலுவலர் இரா. பூங்குன்றன் அளித்தது.

47. தேனோலை 29.

48. மேலது.

49. **ஓலைப்பட்டயங்கள் :** அரைய நாட்டுப் பட்டயம், இருப் புலிப் பட்டயம், காலிங்கராயன் அணை கட்டின பட்டயம், கொங்கு காணியான பட்டயம், கொங்குப் புலவர் பட்டயம், செங்குந்தர் வெற்றிப் பட்டயம், அலைவாய்ப்பட்டிப் பட்டயம், மொடவாண்டிப் பட்டயம், நல்லதம்பிப் பட்டயம், பேரூர் அணை கட்டின பட்டயம், முகுந்த நல்லூர்ப் பட்டயம், தென்கரை நாட்டுப் பட்டயம், முத்தூருப் பட்டயம் போல்வன.

50. ''ஸ்ரீமன் மகாமண்டலேசுரன் பாஷைக்குத் தப்பு வராத கண்டன் ஆரியதள விபாடன் ஆரிய மோகம் தவிழ்த்தான் ஒட்டியர் தள விபாடன் ஒட்டியர் மோகம் தவிழ்த்தான் ஈழமும் யாழ்ப்பாணராயன் பட்டணமும் திறை கொண்டருளிய ராசாதி ராசன் ராசபரமேசுரன் ராச மார்த்தாண்டன், ராச மனோபயங்கரன் கடல் கலங்கினும் காவேரி வத்தினும் மலை அலுங்கினும் மனங் கலங்காத கண்டன் கண்ட நாடு கொண்டு கொண்ட நாடு குடாதான் பருவ தட்சிண பச்சிம உத்தர சத்த சமுத்திராதிபதி சொல்லுக்கு அரிச்சந்திரன் அழகுக்கு அனங்கன் அறிவுக்கு அகஸ்தியன் பொறுமைக்குத் தருமர் போருக்கு வீமன் வில்லுக்கு விசையன் பரிக்கு நகுலன் சாஸ்திரத்துக்குச் சகாதேவன் அசுவபதி கஜபதி நரபதி தன பதியாகிய......'' போன்ற அமைப்பில் வரும்.

# 3. கொங்கு நாட்டுச் சிற்பங்கள்

**சி. டி. மலர்விழி**
ஆய்வாளர்,
தமிழ்த்துறை, பாரதியார் பல்கலைக்கழகம்,
கோவை-46.

**முன்னுரை**

கொங்கு நாடு நாற்புறமும் மலைகள் சூழ்ந்து இயற்கை அரண் கொண்டது. இவ்வமைப்பு அலாதியானதாகும். ஏனெனில் பண்டைக் காலம் முதற்கொண்டு தனிநாடாக இருந்து வந்திருக் கிறது. "பூநாடு, மணநாடு, தேன்நாடு என்ற மூன்றையும் உள்ளடக்கியதால் கொங்கு நாடு[1]" என்றும், "கொங்கு என்னும் தலைநகரத்தால் அமைந்த பெயர்[2]" என்றும், கொங்கு நாடு என்பதற்குப் பெயர் விளக்கம் கூறுகின்றனர் ஆய்வாளர்கள். இந்நாடு வரலாறு, பண்பாடு, இலக்கியம், பக்தி, கலை போன்ற வற்றால் பல சிறப்புகளைப் பெற்றுத் திகழ்கிறது. அவற்றுள் சிற்பக் கலையும் ஒன்றாகும். சிற்பக் கலையில் கொங்கு நாடு சிறந்து வந்துள்ளமைக்குச் சான்றுகள் உள்ளன.

கொங்கு நாடு ஓவியங்கள், சுடுமண் பொம்மைகள் நடுகல் சிற்பங்கள், செப்புத் திருமேனிகள் ஆகிய கலைச் செல்வங்களைக் கொண்டு திகழ்கிறது. சங்க இலக்கியங்களில் நடுகற்கள் பற்றியும், படிமம் பற்றியும் வருவன சிற்பக் கலையின் தொன்மையை வலியுறுத்துகின்றன. சிற்பக்கலை ஆக்கமும் ஊக்கமும் பெற்றது கிறிஸ்து அப்தத்தின் ஐந்தாம் நூற்றாண்டின் முன்பின் காலமாகும். பொதுவாக இக்காலத்தைப் பல்லவர் காலம் என்று கூறுவர். பல்லவர் காலம் தொடங்கி நாயக்கர் காலம் வரை எத்தனையோ அரச மரபினர் சிற்பக் கலையை வளர்த்துள்ளனர். சிற்பங்களின் கருப்பொருளும் வரலாறும் ஒன்று போலவே காட்சியளித்தாலும் நயத்திலும், கலை அம்சத்திலும் வேறுபட்ட தன்மையைக் கொண்டவை. பல உள்ளூர்ப் பண்பும் வட்டாரப் பண்பும் கொண்டுள்ளன. "மத்திய கால இந்தியக் கலைச் செல்வங்களில் வட்டாரத் தன்மை மிகுதியும் உண்டு"[3] என்பர். அது உண்மை யாயின் வட்டார அடிப்படையில் சிற்பக் கலையை ஆய்வு செய்தால் பல உண்மைகள் வெளிப்பட உதவும். வட்டாரத் தன்மையில்

ஆய்வுப் பொருள் அமைத்துக் கொள்ளும் போது ஆழமாக நோக்கும் வாய்ப்பு கிடைக்கின்றது. வட்டாரத் தனித் தன்மையை அறிந்து கொள்ளவும் வாய்ப்பாக அமைகின்றது. சமீப ஆண்டு களில் வட்டார வரலாறு எழுதப்பட வேண்டியதன் இன்றியமை யாமையைப் பற்றி அறிஞர்களிடையே இரு வேறு கருத்துக்கள் உண்டு.[4]

கொங்கு நாட்டுக் கலைமரபு பற்றி அறுபதுகளிலிருந்து எழுதப்பட்டு வருகின்றது.[5] இதுவரையில் வெளியான சிற்பங்-களைப் பற்றிய ஆய்வுகள் மறு ஆய்வுக்குட்படுத்தப்பட்டுள்ளன. பல சிற்பங்கள் இன்றும் ஆய்வாளர் கண்களுக்குத் தென்படா மலேயே இருக்கின்றன. வரலாற்று அறிஞர்கள் கொங்கு நாட்டுக் கலை மரபில் பல மரபுகள் கலந்துள்ளன என்பர். பாண்டியர்[6], கங்கர்[7], சோழர்[8], பல்லவர்[9] போன்ற மரபினர் கலை மரபுகள் காணப்படுகின்றன.

## கொங்கு நாட்டில் ஓவியங்கள்

பழங்கால மக்கள் தாங்கள் எண்ணியதை ஓவியங்களாகத் தீட்டினர். அதன் மூலம் தங்கள் கருத்தினை வெளிப்படுத்தினர். குகைகளிலும், பாறைகளிலும் இத்தகு ஓவியங்கள் இருந்தமை கண்டுபிடிக்கப்பட்டுள்ளன. கொங்கு நாட்டில் வெள்ளிங்கிரிக்கு அருகில் உள்ள வேடர் பாத்தியில் இருந்து இரண்டு பாறை ஓவியங்கள் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன. இது 4000 அடி உயரத்தில் உள்ளது. ''தமிழகத்தில் கிடைக்கின்ற தொல் பழங்கால ஓவியங்கள் 1000 அடிகள் உயரத்திற்குள்ளேயே அமைந்து விடுகின்றன. ஆயின் கொங்கு நாட்டில் கிடைக்கின்ற ஓவியங்கள் 3000 அடி வரையிலும் உயரமுள்ள குகைகளில்அமைந்துள்ளன.''[10] கொங்கு நாட்டில் வெள்ளிங்கிரிக்கு அருகில் உள்ள வேடர் பாத்தியில் இருந்து இரண்டு பாறை ஓவியங்கள் கண்டுபிடிக்கப் பட்டுள்ளன. இங்கு இரண்டு குகைகள் உள்ளன. அதில் முதல் குகையின் முன்புறத்தில் யானை வேட்டையாடுகின்ற காட்சி சித்திரிக்கப்பட்டுள்ளது. யானைக்கருகில் மனிதர்கள் நாட்டியம் ஆடுகின்றனர். இப்பழ மரபை நினைவூட்டும் வண்ணம், இன்றும் மேற்கு மலைத்தொடரில் கண்ணன்காடு என்ற பகுதியைச் சேர்ந்த பழங்குடிகள் மான்பாட்டு என்ற நடனத்தை நடத்துகின்றனர்.[11] அந்நடனத்தின் போது ஒருவன் துணியைப் போர்த்துக் கொண்டு மான் போன்று துள்ளி வந்து நாட்டியம் நடக்கும் இடத்தில் மயங்கி வீழ்வான். எனவே இவ்வோவியம் பழமரபை அம்மக்கள்

செய்த செயல்களை வெளிப்படுத்தும் ஓவியங்களாகும். மேலும் இக்குகையில் விலங்குகள் பலவற்றை வேட்டையாடும் காட்சி சித்திரிக்கப்பட்டுள்ளன. மேலும் இங்கு வடிவியல் கணித முறை யிலான வடிவங்கள் வரையப்பட்டுள்ளன. ஆண், பெண் ஆடை யின்றி நாட்டியமாடும் ஓவியங்கள் உள்ளன. இவை வளமைச் சடங்குகளின் முன்னோடியாகும்.

இரண்டாவது குகையில் யானை மீதும், குதிரை மீதும் அமர்ந்து வீரர்கள் வேட்டையாடும் காட்சி சித்திரிக்கப்பட்டு உள்ளது. அதில் குதிரை மீது அமர்ந்திருப்பவன் நீண்ட கைத் தடி அல்லது வேல் ஒன்றை வீசுகின்ற நிலையும், அதனைக் கண்டஞ்சி விலங்குகள் ஓடும் காட்சியும் ஒவியமாக அமைந்துள்ளன. கீழே முக்கோண வடிவில் வட்டங்கள் அமைந்துள்ளன. இம்மலை யடிவாரத்தில் அமைந்துள்ள கோயில் என்று சொல்லப்படுகின்ற இடத்தில் சுடுமண்ணில் ஆன குதிரை வடிவங்கள் சிறியதும், பெரியதுமாகக் காணப்படுகின்றன. இன்றும் இங்கு வழிபாடு செய் கின்றனர். இவை பழமரபினை நினைவூட்டும் சின்னங்களாகும்.

## கொங்கு நாட்டில் சுடுமண் பொம்மைகள்

கொங்கு நாட்டில் நடுகற்கள் வடிக்கப்பெறுவதற்கு முன்னே சுடுமண் பொம்மைகள் செய்யப்பட்டன. மொகஞ்சதாரோவில் கிடைத்த கிளி, மயில் போன்ற சுடுமண் பொம்மைகளைப் போல் கொங்கு நாட்டிலும் பல கிடைத்துள்ளன. "சுடுமண் பொம்மை யொன்று தொல் பொருள் ஆய்வுத் துறையினரால் கண்டுபிடிக்கப் பட்டுள்ளது."[12] அவ்வுருவத்தின் தலையில் உள்ளமகுடம் விநோத மாக உள்ளது. இரண்டு கைகளும் உடைந்துள்ளன. கால்களும் சிதைந்துள்ளன. அவ்வுருவத்தின் காதிலும், இடுப்பிலும் அணி கலன்கள் உள்ளன. அவ்வுருவத்தின் முக அமைப்பை நோக்கும் போது புன்னகை தவழும் குழந்தை போன்றுள்ளது. மாட்டுருவச் சுடுமண் பொம்மையொன்று வெள்ளியங்கிரிமலை அருகில் கண்டு பிடிக்கப்பட்டது.[13] போளுவாம்பட்டி கோட்டைக்காடு என்ற பகுதியில் இருந்து சுடுமண் பொம்மைகள் சில கிடைத்துள்ளன. "சுண்டைக்காமுத்தூர் சுடுகாட்டில் இருந்து காலிங்க நர்த்தனம் ஆடும் கண்ண பெருமான் உருவம் அமைந்த சுடுமண் பொம்மை யொன்று கண்டுபிடிக்கப்பட்டது".[14] இவ்வுருவம் மிகச்சிறிய வடிவினதாக இருந்தாலும் கலையழகுடன் திகழ்கிறது. கி. பி, 5, 6, 7, ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த யக்சன், யக்சி, புத்தர்,

மைத்ரேயர் ஆகிய உருவங்கள் அமைந்த சுடுமண் பொம்மைகள் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன.[15] இது போன்ற சிற்பங்கள் தர்மபுரி, மாவட்டத்தில் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன. இவ்விரண்டு பகுதிகளில் கிடைக்கின்ற சுடுமண் பொம்மைகள் ஒரே கலை மரபில் திகழ்ந்தவை.

### நடுகல் சிற்பம்

பண்டைத் தமிழ் மக்கள் பெரு வீரமுடையவர்களாய்த் திகழ்ந்தனர். போரில் வீரன் ஒருவன் இறந்தால், அவனுக்காக ஒரு கல் நடப்பட்டு அதனை வணங்கும் நடுகல் வழிபாடு, தமிழர் இடையே இருந்தது. வெறும் கல்லை மட்டும் வணங்கிய மக்கள் பின்னர் வீரனின் உருவத்தையும் அக்கல்லில் செதுக்கினர். இவையே நடுகல் சிற்பங்களாகும். இத்தகைய நடுகல் சிற்பங்கள் பழமங்கலம், வெள்ளியங்கிரி, ஆலாந்துறை, பேரூர் ஆகிய இடங்களில் உள்ளன. சிற்பக் கலையின் தோற்றத்திற்கு அடிப்படை இந்நடுகல் சிற்பங்களாகும். பழமங்கலம் என்ற இடத்தில் ஒரு கையில் கத்தியும், மற்றொரு கையில் வில்லும் ஏந்திய நிலையில் கல்வெட்டும் பொறிக்கப்பட்டுள்ளது.

''வாய்த்த புகழ் மங்கலத்து வந்தெதிர்த்த மாற்றலரை
சாய்த்த மகன் வென்ற சயம் பெருக-சீர்த்தபுகழ்
நிக்கு வண்ணம் கற்பொறிக்கப்பட்டான் கரையகுல
சொக்க னேந்தலே உலகிற் காண்''[16]

-என்பதே அந்நடுகல் கல்வெட்டாகும். சேலத்தில் உள்ள ''தீப்பாஞ்ச அம்மன் கோயிலில் இரண்டு பெண்களின் உருவங்கள் ஒரே பலகைக் கல்லில் செதுக்கப்பட்டுள்ளன. இவர்களின் கணவன்மார்கள் போரில் கொல்லப்பட்ட செய்தி அறிந்தவுடன் அதில் பாய்ந்து இறந்தனர். அவர்களின் புகழை நிலை நிறுத்தும் வண்ணமே மக்கள் சிலை வைத்துக் கோயில் கட்டி வணங்கி வருகின்றனர். இவற்றால் வீரர்களுக்கேயன்றி வீர பத்தினிக்கும் நடுகல்லும் கோயிலும் அமைக்கப்பட்டதை அறிய முடிகிறது.

இந்நடுகல் வழிபாடாகிய வீர வழிபாட்டில் இருந்தே கோயில்களும், சிற்பங்களும் தோன்றின. மக்களிடையே சமய உணர்வு எழுச்சி பெறலாயிற்று. அதன் காரணமாக மக்கள் தங்கள் சமயத்தைப் பரப்ப, கடவுள் உருவங்களை அமைக்கக் கோயில் கட்டினர். அக்கோவில்களில் இறைவனின் திருவுருவ

ங்களைச் சிற்பங்களாகச் செய்தனர். சமயத்தைப் பரப்ப வேண்டும் என்ற எண்ணத்தினாலும், விருப்பினாலும் புராணக் கதைகளைக் கூறினர். மக்கள் ஒன்று கூடும் இடமாகக் கோவில் விளங்கிய தால் அங்கு புராணக் கதைகளைச் சிற்பங்களாக வடித்தனர். நாளடைவில் சிற்பக்கலை வளர்ச்சி பெற்றுப் பலவித மாற்றங்களைப் பெற்றிருந்தமை புலனாகிறது. கொங்கு நாட்டில் கோவில்களும் சிற்பங்களும் மிகுதியாக உள்ளன.

## பல்லவர் காலம்

நாமக்கல்லில் இரண்டு குடை வரைக் கோயில்களை அதியமான் சோமன் என்பவன் தோற்றுவித்துள்ளான். இரண்டு கோயில்களில் ஒன்று நரசிம்மப் பெருமானுக்கு உரியது. மற்றது பள்ளி கொண்ட பெருமானுக்கு எடுக்கப்பட்டது.

நரசிங்கப் பெருமாள் கோயிலில் ஐந்து வரலாற்றுச் சிற்பங்கள் உள்ளன. ஒன்று கருவறையின் நடுவில் உள்ள நரசிங்கப் பெருமான் உருவம். மேலும் சந்திரனும் சூரியனும் தோன்ற இருமருங்கும் நான்முகனும் சிவபெருமானும் போற்றுகின்றனர். சீறிய சிங்கப் பெருமானின் தோற்றம் இங்கு உண்டு. பக்கச்சுவரில் இரணியனை மடியில் கிடத்தி அவன் கால்களும் கரங்களும் தொய்ய மார்பில் நகத்தினால் வகுக்கின்ற காட்சி அழகுற வடிக்கப்பட்டுள்ளது. நரசிங்கப் பெருமான் தூணில் தோன்றலும் வைரவாள் பற்றிச் சிடுகும் கையில் ஏந்தி இரணியன் பாயும் காட்சி சித்திரிக்கப்பட்டுள்ளது. பூ மகளை ஏந்திய ஏனப்பிரான் உருவமும் அழகுற அமைந்துள்ளது. இது கி. பி. 8 ஆம் நூற்றாண்டைச் சேர்ந்தது.

இதற்கும் எதிர்ச் சுவரில் உள்ள உலகளந்த உத்தமனின் சிற்பம் கண்ணைக் கவரும் வண்ணம் அமைந்துள்ளது. மேலே அசுவமேதயாகம் புரிந்ததைக் குறிக்கும் யூபத்தூணும், அசுவமேதக் குதிரையும், கீழே மாவலியும் சுக்கிரனும் சுக்கிரனைத் தண்டிக்கும் கருடாழ்வாரும், இதன் ஒரு புறத்திலேயே வாமனனும் நீர் அட்டிக் கொடுக்கும் அசுரனும் உள்ளனர். இதற்கும் அருகில் ஆழ்கடலில் மூழ்கிய நிலமங்கையை வெளிக் கொணர்ந்தவராகப் பெருமாள். அவரைப் போற்றுகின்ற நான்கு வேதங்கள் அவர் கடலில் மூழ்கி வெளிக் கொணர்கிறார் என்பதைக் கூறும் வகையில் அவரது கால் கணுக்காலுக்குக் கீழே காட்டப் பெறவில்லை.[18]

### பாண்டியர் காலம்

கொங்கு நாட்டில் பாண்டியர் காலத்தைச் சேர்ந்த சிற்பங்கள் பல உள்ளன. பேரூர்க் குடலுருவி மாரியம்மன் கோயிலுக்கு அருகிலுள்ள புளியமரத்தடியில் லகுலீசர் சிற்பம் உள்ளது. இது அமர்ந்த நிலையில் உள்ளது. இடக்கையில் தண்டும், வலக் கையில் அக்கமாலையும் ஏந்தியுள்ளது. இது எட்டாம் நூற்றா ண்டைச் சேர்ந்த தங்கர் சிலை மரபில் வடிக்கப்பட்ட சிற்பம். திருச்செங்கோட்டு மலையின் மீது உள்ள பெருமாள் கோயிலில் திருமால் உருவம் ஒன்றுள்ளது. இது கி. பி. 8 - 9 ஆம் நூற்றாண்டைச் சேர்ந்தது.[19]

தாராபுரம் அருகில் உள்ள கரையூரில் பாண்டியர் காலத்துச் சிற்பங்கள் பல உள்ளன. இவ்வூரிலிருந்த சப்த கன்னியர், நந்தி, சண்டீசர், மாகேஸ்வரி போன்ற உருவங்கள் தமிழ் நாடு அரசு தொல் பொருள் ஆய்வு அருங்காட்சியகத்தில் உள்ளன.[20] இவை கி. பி. 7, 8 ம் நூற்றாண்டினைச் சார்ந்தவை. இவை மட்டுமில் லாமல் சோழர் காலத்தில் வடிக்கப்பட்ட நந்தி ஒன்றும் உள்ளது.[21] இவ்வூரில் கி. பி. 8, 9 ம் நூற்றாண்டில் வடிக்கப்பட்ட திருமால் உருவம் ஒன்று உள்ளது. இவ்வுருவம் பாண்டியர் கலை மரபில் செய்யப்பட்டதாகும்.[22]

பேரூரில் உள்ள இறவாப் பனைக்குக் கீழ் சப்த மாதர்களுள் ஒருவரான சாமுண்டாவின் சிற்பம் உள்ளது. இது கி. பி. 9 ஆம் நூற்றாண்டிற்குரியது. கொழுமத்தில் கி. பி. 10 ஆம் நூற்றாண்டைச் சார்ந்த ஐயனாரின் சிற்பம் உள்ளது. இது கரண்ட மகுடத்துடன் இரு கைகளை உடையதாய்க் காணப் படுகிறது.

### சோழர் காலம்

சோழர் காலத்தில் சிற்பங்களும், செப்புத் திருமேனிகளும் நன்கு வடிக்கப்பட்டன. சோழர் காலத்தைச் செப்புத் திருமேனி களின் பொற்காலம் என்பர். கும்பகோணத்துக் கோயிலில் உள்ள அரசன், அரசி, முனிவர், அர்த்தநாரீசுவரர் சிற்பங்கள் சோழர் காலத்தவை ஆகும்.

திருமுருகன் பூண்டியிலுள்ள முருகநாதர் ஆலயத்தில் உள்ள முருகன் சன்னிதியும், பைரவர் சன்னிதியும் சுந்தரர் திருக்

கோலமும், வேடுவ நாதரின் உருவமும் சிற்பக்கலைக்குச் சான்றாக விளங்கி வருகின்றன. மாதவி வனேசுவரர் ஆலயத்திற்கு அருகில் உள்ள நீலகண்டியம்மன் கோயிலில் கி. பி. பத்தாம் நூற்றாண்டைச் சேர்ந்த துவார பாலகியர் சிற்பங்கள் உள்ளன. கொங்கு நாட்டுப்பாடல் பெற்ற தலங்களுள் ஒன்றாகிய அவிநாசியில் உள்ள இறைவன் பெயர் அவிநாசி லிங்கேசுவரர் ஆகும். இங்கு கருணாம்பிகை அம்மன் கோயில் வலப்புறமாக அமைந்துள்ளது. இக்கோயில் கொடுங்கையிலும், தூண்களிலும் பல அழகிய சிற்பங்கள் உள்ளன. இறைவன் உருவங்கள் மட்டுமின்றி விலங்குகளின் உருவங்கள் அமைந்துள்ளன. சுந்தரர் முதலை வாய்ப் பிள்ளையின் சிற்பங்கள் இக் கோயிலும் குளக்கரையிலும் மற்றும் அவிநாசிக் கருகில் உள்ள சேவூர், திருமுருகன் பூண்டியிலும் இச்சிற்பங்கள் அமைந்துள்ளன. சுந்தரர் முதலையின் வாயிலிருந்து பிள்ளையை மீட்ட புராணக்கதையோ அல்லது அப்பகுதியில் வழங்கி வந்த நாடோடிக் கதையோ இதற்குக் காரணமாக இருக்கலாம். மேலும் இங்கு நாககன்னிச் சிற்பமும், ஊர்த்துவதாண்டவர், வீரபத்திரர், பைரவர், ஆலங் காட்டுக்காளி, விநாயகர், யானைஉரி போர்த்த மூர்த்தி ஆகிய சிற்பங்கள் உள்ளன. மேலும் இக்கோயில் கொடுங்கையில் கண்ணப்பர், சிறுத்தொண்ட நாயனார் ஆகியோர் வரலாறு உணர்த்தும் சிற்பங்கள் உள்ளன. இவை பெரிய புராணத்தோடு சில் இடங்களில் ஒன்றுபட்டும் சில இடங்களில் வேறுபட்டும் உள்ளன.[23] சேவூர் கபாலீசுவரர் கோயிலில் இரு துவாரபாலகர் சிலைகளும் கலைச்சிறப்புடையவை.

சிவத்தலங்களில் மட்டுமின்றிச் சமணத் தலங்களிலும் சிற்பங்கள் சிறப்பாக அமைந்துள்ளன. கொங்கு சமணத் தலங்களுள் விசயமங்கலம் மிகப் பெரியது. இங்கு சந்திரபிரபா என்ற சமணத் தீர்த்தங்கரர் கோயில் ஒன்று உள்ளது. இங்கு ரிஷபதேவர், ஆனந்தநாதர், மகாவீரர் முதலிய தீர்த்தங்கரர் உருவங்களும், குஷ்மாண்டின் என்ற இயக்கியின் கோயிலும் அமைந் துள்ளன.[24] ஆதிநாதருடைய வாழ்க்கை வரலாறு முழுவதும் கோயில் கூரையில் செதுக்கப்பட்டுள்ளன. இவை கி. பி. 12-ம் நூற்றாண்டைச் சேர்ந்தவையாகும்.

அகிலாண்டபுரத்தில் இருந்த அய்யனார் சிலை தற்போது ஈரோடு கலைமகள் கல்வி நிலையத்தில் உள்ளது. அழகான பீடத்தின் மீது அய்யனார் அமர்ந்துள்ளார். அய்யனாரின் இரு

புறமும் அய்யானருக்குச் சமமாக உள்ள பீடத்தில் இருபுறமும் பெண்கள் அமர்ந்துள்ளனர்.[25]

பெருந்துறை வட்டத்தைச் சார்த்த ஈங்கூரில் குட்டைத் தோட்டத்தில் இருந்து ஐயனார் சிலை கிடைத்துள்ளது. இந்த ஐயனாரைக் கி. பி. 1156 ஆம் ஆண்டு போத்தன் செய்யான் என்பவன் எழுந்தருளச் செய்தான். இவனுக்குக் குலோத்துங்கப் பல்லவரையன் என்பது அரசன் அளித்த பட்டப் பெயராகும். இவன் ஈங்கூரைச் சேர்ந்தவன். இவன் இந்த ஐயனார் சிற்பத்தைக் குலோத்துங்க சோழனுடைய ஏழாம் ஆட்சியாண்டில் செய்தான். இந்த விவரம் அனைத்தும் இந்த அய்யனாரின் அருகே வெட்டப்பட்டுள்ள கல்வெட்டு மூலம் அறியமுடிகிறது.[26]

## நாட்டார் வழக்காற்றுச் சிற்பங்களும் பிறவும்

ஆழங்காண முடியாத இயல்பினது மனிதமனம். மனித மனத்தின் உள்ளே நிகழும் அக நிகழ்ச்சிகளைப் புறத்தே வெளிப் படுத்துவன கலைகள் சிற்பம், ஓவியம், நாட்டுப்புறப் பாடல், நாடோடிக்கதைகள், ஆடல், பாடல், இசை போன்ற கலைகளின் மூலமாக மனித எண்ணங்கள் வெளிப்படுத்தப்படும் கலையும், வாழ்வும், ஒன்றோடொன்று பின்னிப் பிணைந்தவை. அதனால் தான் கலை வாழ்வோடு ஒன்றிப் பழங்காலம் முதல் இன்று வரை போற்றப்பட்டு வருகிறது. அத்தகைய கலைகளுள் ஒன்றாகிய சிற்பக்கலை மூலம் நாட்டார் சமயம், வழக்காறு, நம்பிக்கை, ஆகியன பற்றி அறியமுடியும்.

## ஆடல் பாடல் சிற்பங்கள்

தமிழ் நாட்டில் கலைகள் எல்லாத்துறையிலும் சிறந்து விளங்கின. அவற்றுள் இசைக் கலையும், நாட்டியக்கலையும், நாடகக் கலையும் சிறந்திருந்தன. இவை மக்களின் வாழ்வில் ஒரு பகுதியாக இருந்தன. இசை அனைவர் உள்ளத்தையும் ஈர்க்க வல்லது. குழல், யாழ், வீணை, முழவு, குடாமுழா, உடுக்கை, எக்காளம், ஆகிய இவை ஒவ்வொன்றும் ஒவ்வொரு வகையான இசையை வெளிப்படுத்தும். இத்தகைய இசையுடன் ஆடலும் பாடலும் சேரும் போது மக்கள் உள்ளங்களைக் கவர்வது இயற்கை. இவ்வகையிலேதான் வீரர் கதைகளும் புராணக்கதை களும் பாடப்பட்டன. இதனால் மக்கள் உள்ளங்களில் அப்பாடற்

பொருள் பதிந்து, வீரத்தை. பக்தியை உண்டாக்கின. வீரர்களின் கதைப் பாடல்களைப் பாடுவதோடு மட்டுமின்றி நடித்தும் காட்டினர். இதனால் ஆடல், பாடலோடு நாடகக் கலையும் வளர்ந்தது. விழாக் காலங்களிலும், பிற காலங்களிலும் கோவில்களிலும் இசையுடன் இறைவன் நடனங்களையும், பிற நடனங்களையும் நடன மாதர்கள் நடத்திக் காட்டினர். இவை மக்களின் செவிக்கும், மனத்திற்கும் விருந்தாய் அமைந்தன. இதனால் இக்கலை மீது மக்களுக்கு ஈர்ப்பு உண்டாயிற்று. பின்னர் இவ்வாடல் பாடலை உணர்த்தும் சிற்பங்கள் கோவில்களில் அமைக்கப்பட்டன.

அவிநாசி லிங்கேசுவரர் ஆலயத்தில் ஆடல், பாடல் சிற்பங்கள் பல உள்ளன. இக் கோயில் கொடுங்கையில் மத்தளம் கொட்டும் உருவம், அதனை அடுத்து நின்ற நிலையில் உள்ள உருவம், ஆகியன சிற்பங்களாக அமைந்துள்ளன. நின்ற நிலையில் உள்ள உருவம் பாடல் பாடுபவராக இருக்கலாம். ஆடல், பாடல் இசை ஆகிய மூன்றும் ஒருங்கே நடைபெற்றதை இச் சிற்பங்கள் உணர்த்துகின்றன.[27] இத்தகு சிற்பங்கள் களந்தை, திங்களூர், சேவூர் முதலிய ஊர்களிலும் உள்ளன.

**காமச்சிற்பங்கள்**

தமிழ் நாட்டுக் கோயில்களில் நுழைவு வாயில்களிலும், தூண்களிலும், கோபுரங்களிலும், தேர்களிலும் ஏதேனும் ஒரு இடத்திலாவது சிற்றின்பச் சிற்பங்கள் இடம் பெற்றிருக்கும். தமிழ் நாட்டில் பிற்பகுதிகளில் நாயக்கர் காலத்தில்தான் காமச் சிற்பங்கள் கோவிலில் இடம் பெறத் தொடங்கின. ஆனால், கொங்கு நாட்டில் சோழர் காலத்திலேயே இத்தகு காமச்சிற்பங்கள் சிவன் கோயிலில் அமைக்கப்பட்டன. இத்தகு காமச் சிற்பங்கள் அவிநாசி லிங்கேசுவரர் ஆலயத்து தூண்களிலும் கொடுங்கையிலும் அமைந்துள்ளன. இத்தகு காமச்சிற்பங்கள் வரலாற்றுக் காலம் முழுமையும் இருந்துள்ளன. கொங்கு நாட்டுச் சிவாலயங்களில் காணப்படும் காமச் சிற்பங்கள் உலகியல் வழக்காக இருந்து நாளடைவில் பெருந்தேவ சமயத்தில் இணைந்தது. சிறு தெய்வங்களை வழிபட்டுக் கல்விச் சடங்கு செய்த கல்லா மாக்களையும், சைவ சமயத்தில் சேர்த்துக்கொண்ட போது, அவர்களுடைய வளமைச் சடங்கு கோயில்களுக்குச் சென்று குடியேறியது. அவ்வகையில் அமைந்த இச்சிற்பங்கள் திங்களூர், களத்தை, ஆதித்தேச்சுரம் சேவூர், திருமுருகன் பூண்டி, கொழுமம் ஆகிய கோயில்களிலும் உள்ளன.[28]

பாம்புப் பிடாரன் ஒருவன் மகுடி ஊதுவதும், அவன் முன் கூடையிலிருந்து பாம்பு தலை தூக்கும் வண்ணமும் அமைத்துள்ள சிற்பம் அவிநாசியில் உள்ளது.[29] மேலும் வித்தை காட்டுவோர் சிற்பங்கள் கொங்கு நாட்டுக் கோயில்கள் பலவற்றில் காணப் படுகின்றன.

உடலை வளைத்து வித்தை காட்டும் பழக்கம் தற்பொழுதும் உண்டு. அவர்களைக் கழைக்கூத்து ஆடுவோர் என்பர். இவர்கள் உடலை வளைத்து வித்தை காட்டியும், கத்தி போன்ற கூர்மை யான ஆயுதத்தின் மீது அமர்ந்தோ, நின்றோ அல்லது படுத்தோ வித்தை காட்டுவர். அப்பொழுது பறையும் முழக்கப்படும். இவ்வாறு வித்தை காட்டும் வழக்கம் கொங்கு நாட்டில் இருந்துள்ளது என்பதனை உணர்த்தும் வண்ணம் அமைந்துள்ள சிற்பங்கள் கொங்கு நாட்டுக் கோயில்களில் உள்ளன. இவை மட்டுமின்றி வேட்டுவர், குறவன், குறத்தி சிற்பங்களும் திருமுருகன் பூண்டி, சேவூர், அவிநாசி, திருச்செங்கோடு, தாரமங்கலம் ஆகிய ஊர் களிலும் உள்ளன. யாளி, குரங்கு, பல்லி, யானை, காமதேனு, பறவைகள் போன்றவற்றின் சிற்பங்களும் கோயில்களில் உள்ளன.

சிற்பக் கட்டங்களில் பல்வேறு உறுப்புகளை அலங்கரிக்கவும் அணி பெறச் செய்யவும் பலவித இலை. கொடி, முதலியவற் றுடன் சிற்பி தன் கற்பனையையும் சேர்த்து அமைக்கும் சிற்ப செதுக்கிற்குக் கருக்கணி என்று பெயர். இத்தகு அழகிய கருக் கணிகள் பேரூர், சேவூர், அவிநாசி திருமுருகன் பூண்டி முதலிய தலங்களில் உள்ளன.

நாட்டு வழக்கிலிருக்கும் ஆடல், பாடல் நிகழ்ச்சிகள் சமு தாயத்தின் சிறப்பிடம் பெற்றுத் திகழ்ந்த வீரர்கள், மக்களின் நம்பிக்கைகள், சமுதாயத்தில் நடைபெறும் சடங்கு முறைகள், கழைக்கூத்து, பாம்பை வைத்துப் பிழைப்பு நடத்தும் செயல்கள், வேடுவர்கள் அவர்களின் வழிபாடுகள் இவைகள் எல்லாம் நாட்டார் வழக்காறு ஆகும்.

## செப்புத் திருமேனிகள்

மண்ணிலும் கல்லிலும் உருவங்கள் செய்வதைப் போலச் செம்பிலும் உருவங்களை மக்கள் செய்யத்தொடங்கினர். எல்லாக்

கலைஞர்களுக்கும் காரணமாய் இருப்பவன் இறைவன் என்பது சமயக்கொள்கை. இதனையே நாவுக்கரசரும், ''கலைப்பொருளாகி நின்றீர்''[30] என்றும் ''எட்டெட்டு இருங்கலையும் ஆனான் கண்டாய்''[31] என்றும் பாடியுள்ளார். சிற்பி இறைவனது திரு வுருவத்தை, மனக்கண்ணால் கண்டதை செப்புத் திருமேனிகளாக, கலையழகு மிகுந்ததாகச் செய்தான். எனவே படிமக்கலை பெரும் பாலும் சமயச் சார்பு உடையது. மக்கள் அப்படிமங்களை இறை வனாகவே எண்ணி வழிபடுகின்றனர். இத்தகு திருமேனிகள் கொங்கு நாட்டில் பல உள்ளன.

அவிநாசியில் உள்ள கி. பி. 12 ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த திருவாதிரை அம்மன், கி. பி. 15 ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த பைரவர், நடராசர், சிவகாமி அம்மன் ஆகிய செப்புத்திருமேனிகள் உள்ளன. இங்கு விஜய நகர காலத்திய மாணிக்கவாசகர் திரு மேனியும் உள்ளது. பழனி ஆவுடையார் கோயிலில் உள்ள சந்திரசேகரர், சோமாஸ்கந்தர், சேவூரில் உள்ள சந்திரசேகரர் செப்புத்திருமேனிகள் பழமையும் சிறப்பும் வாய்ந்தவை.

கொடுமுடி மகுடேசுவரர் கோயிலில் பத்துக்கும் மேற்பட்ட செப்புத்திருமேனிகள் உள்ளன. அவை முப்புரம் எரித்த முதல்வன், திரிபுர சுந்தரி, சதுர நடமிடும் நடராஜர், திருமால், கண்ணப்பர், ஆகிய உருவங்கள் கி. பி. 10-ம் நூற்றாண்டில் வடிக்கப்பட்டவை. மற்றவை பிற்காலத்தைச் சேர்ந்தவை. கொடுமுடிக் கலைச் செல்வங்கள் உலகம் போற்றும் சிறப்புடையவை. இவ்வூரில் கண் ணப்பர் சிற்பங்கள் உள்ளன.

கோவைக்கு அருகிலுள்ள சிங்காநல்லூரில் உள்ள உலகளந்த பெருமானின் செப்புத் திருமேனியும், குரங்குத் தளியில் உள்ள கூத்தாடு தேவரும் அழகிய திருமேனிகளாகும். இவையெல்லாம் கொங்கு நாட்டு படிமக் கலைக்குச் சான்றாகத் திகழ்கின்றன.

## நாயக்கர் காலம்

சிற்பங்களில் நன்கு வளர்ச்சி பெற்ற நிலையை நாயக்கர் காலச் சிற்பங்களில் காணலாம். தாரமங்கலத்தில் உள்ள கோயில் களுள் கயிலாச நாதர் கோயில், இளமேசுவரர் கோயில் ஆகியவை குறிப்பிடத் தக்கவையாகும். கயிலாச நாதர் கோயிலில் உள்ள குதிரைத் தூண்கள் நாயக்கர் காலத்தவை போன்றுள்ளன. இங்குள்ள மாளிகைத்தூண்களில் பார்வதி, பிச்சாடர், விஷ்ணு,

கணபதி, சிவன், தட்சிணாமூர்த்தி, காளி, சிவபத்தினி, ஊர்த்துவ தாண்டவர், சிற்பங்கள் உள்ளன. இங்குள்ள மண்டபத்தூணில் அமைந்துள்ள கம்பராமாயணக்காட்சி சிறப்பாக வடிக்கப்பட்டுள்ளது. வாலி சுக்கிரீவன் சண்டைக் காட்சி ஒரு தூணில் சிறப்பாக வடிக்கப்பட்டுள்ளது. அதன் எதிரில் உள்ள தூணில் இராமன் வில்லை நாணேற்றி நிற்கும் காட்சி செதுக்கப்பட்டுள்ளது. இராமன் நிற்கும் தூண் அருகில் நின்றால் வாலி சுக்கிரீவன் சண்டைக் காட்சி தெரியும். ஆனால் வாலி சிற்பத்தூண் அருகில் நின்றால் இராமன் உருவம் தெரிவதில்லை. இத்தகைய சிறப்பு வாய்ந்த சிற்பங்களை நோக்கும் போது சிற்பியின் ஆற்றல் புலப் படுகிறது.[32]

கோவைக்கு மேற்கில் உள்ள பேரூர் பட்டிப்பெருமான் கோயிலில் பல சிற்பங்கள் உள்ளன. இக்கோயிலில் வட பக்கம் தூண்களால் ஆகிய பெரிய மண்டபம் உள்ளது. இம்மண்டபத்தை ஒட்டித்தான் சிற்றம்பலம் உள்ளது. அதன் முன் அமைந்துள்ள எட்டுத்தூண்களில் ஐங்கரன், ஆறுமுகன், அக்னி வீரபத்திரர், அகோர வீரபத்திரர், யானை உரி போர்த்த மூர்த்தி, பிச்சாடர், ஊர்த்துவதாண்டவர், ஆலங்காட்டுக்காளி, ஆகியவை சிறப்பான சிற்பங்களாகும். இச்சிற்பங்களில் விரல்கள், நகங்கள், இயல்பாக அமைந்துள்ளதைப் போன்றே செதுக்கியுள்ளமை வியப்புடையச் செய்வதாக அமைந்துள்ளன.

## மரச்சிற்பங்கள்

மண், கல், உலோகம் இவற்றில் உருவம் அமைப்பதைப் போலவே மரத்திலும், சிற்பங்களைச் செதுக்கியுள்ளனர் சிற்பிகள். திருக்கோயில் கதவுகளிலும், தேர்களிலும், பிற இடங்களிலும் மரத்தாலான சிற்பங்களைச் செதுக்கி வைத்துள்ளனர். பேரூர், அவிநாசி போன்ற ஊர்களில் உள்ள தேர்கள் இதற்குச் சான்று களாகும். பேரூர் பழைய தேர் சிதைந்த பின் அதிலுள்ள சிற்பங்களைக் கொண்டு வந்து சாந்தலிங்கர் திருமடத்தில் வைத் துள்ளனர்.[33] அச்சிற்பங்களுள் ஒன்று இராமர் திருமுடி சூடும் காட்சியாகும். அதில் இராமனும் சீதையும் அமர்ந்த நிலையில் உள்ளனர். இராமபிரான் சுகாசன நிலையில் அமர்ந்துள்ளார். மார்பில் பூணூல் காணப்படுகிறது. இடுப்பிற்குக் கீழ் உள்ள ஆடை சிறப்பாகச் செதுக்கப்பட்டுள்ளது. நெற்றியில் நாமம் அமைந்துள்ளது. சிங்காசனத்தை அநுமன் தாங்குமாறும்,

அங்கதன் உடைவாளைக் கையிற் பிடித்த வண்ணமும், பரதன் வெண் கொற்றக் கொடை பிடிக்கவும், இருபக்கமும் இருவர் கவரி வீசவும், பேழையிலிருந்து மௌலியை எடுப்பது போலவும் சிற்பம் செதுக்கப்பட்டுள்ளது. இச்சிற்பத்தின் கீழ் ஒரு பெண் அஞ்சலி ஹஸ்தமாக அமைந்துள்ளது. இதனைப் பார்க்கும் போது,

''அரியணை அனுமன் தாங்க
அங்கதன் உடைவாள் பற்றப்
பரதன் வெண்குடை கவிக்க இருவரும் கவரி வீச
விரைசெறி கமலத்தாள் சேர்
வெண்ணெய்மன் சடையன் தங்கள்
மரபுளோர் கொடுக்க வாங்கி
வசிட்டனே புனைந்தான் மௌலி''[34]

என்ற கம்பராமாயணக் காட்சியை மனத்தினில் கொண்டே இச் சிற்பத்தை செதுக்கியிருக்கலாம். பேரூர்க் கனக சபையிலும் மரச் சிற்பங்கள் உள்ளன.

## முடிவுரை

கொங்கு நாட்டில் யவனர்கள் போக்குவரத்து மிகுதியும் இருந்த காலம் ஒன்றிருந்தது. யவனர்கள் கொண்டு வந்த கலைப் பொருட்கள் கொங்கு நாட்டில் பல இடங்களில் கிடைத்துள்ளன. வெள்ளலூரில் ரோமானியக் குதிரை வீரன் உருவம் பொறித்த மோதிரம் கிடைத்தது. ஆனால் யவனர் கலையின் செல்வாக்கு இப்பகுதியில் குறைவாகவே காணப்படுகிறது அல்லது இல்லை யென்றே கூறலாம். கிறிஸ்து சகாப்தத்தின் முன்பின் காலங்களில் சிறப்புற்ற தட்சசீலத்தில் (வடமேற்கு இந்தியா) யவனக்கலை இந்தியக்கலையின் கருத்திலும் வடிவத்திலும் பாதிப்பை ஏற் படுத்தியது.[35] அப்படி ஒரு பாதிப்பு கொங்கில் இல்லை.

கொங்குநாடு எல்லா கலைகளையும் தன்னகத்தே கொண்டு விளங்குகிறது. வரலாற்றுக்கு முற்பட்ட காலத்தைச் சேர்ந்த ஓவியங்கள், சுடுமண் பொம்மைகள், பெருங்கற்சின்னம் முதற் கொண்டு இறைவன் எழுந்தருளியுள்ள திருக்கோயில் வரை உள்ள அனைத்தும் சிற்பக்கலைக்குச் சான்றுகளாகும். கொங்கு நாடு ஓவியம், மண், கல், உலோகம், மரம் முதலிய எல்லாவற்றி னாலும் செய்யப்பட்ட சிற்பங்களைக் கொண்ட கலைக் கோட்ட மாகத் திகழ்கிறது.

## அடிக்குறிப்புகள்

1. புலவர் குழந்தை கொங்குநாடு ப 76.
2. வித்துவான் தெய்வ சிகாமணி வே. ரா., கொங்குமண்டல சதக முன்னுரை.
3. Devangana Desai, Erotic Sculptures of India P. 49.
4. The Hindu. 29th Oct 1979.
5. R. Nagaswamy, Rare Bronzes from Kongu Country in Lalit Kala, No. 9, 1961, PP 7-10.
6. S. P. Kandasamy, The Kongu and the Imperial Cholas, Paper, Presented in Seminar on Rajaraja I held at Tanjore.
7. I K. Sarma, A Chaturmukha Linga from Amaravati. and the splead of Lakulise Parupattan in Madhu; Recent researchs in Indian Archaeology and art History Edited by M S. Nagaraja Rao, P. 229.
8. Dr. R. Nagaswamy, Art and culture of Tamil Nadu, P. 91.
9. R. Poongundran. Registering Officer. Dept of Archaeology, Coimbatore-9.
10. உதயணன், இ. முட்டத்து 'நாகேச்சுரம் ஓர் ஆய்வு' (எம். பில் ஆய்வேடு).
11. பூங்குன்றன், R. 'தொல்பொருள் ஆய்வுத்துறை பதிவு அலுவலர் நேர் காணலின் போது கூறியது.
12. The Hindu, 14th march 1980.
13. மலர்விழி, கோ. தி. அவிநாசிக் கோயில் சிற்பங்கள் (எம். பில் ஆய்வேடு) ப. 8.
14. இராமசாமி, ஐ, போளுவாம்பட்டி, தனியார் கண்டுபிடிப்பு.
15. உதயணன், இ, எம். பில் ஆய்வேடு, ப. 7.

16. நடன காசிநாதன், கு. தாமோதரன் (தொகுப்பு), கல்வெட்டு ஓர் அறிமுகம், தமிழ்நாடு அரசு தொல் பொருள் ஆய்வுத் துறை வெளியீடு, 1976, ப. 44.

17. பூங்குன்றன், R. சேலம் (பக்க எண் இல்லை).

18. நாகசாமி, A. ஓவியப்பாவை.

19. பூங்குன்றன், R. தொல்பொருள் ஆய்வுத்துறை பதிவு அலுவலர் நேர் காணலில் கூறியது.

20. இச்சிற்பங்கள் தொல்பொருள் ஆய்வுத்துறை கோவை அலுவலகத்தில் உள்ளன.

21. பூங்குன்றன் R. தொல்பொருள் ஆய்வுத்துறை பதிவு அலுவலர் நேர் காணலின் போது கூறியது.

22. மேற்படி

23. மலர்விழி, கோ. தி, அவிநாசிக் கோயில் சிற்பங்கள், ப. 70

24. சண்முகப் பிரகதன் (பதிப்பாசிரியர்) ஆய்வுத்தேன், கொங்குப் பதிப்பகம், சென்னை 1978., ப. 4

25. புலவர் இராசு, கலைமகள் கலைக்கூடம், பக்க எண் இல்லை

26. மேற்படி

27. மலர்விழி, கோ. தி., அவிநாசிக் கோயில் சிற்பங்கள். ப. 83

28. மேற்படி ப. 97

29. மேற்படி ப. 98

30. நாவுக்கரசர் தேவாரம். திருவீழி மழலை, திருவிருத்தம் பாடல் எண். 3, வரி 2

31. மேற்படி, திருக்கொட்டையூர் திருத்தாண்டகம், பாடல் 9 வரி 4

32. பூங்குன்றன் R., தாரமங்கலம், (பக்க எண் இல்லை)

33. மலர்விழி, கோ. தி. அவிநாசிக் கோயில் சிற்பங்கள் ப. 16

34. கம்பராமாயணம், யுத்த காண்டம், திருமுடி சூட்டுப்படலம், பாடல் எண். 38

35. மலர்விழி, கோ. தி. அவிநாசிக் கோயில் சிற்பங்கள் ப. 17

---

# 4. கொடுமணல் அகழாய்வு

கா. ராஜன்
கல்வெட்டியல் துறை,
தமிழ்ப் பல்கலைக் கழகம்
தஞ்சாவூர்.

மனித குல வரலாற்றின் வளர்ச்சியை வரலாற்றுக்கு முந்திய காலம், வரலாற்றுக்காலம் என இரு பகுதிகளாகப் பகுத்து ஆய்வு செய்வர் தொல்லியல் அறிஞர்கள். எழுத்து வடிவ ஆவணங்கள் இல்லாத காலம் வரலாற்றுக்கு முற்பட்ட காலம் என்றும் எழுத்து பூர்வ ஆவணங்கள் கிடைக்கின்ற காலம் வரலாற்றுக்காலம் என்றும் கருதப்படுகிறது. வரலாற்றுக்கு முற்பட்ட காலம் பழைய, இடை, புதிய கற்காலங்கள் என வகைப்படுத்தப்படும். இதன் பின்னர் பெருங்கற்காலம் என்றும் ஒரு கால கட்டம் தமிழகத்தில் நிலை கொண்டது. குறிப்பாக கொங்கு நாட்டில் இதுவரை பெருங் கற்காலப் பண்பாட்டிற்கு முந்தியகாலச் சான்றுகள் ஏதும் கண்டறியப்படவில்லை.

சங்க இலக்கியங்களில் பெருங்கற்காலப் பண்பாடு பற்றிய குறிப்புகள் பரவலாகக் குறிப்பிடப்பட்டுள்ளன. பெருங்கற்காலப் புதை குழி வழக்கங்களைக் குறிப்பிடும்போது கல்சூழ் பதுக்கை,

பரல் உயர் பதுக்கை, நெடுநிலை நடுகல், கற்குவை, கற்திட்டை என்று பலவாறாகக் கூறப்படுகிறது. இவ்வகை புதை குழிகள் கொங்கு நாட்டில் மிகுந்து காணப்படுகின்றன. இத்தகு சான்றுகள் மிகுந்து காணப்படுகின்ற இடங்களில் கொடுமணலும் ஒன்று.

பதிற்றுப்பத்தில்,

''கொடுமணம் பட்ட வினை மான் நன் கலம்'' என்னும் குறிப்பு கொடுமணலில் பலவித அரிய வகை மணிக்கற்கள் தோன்று தொட்டு கிடைப்பதைச் சுட்டுகிறது. இவ்வூரில் முதன் முதலாக எங்கள் துறையின் இணைப்பேராசிரியர் திரு. செ. இராசு அவர்களும், கலைமகள் கல்வி நிலைய தாளாளர் செல்வி. முத்தையா அவர்களும் பரந்த அளவில் கள ஆய்வு செய்து இவ்வூரின் முக்கியத்துவத்தை வரலாற்று உலகிற்கு அறிமுகம் செய்தனர். ரோமானிய (சுடுமண்) உருவச்சிலை, ரோமானியக்காசு ஆகியவை இவர்களது கண்டுபிடிப்புகளில் குறிப்பிடத்தக்கவை.

இந்த ஆய்வின் அடுத்தக்கட்டமாக கொங்கு நாடு முழுவதும் பரந்த அளவில் எம் துறையில் களஆய்வு, மேற்கொள்ளப்பட்டு பெருங்கற்காலப் பண்பாட்டுச் சின்னங்கள் உள்ள இடங்களில் சுமார் 150க்கு மேல் கண்டறியப்பட்டன.

கொங்கு நாட்டின் பெருங்கற்காலப் பண்பாடு பற்றிய முழுமையான செய்திகளை அறியும் நோக்கத்தில் கொடுமணலில் அகழாய்வுப்பணி மேற்கொள்ளப்பட்டது. 1985, 1986 ஆம் ஆண்டுகளில் இரண்டு கட்டமாக அகழாய்வு செய்யப்பட்டது.

பெரியார் மாவட்டம், பெருந்துறை வட்டத்தில் சென்னிமலைக்குத் தென் மேற்கே 15 கிலோ மீட்டர் தொலைவில் நொய்யல் ஆற்றின் வடகரையில் அமைந்துள்ள கொடுமணல் என்ற ஊரில் நடத்திய அகழாய்வில் பல புதிய கண்டுபிடிப்புகள் செய்யப்பட்டு உள்ளன.

இவ்வூர் சங்க இலக்கியத்தில் கொடுமணம் என்னும் பெயரில், விலை உயர்ந்த கற்களைக் கொண்டு அணிமணிகள் செய்யும் புகழ் பெற்ற இடமாக வருணிக்கப்பட்டுள்ளது. இவ்வூரின் கிழக்கே ஒரு கிலோ மீட்டர் தொலைவில் உள்ள மேட்டுப்பகுதியில் பழைய ஊர் இருந்தமைக்கான எச்சங்களும், அதனருகாமையில் பெரிய கல்லறைகளைக் கொண்ட ஈமக்காடும் உள்ளன.

சுமார் ஐம்பது ஏக்கர் பரப்பளவு உள்ள ஊர் இருக்கைப் பகுதியில் மொத்தம் பதினாறு இடங்களில் அகழாய்வு செய்யப் பட்டது. இக்குழிகளில் பல அடுக்குகளில் சுண்ணாம்புச்சரளைக் கல்லும், செம்மண்ணும் கொண்டு கெட்டிப்படுத்தப்பட்ட வீட்டுத் தரைகள் காணப்பட்டன. இவைகளோடு சேர்ந்து தூண்கள் நட்டு இருந்து குழிகளின் அடையாளங்கள் உள்ளன. மேலும் மண் சுவரின் அடிப்பகுதி சிறிது காணப்பட்டது. சில நிலைகளில் செங் கற்களும் ஒருவகையான கூரைத் தட்டோடுகளும் கிடைத்துள்ளன. தானியங்களைச் சேமித்து வைப்பதற்கு நிலத்திற்கடியில் வெட்டப் பட்ட வட்டவடிவமான பெரிய குழிகள் காணப்படுகின்றன.

சிலசமயம் வீட்டிற்கு அருகிலும் இறந்தவர்களைப் புதைத் தார்கள் என்று தெரிகிறது. ஒரு வீட்டிற்கருகில் வயதான ஆணின் எலும்புக்கூடும், ஒரு குழந்தையின் எலும்புக்கூடும் கண்டெடுக்கப் பட்டன. வயதான ஆணின் எலும்புக்கூடு கால்களை மடித்து அமர்ந்த நிலையில் இருப்பதுபோல காணப்படுகிறது. குழந்தை யின் எலும்புக்கூடு வடக்கு நோக்கி ஒருக்களித்த நிலையில் குறுக் கிக் கிடத்தப்பட்டு இருந்தது. வயதான ஆணின் வலது கைச் சுண்டு விரலில் ஒரு செம்பு மோதிரம் இருந்தது குறிப்பிடத் தக்கது.

மேற்கூறிய ஆய்வுக்குழிகளில் வண்ணக்கோடுகள் தீட்டப்பட்ட கருப்பு-சிவப்புப் பானை ஓடுகள் நிறைய கண்டெடுக்கப்பட்டன. இவற்றோடு சில ரோமானிய பானைச் சில்லுகளும் (Rouletted Pottery) இருந்தன. கருப்பு-சிவப்பு ஓடுகள் பலவற்றில் பழைய தமிழ் எழுத்துக்கள் (தென்பிராமி) கீறி எழுதப்பட்டிருந்தன. இவற் றில் "கண்ணன் ஆதன்", "வருணிய் அகல்", "பண்ணன்", "நிகம", "விசாகி", "கூலந்தை வம்பன் அகல்" போன்ற வாசகங்கள் காணப்படுகின்றன.

இரும்பினால் செய்யப்பட்ட மணிகள், அம்பு நுனி, கத்தி, அரம், உளி, கம்பி, ஆணி, வளையங்கள் போன்ற பொருள் களும், செம்பினால் செய்யப்பட்ட சிறிய ஒலி மணி, துளையிடும் ஊசிகள், மீன் தூண்டில், சுருள் வடிவமான காதுத்தொங்கட்டான், கை விரல் மோதிரம் ஆகியவையும் கிடைத்துள்ளன.

இரும்புத் தாதுவை உருக்கி, காய்ச்சிப் பல பொருட்களைச் செய்தமைக்கான தடையங்களும் கிடைத்துள்ளன. பளிங்குக்கல், கார்னீலியன், நீலம், பெரில், ஜேஸ்பர் முதலிய அரிய கற்களைக்

கொண்டு செய்த மணிகள் கிடைத்தன. இவையாவும் இந்த ஊரிலேயே செய்யப்பட்டன என்பதை நிரூபிக்கும் வகையில் இக் கற்களின் கட்டிகளும், சில்லுகளும் பல நிலைகளில் காணப்பட்டன.

பவளத்தினாலும் அணிமணிகள் செய்யப்பட்டன. சங்கு கொண்டு செய்த வளையல்களும், பாசிகளும் கிட்டியுள்ளன. சுடுமண்ணால் சிறிய பம்பரங்கள் போல் செய்யப்பட்ட நூல் நூற்கும் க்ருவியான தக்கிளியினுடைய அடிப்பகுதிகள் பல இருந்தன. இவற்றில் ஓரிரண்டு இரும்புக்கம்பிகள் பொருத்தப்பட்ட நிலையில் பழையபடியே இருந்தன. சங்கினாலும் தக்கிளிகள் செய்யப் பட்டன என்று தெரிகிறது.

ஒரு குழியினுள் வெள்ளியால் செய்யப்பட்ட முத்திரை நாணயம் (Punch Marked Coin) கிடைத்தது. இதைப் போன்ற வேறொரு வெள்ளிக்காசு இந்த மேட்டின் மேற்பரப்பில் இருந்தும் கிடைத்தது. இந்தக்காசுகள் கி. மு. முதல் அல்லது இரண்டாம் நூற்றாண்டைச் சேர்ந்தவை என்று சொல்லலாம்.

அருகில் உள்ள ஈமக்காட்டில் கற் குவியலோடு கூடிய நூற்றுக்கு மேற்பட்ட கற்பதுக்கைகள் சுமார் நூறு ஏக்கர் பரப்பளவில் காணக் கிடக்கின்றன. இவைகளில் ஆறு பதுக்கைகள் அகழப்பட்டன. (இப்பதுக்கைகள் இறந்தவர்களின் உடலை முழுமையாகவோ, சில எலும்புகளையோ புதைக்கச் செய்யப்பட்ட புதைகுழிகளாகும்) இதில் ஒரு பதுக்கை கற்பலகைகளால் ஆன சுமார் 14 மீட்டர் விட்டம் கொண்ட வெளி வட்டமும், 13 மீட்டர் விட்டம் கொண்ட உள் வட்டமும் அதனுள் மையத்தில் மூன்று கல்லறைகளும் கொண்டிருந்தது. கல்லறைகள் மிகப் பெரிய கற் பலகைகளை வைத்து அறைகளாகக் கட்டப்பட்டிருந்தன. இவற்றில் இரண்டு பாகங்களாப் பிரிக்கப்பட்ட ஒரு பெரிய கல்லறையும், இதற்கு முன் புறம் பக்கவாட்டிற்கு ஒன்றாக இரு சிறிய அறைகளும், நடுவில் முற்றமும் போன்ற பகுதியும் இருந்தன. கல்லறைக்கும் உட்கல் வட்டத்திற்கும் இடையில் படையல் பொருட்களாக இரும்பினால் செய்யப்பட்ட கத்தி, கேடயம், வாள் போன்ற நீண்ட ஆயுதங்கள் இருந்தன. இரண்டு நீண்ட ஆயுதங்கள் கத்திரி வடிவில் ஒன்றுக்கு மேல் ஒன்றாக வைக்கப்பட்டிருந்தன. இவை இறந்தவர்களின் படைக்கலன்களாக இருக்கலாம். படையல் பொருட்களாக நிறைய மண்கலங்கள் கறுப்பு நிறத்திலும், சிவப்பு நிறத்திலும் மெருகூட்டப் பட்டு பளபளப்போடு காணப்பட்டன. இவற்றில் நான்கு கால் களைக் கொண்ட பெரிய சாடிகளும், உடுக்கை வடிவிலான

பாத்திரத் தாங்கிகளும், சிறிய குவளைகளும், மூடிகளும் இருந்தன. செம்பினால் ஆன ஒரு கிண்ணமும், தட்டும் இங்கு வைக்கப் பட்டிருந்தன. ஒரு சிறு குழியில் சாம்பல் மண்ணோடு பல நூற்றுக்கணக்கான கார்னீலியன் என்ற அரிய கல்லைக்கொண்டு செய்த மணிகளும், ஈயக் கம்பிச்சுருள் மாலையும் வைக்கப் பட்டிருந்தன. கல்லறைக்குள் இரும்பு ஆயுதங்களும், கார்னீலியன் மணிகளும், கலைமான் கொம்பு ஒன்றும், வேறு சில விலங்கு களின் எலும்புகளும் இடப்பட்டிருந்தன.

மற்றொரு பதுக்கைக் குழியில் கல்லறையைச் சுற்றி சுண்ணாம்புச் சரளைக் கற்களால் ஆன சுவர் இருந்தது. இக் கல்லறையிலும் வட்ட வடிவ கார்னீலியன் மணிகள் கிட்டின. மனித எலும்புக்கூட்டின் ஓரிரு பகுதிகள் இருந்தன. மூன்றாவது பதுக்கைக் கல்லறைக்குள் இரண்டு இரும்புக் கத்திகளும், அழகிய செம்புக்கரண்டியும், மணிகளும் இரண்டு சிறிய தங்க மோதிரங்களும் கிடைத்தன.

இந்த ஊரிருக்கைப் பகுதியும், ஈமக்காடும் ஏறக்குறைய கி. மு. மூன்றாம் நூற்றாண்டிலிருந்து கி. பி. மூன்றாம் நூற்றாண்டு வரையிலான காலப் பகுதியைச் சேர்ந்தவை என்பது இந்த அகழாய்வில் பெறப்பட்ட பழைய தமிழ் எழுத்துக்கள், முத்திரை நாணயம், மண்கல வகைகள், கதிரியக்க காலக்கணிப்பு ஆகிய வற்றிலிருந்து ஊகிக்க முடிகிறது. ரோமானிய நாட்டோடு தொடர்பு இருந்தது என்பதற்கு அந் நாட்டிலிருந்து கொண்டு வரப்பட்ட பானைகளின் சில்லுகள் சான்று பகர்கின்றன.

கார்னீலியன் கல், கடற் சங்கு, பவளம் போன்ற மூலப் பொருட்களும் தென்னிந்தியாவின் வேறு பல பகுதிகளிலிருந்து கொண்டுவரப்பட்டன என்று சொல்ல வேண்டும். இவை கொங்குப் பகுதியில் கிடைப்பதில்லை. ஆகவே கொடுமணல் ஒரு சிறந்த தொழிற்கூடமாகவும் உள்நாட்டு, வெளிநாட்டு வாணிகத்தொடர்பு மையமாகவும் திகழ்ந்திருந்தது எனலாம்.

இவ்வகழ்வாராய்ச்சி தமிழ் நாட்டின் தொன்மை வரலாற்றை அறிந்து கொள்ள பல முக்கிய சான்றுகளை வழங்கியுள்ளது. இவ்வூரில் மேலும் விரிவாக அகழாய்வு மேற்கொண்டால் தமிழக வரலாறு மேலும் விளக்கமுறும் என்று கருதப்படுகிறது.

** இக் கட்டுரை எழுதுவதற்கு அனுமதி அளித்து உறுதுணை புரிந்த கல்வெட்டியல் துறை பேராசிரியர் முனைவர் எ. சுப்பராயலு அவர்களுக்கும், இணைப்பேராசிரியர் புலவர் செ. இராசு அவர்களுக்கும் எனது இதயங்கனிந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

---

# 5. பெரிய புராணம் - கொங்கு மண்டல சதகங்கள் காட்டும் ஊர்ப் பெயர்ச் செய்திகள் - ஓர் ஒப்பீடு

---

டாக்டர் தா. வே. வீராசாமி, எம்.ஏ.பி.எச்.டி.,
பேராசிரியர் & தலைவர்,
தொகுப்பியல் துறை
முதன்மைப் பதிப்பாசிரியர் (பொ)
பேரகராதித்துறை
தமிழ்ப் பல்கலைக் கழகம்
தஞ்சாவூர்

**முன்னுரை :**

தமிழக வரலாற்றைக் கூறும் ஒரு சில தமிழிலக்கியங்களில் சேக்கிழாரின் பெரிய புராணம் தனிச் சிறப்புப் பெற்ற நூலாகும். சோழ நாட்டின் அமைச்சராக இருந்ததால் சேக்கிழார் (12 நூ.) பல செய்திகளை நன்கு கண்டறிந்து கூறுதற்கு வாய்ப்பேற்பட்டது[1]. அதனால் தமிழகத்தின் ஊர்கள் பற்றிய செய்திகளை நன்கு அறியமுடிகிறது. பெரிய புராணத்தில் காணும் செய்தி

களைக் கொங்குப் பேரறிஞர் சி. கே. சுப்பிரமணிய முதலியார் தம்முடைய பேருரை எழுதிய ஏழு தொகுதிகளால் மிகச்சிறப்பாக எடுத்துரைத்துள்ளார்.[2]

சிவத்தொண்டர்கள் பெருமையைப் பாடும் பெரிய புராணத்தில் காணப்பெறும் கொங்கு நாட்டு ஊர்கள் பற்றிய செய்திகள் கொங்கு நாட்டின் நிலைபற்றி அறியத் துணை புரிகின்றன.[3] பிற்காலத்தில் கொங்கு நாட்டின் சிறப்பை வெளிப்படுத்துவதைத் தம் தலையாய நோக்கெனக் கொண்ட நூல்கள் கொங்கு மண்டல சதகங்கள் என்ற பெயரில் வெளிவந்துள்ளன. அவற்றின் மூன்று தனி நூல்கள் முறையே கார்மேகக் கவிஞர், வாலசுந்தரக் கவிஞர் கம்பநாதசாமி ஆகியோரால் இயற்றப்பெற்றன.[4] இவற்றில் கொங்குபற்றி விரிவான செய்திகள் கிடைப்பினும் பெரிய புராணச் செய்திகளோடு ஒப்பிட்டுக் காணும்போது ஒரு சில உண்மைகள் கிடைக்கின்றன.

சேர நாட்டைச் சேர்ந்த அஞ்சைக்களத்தைக் கொங்கு மண்டலத்தைச் சார்ந்ததாக வாலசுந்தரக் கவிராயர் பாடியுள்ளார். இத்தகைய வரலாற்றுச் சிக்கல்கள் பிற்காலத்தில் ஆராயப்பெறும் பொருட்களுக்குக் களமாக அமையும்.

இங்கு முதலில் பெரிய புராணச் செய்திகள் தொகுக்கப்பெறும். பின்னர் கொங்கு மண்டலச் செய்திகள் இணைக்கப்பெறும்.[5]

**திருவஞ்சைக்களம் :**

கயிலை செல்லும் காலம் வந்ததும் சுந்தரர், சேரமான் திருமஞ்சனம் செய்யும்போது திருவஞ்சைக்களத்தை[6]த் தாம் மட்டும் அடைந்து (4255) இறைவன் ஆணையால் வந்த வெள்ளை யானை மீது ஏறிக் கயிலை புறப்பட்டார். அதனை அறிந்த சேரமான் குதிரை ஏறிச் சுந்தரரின் வெள்ளை யானையைத் தொடரக் குதிரையைச் செலுத்தினார் (4263).

இதனை ஒட்டிச் சிறு விளக்கம் தரும் வகையில் வாலசுத்தரக் கவிராயரின் கொங்கு மண்டல சதகம்.

'கலைக்கிடமான தமிழ்ப்பாடு சுந்தரர் காதல் நட்பால்
கொலைக்கிடமான நெறிநீங்கு வெள்ளைக் குதிரையின் மேல்
தலைக்கிடும் எண்ணெய் முழுகாமல் சேரன் தன்கயிலை...
மலைக்கு உடம்போடு சென்றான் அதுவும் கொங்கு மண்டலமே'[8]

எனப்பாடும்.

கருவூர் :

கருவூர் பற்றிப் பெரிய புராணத்தில் பல செய்திகள் கிடைக்கின்றன. தொன்னெடும் கருவூர் ஒளியும் அழகும் உள்ள வீதிகளமைந்த பழைய ஊர். இமயத்தில் புலி பொறித்த கரிகாலன் முதல் அநபாய சோழன் வரை முடிசூட்டும் சீர் படைத்த மரபின் வரும் மாநகரம். இதுபற்றிப் பெரிய புராணத்தில் நன்கு விளக்குகிறது. அவ்விளக்கம் பின்வருமாறு :

தேவர்களின் இந்திரப் பட்டினம் தாழ இந்நகரின் பெரிய மதில்கள் மேகங்களால் சூழப்பெற்றிருக்கும். மாளிகைகள் வானில் உயர்ந்திருக்கும். தூயமணிகள் வாயில்கள் சூழ்வன. சோலைகளில் மணம் மிகுந்திருக்கும் மகளிர் கூந்தலில் மலர்கள் சூழ்ந்திருக்கத்தெருவில் உலவுவர் (553). யானைகள் நீர்த்துறையிலாடும். மயில்கள் சோலைகளில் ஆடும். மகளிர் அரங்கில் ஆடுவர். அவர் குழலில் வண்டுகள் ஆடும். வீதிகளில் ஆடும் கொடிகள் கதிர்கள் மீது ஆடும். உலகம் கொண்டாடும் ஒப்பற்ற நகர வளமை இதுவாம் (554).

இவ்வூரிலுள்ள கோயில் ஆனிலைக் கோயில் (555). இவ்வூரில் பிறந்த இக்கோயிலில் இறைவனை எறிபத்த நாயனார் வழிபட்டார் (556).

திருஞானசம்பந்தர் இவ்வூர்க்கு வந்து இறைவன் மீது 'கொண்டெலாம்' என்ற பதிகம் பாடி வணங்கினார் (2237).

புகழ்ச்சோழ நாயனார் தம் முதல் தனி நகராம் இவ்வூரில் மங்கல நாளில் அரசுரிமைச் சுற்றமுடன் சேர்ந்து (3952), அத்தாணி மண்டபத்தில் திறை தந்த அரசர்க்குச் செயலுரிமைத் தொழில் அருளினார் (3955).

சிவனடியாராம் சிவகாமியார் கொணர்ந்த பள்ளித் தாமம் சிதைத்த களிற்றைக் கொன்று பாகரையும் கொன்ற எறிபத்தர் எதிரே சென்று 'என்னையும் கொன்றருளும்' எனப் புகழ்ச்சோழர் வாள் கொடுத்துத் திருத்தொண்டில் சிறந்த ஊர் கருவூர் (3956). போரில் கொணர்ந்த தலைகளில் சடையுடை அடியார் தலையும் இருக்கக்கண்டு புகழ்ச்சோழர் (3974). இவ்வூரில் தீ வளர்த்து அதில்புகுந்து இறையடி சேர்ந்தார்.

இத்துணைச் செய்திகளையும் பெரியபுராணம் கூறக் கொங்கு மண்டல சதகத்தில் கார்மேகக் கவிஞர் எறிபத்தர், சிவகாமி

யாண்டவன் கொணர்ந்த பூவைச் சிந்திய மதயானையின் துதிக் கையை வெட்டி அதனைக் கொன்றதையும் பின்னர் இறைவன் அதை எழுப்பியதையும் கூறுவர் (27).

### கொடிமாடச் செங்குன்றூர் *(திருச்செங்கோடு)*

கொடிமாடச் செங்குன்றூர் என்று சிறப்புப் பெறும் இன்றைய திருச்செங்கோடு என்ற ஊர்க்கு வந்து இறைவனைப் பணிந்து (2224) பின்னர்ச் சம்பந்தர் அருகிலுள்ள பல ஊர்களிலுள்ள இறைவனை வணங்கி மீண்டும் இவ்வூர்க்குத் திரும்பினார் (2225). இங்குச் சில நாள் தங்கியபோது அவருடன் வந்த பரிசனங்கள் குளிர்ச்சுரநோய் வருவதுபோல் உள்ளதை (2230) எடுத்துக் கூறவே சம்பந்தர் இறைவன் மீது பதிகம் பாடிச் 'சுரம் தீண்டாது' எனக்கூறவே (2233) அத்தீய பிணி தீர்ந்தது (2234).

ஆயின் கார்மேகக் கவிஞரின் சதகம் (13) உமையுடன் சிவன் அர்த்தநாரி வடிவுடன் இருப்பதைப்போற்றும். அடியார்களைத் தீண்டிய நளிர் சுரம் நீங்கச் சம்பந்தர் பாடியது தேயமுழுதும் வருத்தாது அந்நோய் நீங்கியது என்வும் பாடும் (48).

### திருநணா *(பவானி)*

இன்று பவானி என அழைக்கப்பெறும் திருநணா என்ற ஊர்க்குச் சம்பந்தர் சென்று 'பந்தார் விரன் மடவான்' என்ற பதிகம் பாடி வணங்கினார். (2225)

கார்மேகக் கவிஞர் இவ்வூரிலுள்ள கடல் துறையில் சூரிய சந்திர கிரகண காலத்தில் மூழ்கிப் பொன்னுலகம் அடையலாம் என மக்கள் நம்பிய நம்பிக்கையைப் புலப்படுத்துவார் (14). இதனை 'வாலிபகாசி' எனவும் சுட்டுவார்.

### பாண்டிக் கொடுமுடி[7] *(கொடுமுடி)*

பாண்டிக் கொடுமுடிக்குப் பண்டைய பெயர் கறையூர். இங்குச் சென்ற சம்பந்தர் இறைவன் மீது 'பெண்ணமர் மேனியினாரும்' என்ற பதிகமும் (2236) சுந்தரர் நமச்சிவாயப்பதிகமும் (3241) பாடினர். கொங்கு மண்டல சதகத்தில் (12) பூச்சாத்த முடியாதபடி உயர்ந்த சிவலிங்கம் அகத்தியர் கைப்பிடியிலடங்குமாறு பூமியுள் தாழ்ந்த செய்தியை அறியலாம்.

**திருப்புக்கொளியூர் (அவிநாசி)**

இன்று அவிநாசி எனப்பெயர் தரித்துள்ள திருப்புக்கொளி யூருக்குச் சுந்தரர் சென்றார் (4232). மறையோர் வாழும் மாட வீதியை அடைந்தபோது இருமனைகளில் ஒன்றில் அழுகை ஒலி எழுந்தது; மற்றொன்றில் மங்கல ஒலி எழுந்தது. இதன் காரணத்தைச் சுந்தரர் அறிந்தார். ஐந்து வயது நிரம்பிய இரு அந்தணச் சிறுவர் மடுவில் குதித்தபோது ஒருவனை முதலை விழுங்கிற்று. தப்பிப் பிழைத்த பிள்ளைக்கு முத்நூல் அலையும் விழாவின் மங்கல ஒலி எழுந்த மனை ஒன்றாகும். இழந்த பெற் றோரின் அழுகை எழுந்த மனை மற்றொன்றாகும் (4234). இதனைக் கேட்ட சுந்தரர் தம்மை வணங்கியவர்கள் பிள்ளையை இழந்த பெற்றோர் (4235) என அறிந்து அவர்கள் துன்பம் நீக்க அம்மடுவிற்குச் சென்று 'எற்றான் மறக்கேன்' என்ற பதிகம் பாடி (4239) முதலை உண்ட பிள்ளையை அழைப்பித்துப் பெற்றோர்க் களித்துப் பின்னரே இறைவனை வணங்கச் சென்றதாகப் பெரிய புராணம் கூறும் (4242).

இச்செய்தியைக் கார்மேகக் கவிஞர் தம் சதகத்தில் (16) 'பாவென்ற செந்தமிழ்ச் சுந்தரன் பாடிப்படர் குளத்தில் ஆவென்ற வாயின் முதலை கொள் பிள்ளையை அன்று கொண்டு வாவென் றழைத்த அவிநாசி சூழ் கொங்கு மண்டலமே' எனப்பாடுவார். இதனையே வாலசுந்தரக் கவிராயரும் பாடுவார் (17, 19.)

கங்கை இங்குப் பூஞ்சுனை ஆயதும் (18) இறைவன் அக்கினி தாண்டவம் செய்தபோது மால், நான்முகன் முதலிய தேவர்கள் புக்கு ஒளிந்த இடமாக இது ஆயதும் (16), வீர சைவரிடமிருந்து[8] பறித்துக் குளத்தில் எறிந்த இலிங்கத்தை மீன் கவ்விக்கொணர்ந்து தந்த இடம் ஆயதும் (12), உமை அம்மை பஞ்சவில்வம் கொண்டு இறைவனை அருச்சித்த இடம் (13) ஆயதும் பற்றிய செய்திகளை வாலசுந்தரர் வாயிலாக அறிய முடிகிறது.

இவற்றில் இறைவன் இறைவி பற்றிய புராணச்செய்திகளும் காசியுடன் அவிநாசியைத் தொடர்பு படுத்தும் செய்தியும் வீர சைவம் படர்ந்து தழைத்த செய்தியும் கிடைக்கின்றன.

**பேரூர்**

கொங்கு நாட்டில் காஞ்சியாற்றின் (நொய்யல்) கரையின் மீது உள்ளது பேருர். சுந்தரர் இவ்வூரை மேலெழும் பேரன்பால்

அடைந்தார் (3242). இறைவன் தில்லை மன்றில் நின்றாடிய கோலத்தை இங்கு நேராகக் காட்டினார். அது கண்டு ஆனந்தக் கண்ணீர் பொழியச் சுந்தரர் (3234) தொழுது வீழ்ந்தெழுந்தார். எல்லையற்ற அன்பு எலும்பை உருக்க ஐம்புலன்களில் புலப்படா இன்பம் பெற்று மெய்யுணர்வில் இறைவனை நேரில் பெற்ற நிலையைச் சுந்தரர் பெற்றார் (3244). இன்ப வெள்ளத்தில் நிலைத்த பாடலை மகிழ்ந்து பாடினார். (அப்பதிகம் கிடைக்க வில்லை.) பின்னர்த் தில்லையில் சுந்தரர் இறைவன் நடனம் கண்டு பாடும்போது 'மீகொங்கிலணி காஞ்சி வாய்ப் பேரூரர் பெருமானை'க் கண்ட நிலையைப் போற்றிப் பாடியுள்ளார் (3269).

பேரூர்த் தாண்டவ மூர்த்தியின் பெருமையினையும் அவர் நெடியபள்ள வடிவாகி நின்ற பெருமையினையும் கார்மேகக்கவிஞர் பாடுவார் (17, 18). பேரூரில் இறைவனாட அரசவன லிங்கத்தின் வியர்வை ஊற்றியது (22) என்றும், பேரூர் பிறவா நெறி அளிக் கின்ற ஊர் (23) என்றும், இங்கு மாண்டாரைக் காணலிற் சுடும் போது அவர்கள் மண்டை வெடித்திடாது (24) என்றும், இவ்வூர்க் கனகசபை, அறுபத்துமூவர் வாழும் பெருமை (25) உடையது என்றும் வால சுந்தரர் பாடுவார். மேலும் 'பிறவா நெறியை இவ்வூரளிக்கும் சிறப்பைக் கம்பநாத சாமியின் சதகமும் கூறும் (13).

பெரியபுராணம் பத்தி நெறியின் அகவுணர்வை அடியார் வாயிலாகக் காட்டுவதால் தமிழகத்தில் அன்புப் பயிர் வளர்ந் ததை அறிய முடிகிறது. சதகங்களின் காலத்தில் பிறவா நெறி யினைப் போற்றும் ஞானப்பயிர் தழைத்த நிலையைக் காண முடிகிறது.

## திருமுருகன் பூண்டி

சேரமான் பெருமாளிடம் பொன் பெற்றுச் சுந்தரர் தன்னடி யாருடன் திருமுருகன் பூண்டி வழியே சென்றார். இவ்வூர் அருகே சென்ற போது சுந்தரர் பொருளைத் தம் சிவ கணங்கள் வேடுவ வடிவில் பறித்து வர இறைவன் அருள் செய்தார். இவ்வூர் இறைவனிடம் சுந்தரர் சென்று 'கொடுகுவெஞ்சிலை வடுக வேடுவர்' என்ற பதிகத்தைப் பாட இறைவனருளால் வேடுவர் பறித்த பொருள் வந்து சேர்ந்தது எனப் பெரியபுராணம் கூறும் (3918). இச் செய்தி பெரிய புராணத்தில் பல இடங்களில் குறிப்பிடப்பெறும் (4095, 4170).

கார்மேகக் கவிஞரின் கொங்கு மண்டல சதகம் பரவையின் காதலால் சுந்தரர் பொருளாசை கொண்டார் எனவும் அவரிடம் பதிகம் கேட்கும் ஆசையில் பொன்னைப் பறிக்க இறைவன் அருள் புரிந்ததாகவும் கூறும் (15). இத்துடன், வழி தெரியாத சுந்தரரை வேடவடிவு கொண்டு இறைவன் காட்டு முருங்கைக் காய்க்கறி யாக்கி விருந்து செய்த துடியலூரின் சிறப்பையும் இந்நூல் கூறும். (21). இச்செய்தி பெரிய புராணத்தில் இல்லை.

## வெஞ்சமாக் கூடல்

வெஞ்சமாக் கூடல் என்ற கொங்கு நாட்டிலுள்ள ஊர்க்குச் சம்பந்தரும் சுந்தரரும் தனித்தனியே சென்று அங்குள்ள இறைவனை வணங்கிய செய்தியைப் பெரிய புராணம் கூறும் (2236, 3246). (வெஞ்சன் என்ற அரசனின் தலைநகராக இது இருந்த மையாலும் குடகனாறும் பிற சிற்றாறுகளும் சேர்வதாலும் இதற்குக் கூடல் என்ற பெயர் வந்ததாக அறிகிறோம்).

ஆனால் பெரிய புராணத்தில் இல்லாத புராணச்செய்தியைக் கார்மேகக் கவிஞரின் கொங்கு மண்டல சதகத்தில் (10) காண முடிகிறது. சுந்தரர்க்குப் பொருள் கொடுக்க விரும்பிய இவ்வூர் விகிர்தேசுரன் என்னும் பெயர் படைத்த சிவபெருமான் முதிய அந்தண வடிவம் பூண்டு ஆய்மகளிடம் தம் பிள்ளைகளை அடகு வைத்துப் பெற்ற பொன்னை அளித்ததாக அறிகிறோம்.

## முடிவுரை

இவ்விரு நூல்களில் காணும் ஊர்ப்பெயர்கள் அடிப்படையில் கிடைத்த செய்திகளை ஒப்பிட்டதால் கிடைக்கும் உண்மை களாவன:-

1. அரசியல் மாற்றங்களில் பல ஊர்கள் பல காலங்களில் பல் வேறு ஆட்சியின் கீழ் அமைத்திருத்தல் கூடும். மேலும் இவை பற்றி அறிய இவ்வொப்பீடு துணைபுரியும்.

2. ஊர் வருணனை பெரிய புராணத்தில் காப்பிய நிலையில் போதிய அளவு விளக்கமாகக் கிடைக்கின்றன. சதகங்களின் அமைப்பிற்கேற்ப அத்தகைய விளக்கங்கள் கிடைக்க வாய்ப் பில்லை.

3. பெரிய புராணம் வெளிப்பட்ட நோக்கிற்கேற்பச் சிவனடியார் களின் புராணத்தை விரிவாகக் கூறுகிறது. அச்செய்திகளைச்

சுருங்கிய அளவில் இச்சதகங்கள் கூறினும் பெரிய புராணத்தில் காணப்பெறாத சில செய்திகள் இவற்றில் மிகுதியாகக் காணப்படுகின்றன.

4. பெரிய புராணத்திற்குப் பின்னர்த் தோன்றிய தெய்வ வழிப் பாடுகளையும், மக்களின் சமய நம்பிக்கைகளையும், ஊர்களுக்கு வழங்கிய புதிய பெயர்களையும் இச்சதகங்கள் சுட்டுகின்றன.

5. பெரிய புராணம் அன்பு நெறிக்கு முதலிடம் கொடுப்பதையும் சதகங்கள் செய்திகளால் கொங்கு நாட்டின் பெருமையை உணர்த்துவதற்கு முதலிடம் கொடுப்பதையும் காணமுடிகிறது.

6, அடியார்கள் பற்றிப் பெரியபுராணத்தில் காணப் பெறாது சதகங்களில் காணும் சில செய்திகளில் நடப்பு நிலையிலும், கற்பனை கலந்த நிலையிலும் காணப்பெறுகின்றன.

1. Periya Puranam Sekkizaar condensed English Version by G. Vanmikanathan Sri Ramakrishna Math Madras 1985 p. 7

2. பெரியபுராணம், சேக்கிழார், சி. கே, சுப்ரமணிய முதலியார் உரை I 1960, II 1940, III 1943 IV 1949 V 1950 VI 1953 VII 1954
(கோவை தமிழ்ச் சங்கம், கோயமுத்தூர்)

3. பெரிய புராணச் சிறப்புப் பெயரகராதி - ஊர்ப் பெயர்கள் தா. வே. வீராசாமி, தமிழ்ப் பல்கலைக் கழகம், தஞ்சாவூர், 1986 பக். VII-VIII

4. கொங்கு மண்டல சதகங்கள், பதிப்பாசிரியர்கள், இ. சுந்தர மூர்த்தி, ந. ரா. சென்னியப்பன், ஐ. இராமசாமி, தவத்திரு சாந்தலிங்கர் தமிழ்க் கல்லூரி, பேரூர், கோயமுத்தூர். 1986.

5. பெரியபுராணப் பாடல் எண்கள் சி. கே. சுப்பிரமணியமுதலியார் பதிப்பில் உள்ள வண்ணம் சுட்டப்பெறும். கொங்குமண்டலச் சதகங்களின் எண்கள் பேரூர் தவத்திரு சாந்தலிங்கர் தமிழ்க் கல்லூரிப் பதிப்பில் உள்ளவை.

6. 'திருவஞ்சைக்களம்' என்ற நூலில் (கோவை சேக்கிழார் திருக்கூட்டம், கோயமுத்தூர் 1965 பக். 44-51) இவ்வூர் பற்றிய பல விரிவான செய்திகளைக் காணலாம்.

7. இவ்வூர்ப் பெயருடன் பாண்டி என்ற நாட்டுப் பெயர் முன்னொட்டாக அமைந்ததாகக் கொண்டால் அரசியல் மாற்றங்களில் தேவார காலத்தில் இப்பகுதி பாண்டி நாட்டுடன் சேர்ந்ததாகக் கொள்ளலாம். நில அமைப்பு அடிப் படையில் காணும் போது இது கொங்கு நாட்டிற்குரியது என்பதில் ஐயமில்லை.

8. 'சேக்கிழார் கூறும் பெயர்களையும், பொருள்களையும் அப்படியே வைத்தும், தழுவியும் மாற்றியும் கதைகள் புனைந்து நூல் செய்யப்பட்டிருப்பதை வீரசைவமரபில் காண்கிறோம்' என்பார். (சேக்கிழார், மு. அருணாசலம். காந்தி வித்தியாலயம், திருச்சிற்றம்பலம், 1972 ப. 234). இவ்வடிப்படையில் இது போன்ற செய்திகளை மேலும் ஆராயலாம்.

---

# 6. கொங்கு நாட்டுச் சமய நிலை

த. இரமணி
ஆய்வு மாணாக்கி
மொழியியல் துறை, பாரதியார் பல்கலைக்கழகம்

## முன்னுரை

கொங்கு நாட்டில் வழங்கிய சமயங்களில், சைவம், வைணவம், சமணம், பௌத்தம், இஸ்லாம், கிறித்துவம் ஆகியன குறிப்பிடத் தக்கன. கொங்கு நாட்டு இலக்கியங்கள், கோயில்கள், கல்வெட்டுக்கள் இவற்றின் வாயிலாக் புலனாகும் சமய நிலையை ஆய்வதே இக்கட்டுரையின் நோக்கம்.

கொங்கு நாடு இரட்டர், கங்கர், பல்லவர், சோழர், சேரர், பாண்டியர், ஹொய்சளர், முகமதியர், ஆங்கிலேயர், ஆகியோர்

ஆட்சியில் தொடர்ந்து இருந்து வந்தது. அக்காலங்களில் சமணம், சைவம், வைணவம், கிறித்துவம், இஸ்லாம் ஆகிய சமயங்கள் செல்வாக்கும் வளர்ச்சியும் பெற்றன. இவற்றுள் சைவமும், வைணமும் பண்டு தொட்டு இங்கேயே இருந்த சமயங்கள் ஆகும். பிறச் சமயங்கள் வந்து சேர்ந்த சமயங்கள் ஆகும் என்பது இங்கு குறிப்பிடத்தக்கது. இனி, இச் சமயங்கள் கொங்கு நாட்டில் பெற்றிருந்த இடத்தைக் காண்போம்.

**சமணம்**

தமிழ் நாட்டில் சமணம் சுமார் இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே பரவியிருந்தது என்பதுவரலாற்று அறிஞர்களின் கருத்தாகும். கி. மு. இரண்டாம் நூற்றாண்டிலிருந்து கி. பி. ஏழாம், எட்டாம் நூற்றாண்டுகள் வரை மிக்க செல்வாக்குடனும், பெருமையுடனும் திகழ்ந்தது; பிறகு, சைவ-வைணவப் பெரியார்களின் வருகையால் சமண-பௌத்த மதங்களின் பெருமை குறையத் தொடங்கியது. சமண-பௌத்த மதங்களின் புகழ் முழுவதும் குன்றாமல் இருப் பினும், சமணமதத்தின் புகழ் முழுவதும் குன்றாமல் பல இடங்களில் கோயில்களும் மடங்களும் தொடர்ந்து பதினாறு, பதினேழாம் நூற்றாண்டு வரை செயல்பட்டு வந்தன என்பதற்கு கல்வெட்டு சான்றுகள் கிடைக்கின்றன.

மைசூர் மாவட்டத்திலுள்ள சரவணபெல்குலா என்ற ஊர் கி. மு. இரண்டு, மூன்றாம் நூற்றாண்டில் சமணர்க்குத் தலை நகரமாக விளங்கியது. அவ்விடத்தில் இருந்தே சமணர்கள் தமிழ் நாட்டிற்குள் புகுந்து சமயப் பிரச்சாரம் செய்தனர். தமிழ் நாட்டிற்கு வருகை தந்த சமணர்கள் கொங்கின் வழியாக வந்திருக்க வேண்டும். ஏனெனில், சரவணபெல்குலாவிலிருந்து தமிழ் நாட்டில் மற்றைய பகுதிகளுக்குச் செல்ல கொங்கு நாட்டு வழியைத் தவிர வேறு வழி கிடையாது. இவ்வாறு கொங்கு நாடு மைசூருக்கும் தமிழ் நாட்டிற்கும் ஒரு முக்கிய பாதையாக அமைந்தது. சமணத்துறவிகள் கொங்கு நாட்டின் மலைகளில் முதன்முதலில் குகைகள், படுக்கைகளைச் செதுக்கிக் கொண்டனர். இதற்குச் சான்றாக புகழியூர், அறச்சாலையூர் முதலிய இடங் களில் உள்ள தமிழ்க் கல்வெட்டுக்களைக் கூறலாம்.

கி. பி. தொடக்கத்தில் சமண முனிவர்கள் கொங்கு நாட்டில் தங்கிப் பிரசாரம் செய்ததற்கான சான்றுகள் நமக்குக் கிடைக் கின்றன. இரட்டக்குல மன்னர் ஆட்சியில் கொங்கு நாட்டில்

சமணசமயம் செல்வாக்குப் பெறத்தொடங்கியது. இரட்ட மன்னர்கள் பலர் சமணச் சார்புடையவர்களாக விளங்கினர். ''கொங்கு தேச சாசாக்கள்'' என்ற நூல் இரட்டக்குலத்தைச் சேர்ந்த எட்டு மன்னர்கள் ஆண்டதாகவும் அவர்களில் சிலர் சமணத்தைப் போற்றி வளர்த்ததாகவும் குறிப்புள்ளது.[1]

மேலும் இரட்டக்குல கோவிந்தராயன் அரிஷ்டண்ணன் என்கின்ற சமணனுக்குப் பூமிதானம் செய்த செய்தி காணக்கிடக்கிறது.[2] மேலும் இந்நூலில் சதுர்ப்புயக் கன்னர தேவச் சக்கரவர்த்தி காலத்தில் இருந்த சமண சாத்திரம் தெரிந்த மூவரில் குருநாகநந்தி என்பவன் அம்மதத்தின் பால் பற்றுக் கொண்ட அரசர்க்கு சாத்திர உபதேசம் செய்தான் என்றும் குறிப்புள்ளது.[3]

மேலும் இரட்டக்குல மன்னர்கள் ஆட்சிக்காலத்தில் சமணம் பரவியதற்குச் சான்றாக அரச்சலூர் இசைக்கல்வெட்டுடன் உள்ள படுக்கையைக் கொள்ளலாம். இங்குள்ள கல்வெட்டு கி. பி. இரண்டாம் நூற்றாண்டைச் சார்ந்தது எனக்கொண்டால் கொங்கு தேச ராசாக்கள் கதை கூறும் சமண வரலாறு உண்மையெனக் கொள்ளலாம் என்பர்[4].

இரட்டக்குலத்திற்குப் பின் கொங்கு நாட்டை ஆண்ட மரபு கங்க மரபாகும். அம்மரபில் இருபது பேர் கொங்கு நாட்டை ஆண்டார்கள் என்று கொங்கு தேச ராசாக்கள் கதை என்ற நூல் குறிப்பிடுகின்றது[5]. இக்குலத்தைச் சேர்ந்த மன்னர்களில் பலர் சமண சமயத்திற்குப் பேராதரவு தந்தார்கள். சிறப்பாக துர்விநீதன் என்ற மன்னன் குறிப்பிடத்தக்கவன். இவன் கி. பி. ஐந்தாம், ஆறாம் நூற்றாண்டுகளில் வாழ்ந்தவன். இவனுடைய ஆட்சியில் கொங்கு நாட்டில் சமணம் சிறப்புடன் விளங்கியது.

கொங்குநாடு சோழ மன்னர்களின் ஆட்சிக்குட்பட்டபின் கொங்குச்சோழர் என்ற அரச மரபினர் கி. பி. பதினொன்றாம் நூற்றாண்டிலிருந்து கி. பி. பதினான்காம் நூற்றாண்டு வரை ஆட்சி செய்தனர். இவர்களில் விக்கிரமசோழன், குலோத்துங்க சோழன், வீரராசேந்திரன் ஆகியோர் சமண சமயத்திற்கு ஆதரவு தந்துள்ளனர்.

## கொங்கு நாட்டு சமணத்தலங்கள்

சமயங்களுக்கு கோயில், மடம், சங்கம் என்ற மூன்றும் சிறப்புடையவை. கொங்கு நாட்டில் சமண சமயத்திற்கு கோயில்,

மடம், சங்கம் என்ற மூன்றும் சிறத்திருந்தது. காலச் சூழலில் மடமும், சங்கமும் மறைந்தன. கோயில் மட்டும் எஞ்சியிருந்தன என்பர் [6].

## விசயமங்கலம்

கொங்குநாட்டு சமணத்தலங்களில் மிகப்பெரியது விசயமங்கலம். விசயமங்கலத்தின் ஒரு பகுதியில் சந்திரபிரபா என்ற சமணத் தீர்த்தங்கரர் கோயில் ஒன்று உள்ளது. தற்போது அமணேஸ்வரர் கோயில் என அழைக்கப்படுகிறது. மூர்த்தி நிர்வாணமாக இருப்பதால் இப்பெயர் பெற்றது. ''அணியா அழகியர்'' என்பது கல்வெட்டுத் தொடர்.

இக்கோயிலில் பல மண்டபங்கள் உள்ளன. ரிஷப தேவர், அனந்தநாதர், மகாவீரர் போன்ற தீர்த்தங்கரர் உருவங்கள் உள்ளன. மேலும் ஆதிநாதர் வாழ்க்கை வரலாற்றைச் சித்தரிக்கும் சிற்பங்கள் இம்மண்டபத்தில் உள்ளன. மேலும் இங்கு கருநாடக அமைச்சன் ஒருவனின் தங்கை ஒருத்தி சல்லேகனை விதமிருந்து உயிர்நீத்ததைப்பற்றி ஒரு கல்வெட்டு உள்ளது[7].

சோழர் காலத்தில் இக்கோயில் வீரசங்காதப் பெரும்பள்ளி எனப்பெயர் பெற்றிருந்தது என்பது இரண்டாம் குலோத்துங்கன் காலத்தைச் சேர்ந்த கி. பி. 1163ம் ஆண்டு கல்வெட்டொன்று குறிக்கிறது[8].

சோழர்கால கல்வெட்டு ஒன்று இக்கோயிலுக்கு அளிக்கப்பட்ட நிவந்தங்களையும், விழாக்களையும் குறிக்கிறது[9].

சமண மதத்தின் மேன்மை குன்றிய பிறகு, இக்கோயிலின் உயர்ந்த கோபுரத்தை நெட்டை கோபுரம் என்றும் தீர்த்தங்கரரை அம்மணேஸ்வரர் என்றும் அழைக்கலாயினர் எனலாம்.

## திருமூர்த்தி மலை

ஆனைமலையின் அடிவாரத்தில் அமைந்துள்ள இம்மலையில் ஒரு பெரிய பாறை சமணச் சிற்பங்களோடு காணப்படுகிறது. இப்பாறையில் சமண தீர்த்தங்கரர் ஒருவரின் உருவமும், அதன் இரு பக்கங்களில் காவல் தேவதைகளின் உருவங்களும் செதுக்கப்பட்டுள்ளன. இதுவே பின்பு சிவன், பிரம்மா, விஷ்ணு என்ற கடவுள்

களுக்குரிய உருவங்களாகக் கருதப்பட்டு திருமூர்த்தி மலை எனப் பெயர் பெற்றது எனலாம். ஆனால் தீர்த்தங்கரர் உருவம் இருப்ப தாலே இப்பெயர் பெற்றது என்பதே பொருந்தும்.

### திங்களூர்

திங்களூரில் உள்ள சமணக்கோயில் ஒன்பதாம் தீர்த்தங்கரான புஷ்பநந்தர் என்பவருக்கு எழுப்பப்பட்டது. கி. பி. பதினொன்றாம் நூற்றாண்டு கொங்குச் சோழர் காலத்து கல்வெட்டொன்று இக் கோயிலுக்கு முகமண்டபம் கட்டிய செய்தியைக் கூறுகின்றது[10]. இம்மண்டபத்தை கட்டியவர் விக்கிரம சோழர் என்றும், அவன் சிங்களாந்தகன் என்ற பிருதைக் கொண்டிருந்தான் என்றும் இக் கல்வெட்டிலிருந்து அறிகிறோம்.

### தர்மபுரி

பண்டைய காலத்தில் தகடூர் என்று புகழ்பெற்ற தர்மபுரியில் நொளம்ப அரசன் மகேந்திரன் காலத்தில் இங்கு ஒரு சமணக் கோயிலை ஒரு வணிகனின் மக்கள் நதியண்ணன், கண்டியண்ணன் என்பவர் கட்டினர்[11]. இக்கோயில் தற்போதுள்ள மல்லிகார்ஜினர் ஆலயமாக மாறியுள்ளது. மல்லிகார்ஜினர் என்ற பெயரே மல்லிநாதர் என்ற தீர்த்தங்கரரின் பெயரிலிருந்து வந்திருக்கலாம் என்பர்[12]. தர்மபுரியிலுள்ள மாரியம்மன் கோயி லிலும் மகேந்திரனின் கல்வெட்டொன்று (கி. பி. 898) ஒரு சமணக் கோயிலுக்கு அளிக்கப்பட்ட தானத்தைப் பற்றியது. இதில் பொன்னெற கொரவர் என்ற சமண முனிவர் குறிப்பிடப் படுகிறார்[13].

### அய்யம்பாளையம் (ஐவர்மலை)

தென்மேற்கு கொங்கில் உள்ள வைகாவி நாட்டைச் சேர்ந்தது. பஞ்சபாண்டவர் இங்கு வந்ததால் இப்பெயர் பெற்றதோ என எண்ணத் தோன்றும். ஆயின், இது தவறு. அயிரை மலை என்பதே ஐவர்மலை என்றாயிற்று எனலாம். ''திரு அயிரைமலை'' என்றே கல்வெட்டுகள் குறிப்பிடுகின்றன. உடுமலையிலிருந்து கொழுமம் வழியாகப் பழனி செல்லும் வழியில் இக்கோயில் அமைந்துள்ளது. இங்கு பல குகைகளும் சமணச் சிற்பங்களும் கல்வெட்டுக்களும் உள்ளன.

மேலும் சமணக் குரவர்கள் மலைகளிலும் குகைகளிலும் தங்கி மக்களுக்குத் தம் மதப் போதனைகளைச் செய்துள்ளனர். ஆசிவகப் பள்ளி என்றும் வச்சிர நந்திக்குரவர் என்றும் சமணர்களைக் குறிப்பிடும் பெயர்கள் கல்வெட்டுகளில் காணப்படுகிறது.[14]. மேலும் சமணர்களுக்கு பல படுக்கைகளும், பள்ளிகளும் மன்னர்கள் அமைத்துக் கொடுத்ததாகக் கல்வெட்டுக்கள் குறிப்பிடுகின்றன[15] கஞ்சம் பள்ளி, செங்கம்பள்ளி ஆகிய ஊர்கள் முன்பு சமணர்கள் வாழ்ந்த இடங்கள் எனலாம்.

## கொங்கு நாடும் சமண இலக்கியங்களும்

பெருங்கதை, நன்னூல். சிலப்பதிகார உரை, கொங்குமண்டல சதகம் முதலியன கொங்கு நாட்டு சமண இலக்கியங்களாகும்.

கொங்கு வேளிர் விசயமங்கலத்தில் வாழ்ந்த சமண சமய குறுநில மன்னர் ஆவார். இவர் இயற்றியதே பெருங்கதை, பெருங்கதையில் பல இடங்களில் சமண சமயக் கொள்கைகளை அமைத்துப் பாடியுள்ளார். சமண சமயத்தில் ஆன்மாவின் அறிவை மறைக்கும் தீவினைக்கு 'காதிகாரம்' என்று பெயர். இதனை,

''வெண்துயர் அருவின் வீட்டிய அண்ணல்
காதி வெவ்வினை கடையறு காலை
போதி பெற்ற புண்ணியன் போல''[16]

என்று குறிப்பிட்டுள்ளார்.

கருமம் தீர்ந்த உளர் மேலே செல்லுவதை - ''வினைத்தீ உயிரின் மிதந்தது''[20] என்று குறித்துள்ளார். சமண ஆலயத்தை 'சேதியம்' என்று பல இடங்களில் சுட்டியுள்ளார்.

அருந்தவப் பள்ளியும் அருகாத் தானமும்
அருமணிச் சுடரும் அராத்தானமும்
துவழ்தீ பெருமை சேதியம் தொழுது''[17]

என்று குறிப்பிடும் பகுதி சமண சமயக் கொள்கைக்குத் தக்கச் சான்றாகும்.

### நன்னூல்

கங்க மன்னன் சீயங்கன் வேண்டுகோளுக்கேற்ப நன்னூலைச் செய்தவர் பவணந்தி முனிவர். இதனை நன்னூல் சிறப்புப்பா யிரத்தால்[18] அறியலாம். பவணந்தி என்ற பெயர் சமண சமயத்தார்க்குரியது. சம்பந்தர் கனக நந்தியும், புட்ப நந்தியும், பவண நந்தியும் என்று சமணர் பெயர்களை தேவாரத்தில் குறித்

துள்ளார். பவணந்தி என்பதே பவணநந்தி என்றாயிற்று எனலாம். விசயமங்கலத்து ஆதிநாதர் கோயிலில் இன்றும் பவணந்தி முனிவர் உருவத்தைக் காணலாம்.

### நேமிநாதம், வச்சணந்தி மாலை

சமண சமயத்தை சார்ந்த குணவீர பண்டிதர் இந்த இரண்டு நூல்களையும் செய்தவர். கொங்கு நாட்டுக் களந்தையைச் சார்ந்தவர் இவர். ஆசிரியர் வச்சணந்தி முனிவர், நேமிநாத உரைப் பாயிரத்தால்[19] களந்தையில் இருந்த வச்சணந்தி முனிவரின் மாணாக்கர் குணவீரபண்டிதர் என்பதனை அறியலாம். குணவீர பண்டிதரின் ஊர் களந்தை என்பது வச்சணந்தி மாலை உரைப் பாயிரத்தால்[20] அறியலாம்.

### அடியார்க்கு நல்லார், கார்மேக கவிஞர்

சிலப்பதிகாரத்தின் உரையாசிரியரான அடியார்க்கு நல்லார் சமண சமயத்தை சார்ந்தவர் என்று கொங்கு மண்டல சதகத்தின் செய்யுள்[21] ஒன்றைக் கொண்டு அறிய முடிகிறது. கொங்கு மண்டல சதக ஆசிரியரான கார்மேக கவிஞர் என்பவரும் சமண மதத்தவர் என்றும், அவர் விசயமங்கலத்தில் பிறந்தவர் என்றும் கூறப்படுகிறது [22].

பக்தி இயக்கத்தின் காரணமாக தமிழ்நாட்டின் பிற பகுதியில் சமணம் செல்வாக்கு இழந்த பின் சமணப் பெரியார்கள் கொங்கு நாட்டைப் புகலிடமாகக் கொண்டனர். ஆகையால் தமிழ்நாட்டின் பிற பகுதிகளில் சமணம் அழிந்த பின்னும் கொங்கு நாட்டில் ஓரளவு செல்வாக்குடன் சமணம் இருந்தது எனலாம்.

### பௌத்தம்

சைவம், வைணவம், சமணம் ஆகிய சமயங்கள் கொங்கு நாட்டில் பெற்ற செல்வாக்கைப்போல் பௌத்த சமயம் செல்வாக்குப் பெறவில்லை எனலாம். எனினும் இருண்ட காலத்தில் கொங்கு நாட்டில் பௌத்தமதம் ஓரளவு செல்வாக்கு பெற்றிருந்தது எனலாம். சேலம் மாவட்டம் ஆத்தனூர் பகுதியிலுள்ள தியாகனூர் என்னுமிடத்திலுள்ள புத்தர் சிலைகள் சான்றாகும். பொதுமக்கள் அவற்றை கொங்கு சித்தர் எனக்குறிப்பிடுகின்றனர். மேலும்,

கொங்கு தேச ராசாக்கள் என்ற நூல் அரிவர்மன் காலத்தில் புத்த துறவியுடன் பிராமணர் சமயவாதம் செய்த செய்தியைக் குறிப்பிடுகிறது[23]. அரிவர்மன் காலம் கி.பி. மூன்றாம் நூற்றாண்டுக்கு மேலும் போளுவாம்பட்டியில் கண்டெடுக்கப்பட்டுள்ள[24] புத்தர் சிலைகள், சுடுமண் மைத்திரையர் ஆகியன கொங்கு நாட்டின் பௌத்தமதம் இருந்ததற்கான சான்றுகளாகக் கொள்ளலாம்.

## விளைவுகள்

அரசமரத்தடியில் விநாயகர் வீற்றிருப்பதைக் காண்கிறோம். இக்காட்சி பௌத்தமதத் தாக்கத்தால் ஏற்பட்டது எனலாம். பௌத்தர்களின் கடவுளாகிய புத்தர் போதி மரத்தடியில் ஞானம் பெற்றார். இவ்விதம் புத்தரை வழிபட்டதால் தென்னிந்தியாவிலும் அப்பழக்கம் ஏற்பட்டிருக்கலாம் எனலாம்.

## சைவம்

சங்க காலத்தில் சைவம் என்ற சொல் காணப்படாவிட்டாலும் சிவனைப் பற்றிய குறிப்பு ஆங்காங்கு காணப்படுகிறது. 'உமையொடு கூடிய பெருமான்' 'பிறை அணிந்தவன்' 'கறைமிடற்றண்ணல்' போன்றன. மேலும், புலவர் ஔவையார் அதியமானை வாழ்த்தும்போது 'நீலமணிமிடற்றொருவன் போல மன்னுக பெரும நீயே' என்று கூறுவதன் மூலம் சிவனை அறிந்திருந்தனர் எனலாம்.

மேலும், சங்கர் ஆட்சியிலும், பல்லவர் ஆட்சியிலும் சைவம் சமயம் இருந்தது என்று புலனாகிறது. இதனை கி.பி. மூன்றாம் நூற்றாண்டில் வாழ்ந்த ஒரு கங்க மன்னன் ஈஸ்வர பக்தனாய்த் தளவன் புரத்திலே சிவலிங்கத்தைப் பிரதிட்டை பண்ணினான்[25] என்ற குறிப்பும், கி. பி. ஆறாம் நூற்றாண்டின் முற்பகுதியில் வாழ்ந்த இராசகோவிந்தராயன் எனபான் சைவ சமயத்தை ஆதரித்தான். இவனுக்கு நந்திவர்மன் என்ற பெயரும் உண்டு[26] என்ற குறிப்பும் புலப்படுத்தும். எனினும், கி. பி. ஆறாம் நூற்றாண்டுவரை சைவ சமயம் கொங்கு நாட்டில் பரவியிருந்தது என்றாலும், சைவ சமயம் சமயக்குரவர் வருகையால் மிக்க செல்வாக்குப் பெற்றது எனலாம்.

ஞானசம்பந்தர் கொடுமுடி, பவானி, குரக்குத்தளி, அவிநாசி, திருமுருகன் பூண்டி, பேரூர் ஆகியவற்வற வைப்புத்தலங்களாகப் பாடியுள்ளார்.

கி. பி. 8 - 9 ஆம் நூற்றாண்டுகளில் வாழ்ந்த சுந்தரர் கொங்கு நாட்டிற்கு (மூன்று முறை) வந்து சென்றுள்ளார். கொடுமுடி, அவிநாசி, திருமுருகன் பூண்டி, வெஞ்சமாக் கூடல் ஆகிய தலங் களில் சுந்தரர் பதிகங்கள் உள்ளன.

திருநாவுக்கரசர் கொடுமுடி என்ற தலத்திற்கு மட்டும் ஐந்து குறுந்தொகைப் பாடல்களை பாடியுள்ளார்.

பாண்டியர் ஆட்சியில் சைவம் தழைத்திருந்தது. இதனை, கி. பி. எட்டாம் நூற்றாண்டில் வாழ்ந்த பாண்டிய மன்னன் ஒருவன் கொடுமுடி பசுபதியினது பதும பாதம் பணிந்தேத்தினான் என்று வேள்விக்குடி செப்பேடு செப்புவதின் மூலம் அறியலாம்.

கொங்குச் சோழர் ஆட்சியில் சைவ சமயம் மிகவும் சிறப்புற்று விளங்கியது. சோழன் பூர்வ பட்டயத்தில் கரிகால சோழன் முப்பத்தியாறு சிவாலயங்களைக் கட்டினான் என்று கூறுவதாலும், மேலும் சோழர்கள் கட்டிய சைவ கோயில்களின் எண்ணிக்கையி னாலும் இதனை நன்குணரலாம்.

## கொங்கு நாட்டு சைவ இலக்கியங்கள்

தேவாரம், திருவாசகம் இவற்றால் சமயக்குரவரின் அற்புதங் களை அறியலாம். ஐயடிகள் காடவர் கோன் பாடிய சேத்திர வெண்பா, கருவூர்த் தேவரின் திருவிசைப்பா, திருமூலரின் திருமந்திரம், சேக்கிழாரின் பெரியபுராணம் முதலியன கொங்கு நாட்டின் சைவ சமய நிலையை அறிய பெருந்துணை புரிகின்றன.

## கொங்கு நாட்டு சைவ தலங்கள்

கொங்கு நாடெங்கும் ஏராளமான சிவதலங்கள் சிறந்து விளங்குகின்றன. அவற்றுள் சமயக்குரவர்களின் திருப்பதிகங்கள் உள்ள ஏழு பாடல் பெற்ற தலங்கள் சிறந்து விளங்குகின்றன. அவையாவன வெஞ்சமாக்கூடல், கருவூர், கொடுமுடி, திருகொடி மாடத்துச் செங்குன்றூர், திருப்புக்கொளியூர் (அவிநாசி) குரக்குத் தளி திருமுருகன் பூண்டி என்பன. மற்றும் பேரூர், மன்னியூர், திருநணா, சேவூர் முதலிய வைப்புத் தலங்களும் கொங்கு நாட்டில் சிறந்த தலங்கள். மேலும், பழநி மலை, மருதமலை, பச்சை மலை முதலிய முருகனுக்குரிய தலங்களும் சைவர்க்குரியவை ஆகும். சைவ நாயன்மார்களில் சுந்தரர், கண்ணப்பர் ஆகியோர்

திருமேனிகள் பல கோயில்களில் வைக்கப்பட்டுள்ளன. சுந்தரர் அவிநாசியில் நிகழ்த்திய அதிசயம் பல கோயில்களில் சிற்பங்களாக வடிக்கப்பட்டுள்ளன.

### சைவ சமயத்தின் உட்பிரிவுகள்

கொங்கு நாட்டில் சைவத்தின் உட்பிரிவுகளான காபாலிகம், காளாமுகம் ஆகியன இருந்ததற்கான சான்றுகள் கிடைக்கவில்லை. ஆனால் அவிநாசி வட்டம் சேவூர் சிவன் கோயில் கல்வெட்டுக்களில் கபாலீச்சுரம் என்ற பெயர் கூறப்படுவதாலும் மேலும், கொங்கு நாட்டில் காளாமுக சைவம் பரவியிருந்தது என்பதற்குப் பேரூரில் உள்ள இலகுலீசுவரன் சிற்பமே சிறந்த சான்று என்று கூறுவதாலும் (27) சைவ சமயத்தின் உட்புரிவுகளான காளாமுகம், கபாலீச்சுரம் இருந்தன எனலாம்.

வீரசைவம், சைவசமயத்தின் உட்பிரிவுகளில் ஒன்று. இஷ்டலிங்க பூசையாகிய ஆன்மார்த்த பூசை செய்பவர்கள் வீரசைவர்கள் வீரசைவம் கொங்குநாட்டின் பகுதியாகிய மைசூரில் தோன்றிய பசவேசரால் கி. பி. பன்னிரண்டாம் நூற்றாண்டில் வளர்ச்சியுற்றது. வீரசைவமடங்கள் இன்றும் கொங்குநாட்டில் சிறந்து விளங்குகின்றன இவற்றுள் பேரூர் சாந்தலிங்க திருமடம் குறிப்பிடத்தக்கது.

### கௌமாரம்

முருகனை வழிபடு தெய்வமாகக்கொண்டவர்கள் கௌமாரர்கள் தண்டபாணி சுவாமிகள் கௌமார முறைமை என்ற நூலில் கௌமாரம் என ஒரு தனி சமயம் இல்லை என்றும், கடவுளின் உண்மைத் தன்மையைக் கூறும் சமயங்கள் அனைத்தும் கௌமாரம் எனக் கூறியுள்ளமை இங்கு நினைவு கூறத்தக்கது. கௌமார மடங்கள் கொங்கு நாட்டில் இன்றும் சிறந்து விளங்குகிறது. இவற்றுள் சரவணம் பட்டி கௌமார மடம் குறிப்பிடத்தக்கது.

சிறு தெய்வ வழிபாடும் கொங்கு நாட்டில் மிக்குள்ளன. இவற்றுள் குறிப்பிடத்தக்கது அம்பிகை வழிபாடு, அம்பிகையை மாரியம்மன், காளி, துர்க்கை எனப் பல பெயர்களில் வழிபடுகின்றனர். அம்பிகைக்கு வருடம் ஒரு முறை சித்திரை, வைகாசி மாதங்களில் திருவிழா கொண்டாடுகின்றனர்.

## வைணவம்

கொங்கு நாட்டில் வைணவமும் பல்லவர் காலத்தில் தழைத் தோங்கியது. எனினும் கங்க மன்னர் காலத்தில் வைணவம் விளங்கின என்பது கங்க மன்னர்களில் விஷ்ணுகோபன் என்பவன் விஷ்ணுபக்தனாக இருந்தான். இவன் கி. பி. மூன்றாம் நான்காம் நூற்றாண்டுகளில் ஆட்சி செய்தான். இவன் காலத்தில் பல இடங்களில் விஷ்ணு கோயில் கட்டினான் என்ற குறிப்பினால் புலனாகிறது.[28]

## ஆழ்வார்கள்

ஆழ்வார்களால் பாடப்பட்ட ஊர்களை வைணவர் திருப்பதி என்பர். அத்தகைய பதி கொங்கு நாட்டில் எங்கும் இல்லை. எனினும் பேரூர், திருப்பாண்டிக் கொடுமுடி முதலிய கொங்கு நாட்டு ஊர்களை அறிந்திருக்கின்றனர்.

## குலசேகராழ்வார்

இவர் தன்னைக் 'கொங்கர்கோன்' என்று கூறிக் கொள்வதி லிருந்து இவர் கொங்கு நாட்டினை அறிந்திருக்கலாம் என்பது புலனாகிறது. மேலும், இவர் தனக்குக் கிட்டிய பட்டங்களைக் 'கொல்லிக் காவலன்' 'கடல் நாயகன்' 'கோழிக்கோன்' என்று கூறிக் கொள்கிறார்.

## பெரியாழ்வார்

கண்ணபிரானைக் குழந்தையாகவும், தன்னைத் தாயாகவும் கருதிப் பல பாடல்களை இயற்றினார். இதில் கண்ணன் தவழ்ந்து விளையாடும் இடங்கள்

''கொங்கும் குடந்தையும் கோட்டியூரும் எங்கும் திரிந்து விளையாடும் என்மகன்'' எனக் குறிப்பிடுகிறார். இங்கு கொங்கு என்று குறிப்பிடுவது கொங்கூர் என்று கொள்ளலாம்.

## பராந்தக நெடுஞ்சடையன்

கி. பி. எட்டாம் நூற்றாண்டில் ஆட்சி செய்த பாண்டியன் பராந்தக நெடுஞ்சடையன் பேரூரில் திருமாலுக்குக் கோயில் எடுத்

தான் என வேள்விக்குடிச் செப்பேடு விவரிக்கிறது. மேலும், பாண்டியர் கொங்கு நாட்டில் உள்ள சில கோயில்களுக்கு நிவந்தமளித்துள்ளனர். இப்பொழுது இக்கோயில் பேரூரில் இல்லை. கொங்குச் சோழர் ஆட்சியிலும் வைணவம் சிறப்புற்று விளங்கியது.

## ஆசாரியர்கள்

வேதாந்த தேசிகர் என்னும் ஆசாரியர் கொங்கு நாட்டிலிருந்து பரமபதங்கம் என்ற ஒரு நூல் குறிப்புள்ளது.[29] கொங்கு நாட்டில் மாரி குறைந்து பஞ்சம் ஏற்பட்டது. அத்தருணத்தில் கொள்ளைக் களம் என்ற அக்ரஹாரத்தில் உள்ள குடும்பம் ஒன்றில் வாழ்ந்த பெண் ஒருத்தி இராமானுசர் மடத்தில் போய்ச் சேர்ந்து சிஷ்யை ஆனாள். இவள் கொங்கு நாட்டினள் என்பதை அறிந்து இவளைக் கொங்குப் பிராட்டி என்றார். குருபரம்பரை இராமானுசர் ஓர் அரசனுடைய கொடுமைக்குள்ளாகி திருவரங்கத்திலிருந்து கொங்கு நாட்டின் வழியாகச் சென்ற போது 'கொங்கு பிராட்டியுடன் தொடர்பு கொண்டிருந்ததாகக் கூறுகிறது. வேடர், இராமானுசர்க்குத் துணைபுரிந்தனர் என்று கூறுகிறது.

## கொங்கு நாட்டு வைணவத் தலங்கள்

கோவை மாவட்டத்திலுள்ள காரமடை அரங்க நாதப்பெருமாள் கோயிலும், கோபி வட்டத்தில் உள்ள விசயமங்கலம் சித்திரமேனி விண்ணகரமும், நாமக்கல் குடைவரைக் கோயிலும், சிங்காநல்லூரிலுள்ள உலகளந்த பெருமாள் செப்புத் திருமேனியும், பெரியார் மாவட்டத்தில் கொடுமுடிக் கோயிலிலுள்ள நின்ற கோலவுருவமும் கொங்கு நாட்டு வைணவத் தலங்களுக்குத் தக்கச் சான்றாகும்.

## கிறித்துவம்

ஒன்பதாம் நூற்றாண்டில் கொங்கு நாடு சோழ மன்னர்களால் கைப்பற்றப்பட்டது. பதினான்கு, பதினேழாம் நூற்றாண்டுகளில் விசய நகர் மைசூர் அரசர்களால் பிடிக்கப்பட்டது. மைசூர் அரசர்கள் கிறித்துவத்திற்கு ஆதரவாக நின்றனர்.

மதுரையை வேத போதகத் தலமாகக் கொண்டு சேசுசபைக் குருக்களால் தமிழகத்தில் கிறித்துவம் பரவியது. கொங்கு நாட்டில்

கி.பி. பதினாறாம் நூற்றாண்டில் கிறித்துவ சமயம் பரவத் தொடங்கியது என்பர்.[30] போர்த்துக்கீசிய வேத போதகர்கள், சேசுசபை குருக்கள் போன்ற அடியார்களால் கொங்கு நாட்டில் கிறித்துவம் பரவியது. கொங்கு நாட்டுப்பகுதிகளான சத்தியமங்கலம், கருமத்தம் பட்டி, கோயம்புத்தூர், தாராபுரம் முதலிய ஊர்களில் கிறித்துவம் பரவியது. பொதுவாக கோவை மாவட்டத்தில் எல்லா ஊர்களிலும் சிறப்பாகக் கிறித்துவம் பரவியுள்ளது.

சத்திய மங்கலத்தில் இருந்த பாளையக்காரர் 1647 வரை கிறித்துவ சங்கத்தை ஆதரித்தார். அவர் இறந்த பின் கிறித்துவர்களுக்குப் பல துன்பங்களும் தொல்லைகளும் நேர்ந்தன. 1658-ல் நிலைமை திருந்தியது. எமானுவல் அவர்கள் பல துன்பங்களுக் கிடையில் முப்பத்தியொரு ஆண்டுகள் சமயப்பணி செய்தார். 1652-ல் சத்தியமங்கலம் பகுதியில் பல கோயில்கள் ஏற்படுத்தப்பட்டன. மேலும், மக்கள் கிறித்துவத்திற்கு மதம் மாறினர். இதன் வாயிலாக கொங்கு நாட்டில் கிறித்துவ சமயத்தின் செல்வாக்கினை அறியலாம்.

கொங்கு நாட்டில் கருமத்தம் பட்டியில் ஜெபமாலை அன்னை ஆலயம், சத்திய மங்கலத்தில் அருளானந்தர் ஆலயம், வடவள்ளியில் வேளாங்கன்னி ஆரோக்கிய மாதா ஆலயம், புலியகுளத்தில் அந்தோணியார் ஆலயம், துடியலூரில் யூதாததேயூஆலயம், அவிநாசியில் தோமையார் ஆலயம் ஆகிய ஆலயங்கள் சிறப்பான வழிபாட்டுத் தலங்களாக உள்ளன. சிறப்பாக கொங்கு நாட்டில் கிறித்துவம் பரப்பியவர் அருட்திரு ராபர்ட் தேநோபிலி, புனித ஜான்தெபிரிட்ரோ, அர்க்கோலினி போன்றோர்.

கி.பி. 1784-ல் திப்புசுல்தான் படையெடுப்பால் கிறித்துவத் தலங்கள் அழிக்கப்பட்டன. ஆங்கிலேயர் மைசூர் நாட்டின் மீது படையெடுத்து திப்புசுல்தானை வென்றார். அச்சமயத்தில் பேரருட் திரு. ஷேம்பனூவா என்பவர் கொங்கு நாட்டின் பல பகுதிகளுக்கும் சென்று சிதறுண்ட கிறித்துவர்களை ஒன்று சேர்த்து ஞானதீட்சை கொடுத்து கிறிஸ்துவர் ஆக்கினார்.

1793-ல் மதம் மாறிய கிறித்துவர்களுக்குப்பின் போப்பிடமிருந்து ஒரு ஆனை வந்தது. அவர்கள் அதுவரை கடைப்பிடித்து வந்த இந்து சம்பிரதாயங்களைக் கைவிட்டு விடவேண்டும் என்பதே இந்த ஆனை. அதனால் இங்குள்ள கிறிஸ்துவர்கள் அதிருப்தியுற்றனர். கோவை மாவட்ட கிறித்துவ சங்கங்களுக்குக் கொச்சியிலிருந்து உதவி வந்தது. இப்பகுதியில் 1790 லிருந்து நாயக்கர்களுடைய

கொடுமை, ஐதர், திப்பு சுல்தான் படையெடுப்பு, கிறிஸ்துவ மத வளர்ச்சியைத் தடுத்தன. 1845 வரை ஐரோப்பாவில் இருந்து உதவி இல்லாமல் கிறித்துவ சங்கங்கள் இயங்கின. 1930-ல் லண்டன் கிறித்துவ சங்கம் இங்கு தன் பணியைத் துவங்கியது. டபிள்யு. பி. அட்டிங் என்பவர் திருவாங்கூரிலிருந்து வந்து மதப் பணியைத்துவக்கினார். 1866 வரை பணியாற்றினார். கிறித்துவ கல்வி நிலையங்களைத் துவங்கினார். 1856-ல் லிப்ஸிக் கிறித்துவ சங்கம் துவக்கப்பட்டது.

கொங்கு நாட்டிலும் கிறிஸ்துவர்கள் மேல் நாட்டில் ஒரு குழுவாக இருப்பது போல குழுவுடன் இணைந்துள்ளனர். லூத்தரன் சபை, புரோட்டஸ் டென்ட் சபை, பெந்தகோஸ் சபை எனப் பல பிரிவுகள் கொங்கு நாட்டில் உண்டு. கொங்கு நாட்டு கோவை வட்டத்தில் லூத்தரன் சபையார் மோசஸ் கண் மருத்துவ நிலையமும் போத்தனூரில் ஒரு கண் மருத்துவ நிலையமும் ஏற்படுத்தியுள்ளனர். எளாக் குறிச்சியில்வீரமாமுனிவர் கொங்கு நாட்டிற்கு வந்ததாக ஒரு கல்வெட்டுள்ளது என்பர்.[31]

## இஸ்லாம்

இஸ்லாம் மதம் கி.பி. பதினெட்டு பத்தொன்பது நூற்றாண்டுகளில் இங்கு வந்தது என்பர்.[32] ஐதர் அலி, திப்புசுல்தான் முதலிய மொகலாயர்கள் கொங்கு நாட்டிற்கு வந்து சைவ, வைணவக் கோயில்களை அழித்து தம்முடைய சமயத்தைப் பரப்பினர். விசய நகரப் பேரரசின் காலத்தில் இரண்டாம் கம்பணர் காலத்தில் ஏற்பட்ட மாலிக்காபூர் படையெடுப்பின் விளைவாக நாகேஸ்வரமுடையார் கோயில், வடுகம் பிள்ளையார் கோயில் அழிக்கப்பட்டன. இதற்குப் பிறகே பல மசூதிகளை ஏற்படுத்தினர். கொங்கு நாட்டில் பல மசூதிகளைக் காணலாம்.

## முடிவுரை

இக்கட்டுரையின் மூலம் கொங்கு நாட்டில் பண்டு தொட்டே இருந்த சமயங்கள் சைவம், வைணவம் ஆகியன ஆகும். சமண சமயம் கி.மு. இரண்டாம் நூற்றாண்டு முதல் செல்வாக்குப் பெற்று சைவ வைணவ பெரியார்களின் வருகையால் வீழ்ச்சியுறத் தொடங்கியது. அதன்பின் சைவமும், வைணமும், மிக்கச் செல்வாக்குப் பெற்று விளங்கின. இப்பொழுதும் செல்வாக்குடன் விளங்குகின்றன. அதன் பின் கிறித்துவம் கொங்கு நாட்டில் கி.பி. பதினாறாம் நூற்

றாண்டில் பரவத் தொடங்கி பின்பு காலூன்றி நின்றது. இஸ்லாம் கி.பி. பத்தொன்பதாம் நூற்றாண்டில் பரவத் தொடங்கி பின்பு காலூன்றி நின்றது. ஆகவே இப்பொழுது கொங்கு நாட்டில் சைவமும் வைணமும் மிக்கச் செல்வாக்குடனும், அதற்கு அடுத்த நிலையில் கிறித்துவமும் இஸ்லாமும் இடம் பெறுகிறது என்பதனை அறிய முடிகிறது.

**அடிக்குறிப்பு**

1. இராமச்சந்திரன் செட்டியார், **கொங்கு நாட்டு வரலாறு** அண்ணாமலைப் பல்கலைக்கழகம், அண்ணாமலை நகர், 1954 (ப. 85)
2. மேலது (ப. 88)
3. மேலது ( ப. 89 )
4. ஆர். பூங்குன்றன், கோவை மாவட்ட வரலாற்றுக் கருத்தரங்கு ஆராய்ச்சிக் கட்டுரைகள், '' கோவை மாவட்டத்தில் சமயம் '' 2976 ( ப .3 )
5. ம. இராமச்சந்திரன் செட்டியார், **கொங்கு நாட்டு வரலாறு** (பக். 93-108)
6. கோவைகிழார், **கொங்கு நாட்டில் சமணமும்** ( ப. 92 )
7. K.V. Subramaniya Iyar, Historical Selection of Ancient, Dekhan Vol II 65.
8. M.E.R., 1905 No. 598.
9. Ibid
10. M.E.R., 1905, No. 614, Epigraphia India, Vol______ Part VI, PP. 243.
11. M.E.R., 1901, Nos. 304 to 306 South Indica

    Inscriptions (S.I.I.) Vol VII, No. 530.

12. சண்முகப் பிரகதம் (ப. ஆ) ஆய்வுத்தேன், "சமணம்" சம்பகலட்சுமி (க. ஆ) கொங்கு பதிப்பகம், சென்னை, 1973 (ப. 28)

13. M.E.R., 1905, No. 705

14. நடனகாசிநாதன், கு. தாமோதரன் (தொ. ஆ) **கல்வெட்டு ஒரு அறிமுகம்** தமிழ்நாடு அரசு தொல்பொருள் ஆய்வுத் துறை வெளியீடு, 1976, பல்லவ மன்னன் சிம்மவர்மனின் பள்ளன் கோயில் செப்பேடு (ப. 1)

15. மேலது.

16. கொங்கு வேளிர், பெருங்கதை (3, 27) (149-152)

17. மேலது (4 : 14), (50-54)

18. பவணந்தி முனிவர், **நன்னூல்** சிறப்புப் பாயிரம்,
" திருந்திய செங்கோற் சீயகங்கன்
அருங்கலை விநோதன் அமராபரணன்
மொழிந்தனனாக முன்னோர் நூலின் வழியே
நன்னூல் பெயரின் வகுத்தான் "

19. குணவீர பண்டிதர், **நேமிநாதம்**, உரைப்பாயிரம்.
" உளமலி பேரருள் உயர்மிசை வைத்த
அளமலி களந்தை வச்சணந்தி முனிவர்
கொள்கையின் வழாஅக் குணவீர பண்டிதன். "

20. குணவீரபண்டிதர், **வச்சணந்திமாலை**, உரைப்பாயிரம்
" கற்றவர் புகழும் களந்தை தென்பதி
குற்றமில் வாய்மை குணவீர பண்டிதன் "

21. குருவை யுணர்ந்த விளங்கோ வடிகருட் கொண்டு சொன்ன
தருவை நிகருச் சிலப்பதிகாரத் தனித் தமிழ்க்
கருமை யுரைசெ யடியார்க்கு நல்லா ரவதரித்து
வருமை பொழினிரம் பைப்பதியும் கொங்கு மண்டலமே.

22. சண்முகப் பிரகதம், ஆய்வுத்தேன், (ப. 31)

23. ம. இராமச்சந்திரன் செட்டியார், **கொங்கு நாட்டு வரலாறு** (ப. 96)

24. ஆர். பூங்குன்றன், பதிவு அலுவலர், தொல்பொருள் ஆய்வுத்துறை, நேரில் கேட்டறிந்த செய்தி.

25. ம. இராமச்சந்திரன் செட்டியார், **கொங்கு நாட்டு வரலாறு** (ப. 97)

26. மேலது. (ப. 103)

27. Nagaraja Rao (Editor) Madhu recent Researcher in Indian Archology and Art History. P. 229.

28. ம. இராமச்சந்திரன் செட்டியார், **கொங்கு நாட்டு வரலாறு** (ப. 97)

29.

30. ஆர். பூங்குன்றன், "கோவை மாவட்டத்தின் சமயம்" (ப. 9)

31. மேலது (ப. 9)

32. மேலது (ப. 10)

---

# 7. கொங்கு நாட்டுச் சிறுதெய்வ வழிபாடு-சமுதாய நோக்கு

---

**டாக்டர் சி. கதிர்வேல்**
பூதப்பாண்டி

சமயக் கோட்பாடுகளை ஆன்மா பற்றிய சிந்தனை, ஆவிக் கொள்கை என்னும் இருநிலைகளில் பகுத்துக் காட்டுவர் ஆய்வாளர்கள். இதனடிப்படையிலேயே மில்டன் சிங்கர்[1] என்னும் ஆய்வாளரும் ஆன்மா பற்றிய சிந்தனைகளைப் பெருநெறி என்றும், அஃதல்லாத முற்பட்ட காலத்திய சமயக் கூறுகளின் தன்மைகளைக் கொண்ட ஆவி வழிபாட்டையும் வேறு வழிபாட்டு நிலைகளையும்

சிறுநெறி என்றும் பகுத்துக் காட்டியுள்ளார். இவ்விரண்டில் சிறு நெறியில் அடங்கிய சமயக் கொள்கையைச் சார்ந்து தோன்றிய வழிபாட்டு முறைகளுள் ஒன்றே சிறுதெய்வ வழிபாடாகும். இஃது பெரும்பாலும் ஆவிவழிபாட்டை அடியொற்றியதாகும். தத்துவார்த் தம் அற்றதும், அச்ச உணர்வில் தோன்றியதும், பிராமணிய வழிபாட்டுக் கூறுகளின் தொடர்பற்றுதுமாக இருப்பதாகக் குறிப் பிடுவர். தமிழக சிறுதெய்வ வழிபாட்டுக் கூறுகளிடையே பொது வான தன்மைகள் இருப்பினும் காலத்தின் தாக்கத்தால் அது பெரு நெறியுடன் கலந்து சில வழிபாட்டுக் கூறுகளையும் பெற்றுவிட்ட தால், சிறுதெய்வ வழிபாட்டுக் கூறுகளைப் பெருநெறியிலிருந்து முழுமையாகப் பிரித்தறிவதில் சற்றுக் கடினம் ஏற்படுகிறது.

கொங்கு நாட்டுச் சிறுதெய்வங்களை பொதுநிலையில் (பரவலாக) உள்ளவை, சிறப்பு நிலையில் (குறிப்பிட்ட ஊர்களில், குறிப்பிட்ட சாதியாரிடம் மட்டும்) உள்ளவை என இருநிலைகளில் பகுத்துக் காணலாம். பொதுநிலையில் உள்ள சிறு தெய்வங்களாக மாரியம்மன், முத்தாரம்மன், காளியம்மன், பத்திரகாளி, துர்க்காளி (துர்க்கைகாளி) மாகாளி, எல்லைப் பிடாரி, திரௌபதி, ஐயனார், முனியப்பன் தெய்வங்களைக் கூறலாம், கறுப்பண்ணன், மதுரை வீரன், அரசப்பன், சவுண்டம்மன், பெரியாண்டிச்சி ஆகிய தெய்வங்கள் குறிப்பிட்டவர்கள் வழிப்படும் நிலையில் இருப்பவை.

கொங்கு நாட்டுத் தெய்வ வழிபாட்டு வரலாற்றைப் பெருந் தெய்வ வழிபாடு, சிறுதெய்வ வழிபாடு என்றிரு திறமாய் படுத்துக் கொண்டாலும் இடைப்பட்ட தெய்வ வழிபாடு ஒன்றும் தோன்றி வளர்ந்து வரும் திறமும் ஆய்தற்குரியது.

இடைப்பட்ட தெய்வ வழிபாடு, சிறுதெய்வ வழிபாட்டு நிலை யின் முதிர்ச்சி எனலாம். பெருந்தெய்வ வழிபாடாகப் பரிணமிக்கும் பாங்கினதிஃதெனலுமாம். சிறு தெய்வங்கள் பெருந் தெய்வங் களாதல் இல்லை. பெருந்தெய்வங்கட்குரிய சிறப்பொடு பூசனை நிகழ்த்துதல் அந்தணர்தம் ஆர்வம் காரணமாகவும் தம் ஆதிக்கம் செலுத்தும் நோக்கம் காரணமாகவும் அமைந்தன அவ்வளவே. காளியம்மன், மாரியம்மன், ஐயனார் ஆகியவாம் தெய்வங்கள் சிறுதெய்வ நிலை நீத்துப் பெருந்தெய்வ நிலையில் கோயிலமைப்பும் வழிபாட்டு முறையும் பெறுதல் கருதத்தகுவன. அந்தணர் பூசை, அந்தணர் வழிபாடு, வேதம் ஓதுதல், பரம்பரை பரம்பரையாகப் பூசாரிகளாக இருத்தல், புராணக் கதைகளுடன் சிறுதெய்வங்களைத் தொடர்பு படுத்தல், பலியிடாமை, பெரிய அமைப்புடைய கோயில்

களைக் கட்டல், குடமுழுக்கு நிகழ்த்துதல், எடுப்புச் சிலையமைத்து தெய்வத்தை ஊர்வலமாக வலம்வரச் செய்தல் முதலியன இத் தகைத் தெய்வங்கள் உறையில் கோயில்களில் நிகழக்காணலாம்.

தெய்வ வழிபாடு

| பெருந்தெய்வ வழிபாடு | இடைத் தெய்வ வழிபாடு | சிறு தெய்வ வழிபாடு |
|---|---|---|
| 1. சிவன் | 1. காளி | 1. பிடாரி |
| 2. திருமால் | 2. மாரி | 2. முனியப்பன் |
| 3. பிரம்மன் | 3. ஐயனார் | 3. வேடியப்பன் |
| 4. சக்தி | | 4. கருப்பனார் |
| | | இன்னும் பிற |

கொங்கு நாட்டு மக்கள் ஒரு தெய்வ வழிபாட்டினர் அல்லர். கூட்ட வழிபாட்டினரும் (Mass as in church or Mosque) அல்லர். குடும்பம் அல்லது குழு வழிபாட்டினரே. கிறித்தவரைப் போன்றோ முகம்மதியரைப் போன்றோ ஒரு குறிப்பிட்ட நாளில் ஊரார் அனைவரும் ஒருங்குகூடி இணைந்து வழிபாடு செய்யும் திறத்தர் அல்லர். விழா நாட்களில் மட்டும் ஊரவர் ஒருங்கிணைந்து வழி பாடாற்றுதல் உண்டு. சிறுதெய்வ வழிபாட்டைக் கொங்கு நாட்டு மக்கள் நிகழ்த்தும் திறம் முந்நிலையினதாகக் காணலாம்.

1. குடும்பத் தெய்வமாகக் கோடல்
2. குலதெய்வமாகக் கோடல்
3. கிராம தேவதையாக் கோடல் அல்லது காவல் தெய்வ மாக கோடல்.

## குடும்ப தெய்வம்

குலக் குழுக்களிடையே குலதெய்வங்கள் காணப்படுமாறு போல ஒவ்வொரு குலக் குழுவிலும் காணப்படும் எண்ணற்ற குடும்பங்கள் தத்தமக்கெனக் கொண்டிருந்த தெய்வங்கள் அனந்தம். இக்குடும்ப தெய்வங்கள் இல்லந்தோறும் இருந்து குடும்ப நலங்காப்பதாகக் கருதுகின்றனர். வீட்டின் நலக்குறைவு நேரினும் வேறு இடர்ப்பாடு நிகழினும் வீட்டுத் தெய்வங்கட்குப் பூசையிட்டு வழிபாடாற்றுவர். இதனை வீட்டுத் தெய்வம் (தெவம், வீட்டுத் தெவம்) செய்தல் என்பர். மலைவாழ் மக்களும், இலம்பாடிகளும் தத்தம் வீட்டில்

வாயிற்படிமேல் தெய்வம் வைத்து வணங்குவர். வீட்டுத் தெய்வங்கட்குப் படைக்கும் பொருளை ஆண்களே நுகர்தற்குரியர். சேலம் மாவட்டம் மடத்துப்பட்டி, தானம்பட்டி, ஆண்டிக்கரை பகுதிகளில் ஒவ்வொரு வீட்டிலும் இறந்த பெண்கள் ''ஊட்டாயி'' என்று அன்போடு அழைக்கப்படுகின்றாள். வீட்டு ஆயி ''ஊட்டாயி'' என மருவிற்றுப் போலும். அதுபோல இறந்துபட்ட ஆண் மக்கள் இல்லங்கள்தோறும் 'பாட்டப்பன்'' என்று அழைக்கப்படுகின்றனர். நோய் நொடியிலிருந்து காப்பாற்ற பொங்கலின்போது இவ்வாண் பெண் தெய்வங்கட்கு வழிபாடாற்றுகின்றனர்.

கொங்கு வேளாளர் மணவினைக் காலத்தே மணச்சடங்கு தொடங்குமுன் மணமக்களின் புதுவேட்டி புடவைகளை நடுவீட்டில் வைத்து, படைப்புப்போட்டு வழிபாடு செய்கின்றனர். இதுவே மணவினையின் முதற்சடங்காகும். இது, ''நடுவீட்டுத் தெய்வங் கும்பிடல்'', ''புடவைக்காரி கும்பிடல்'' என வழங்குகிறது. வழிபாடு செய்தபின் காக்கையை முன்னோராகக் கொண்டு அப் படைப்புச் சோற்றை வீட்டுக் கூரைமேற் போடுகின்றனர். மண வினைக் காலத்தேயன்றி, இறந்தோர்க்கு இறுதிக்கடன் இயற்றும் போதும், ஆண்டுதோறும் 'நாட்கடன்' கொடுக்கும்போதும் கூரை மேற் சோறு போடுதலும் உண்டு.

## குலதெய்வம்

குடும்பங்கள் அனைத்தும் தத்தமக்கெனக் குலதெய்வம் கொள்ளும் நிலையும் அறியத்தகும். குலதெய்வங்கள் என்று பேசப் படுவன வெல்லாம் ஊன்றிப் பார்க்கின் இறந்துபட்ட முன்னோர்தம் வழிபாட்டில் விளைந்தனவே. ஒரே ஊரில வாழும் ஒரு குறிப்பிட்ட சாதியினரும் மொத்தமாக ஒரு தெய்வத்தைத் தம் குலதெய்வமாகக் கொள்ளுதல் இல்லை. ஒவ்வொரு குடும்பத்தினரும் தமக்கென வேறு வேறு தெய்வங்களைக் குலதெய்வமாகக் கொண்டிருக்கின்றனர்.

ஒரே சாதியினரிடையேயும் பங்காளிகட்கும், உறவு முறை யினர்க்கும் வேறு வேறு தெய்வங்களே குலதெய்வங்களாக அமை கின்றன. கன்னியாம்பட்டி என்ற ஊரில் இருபிரிவினராகிய வன்னி யரிடையே பங்காளிகள் ஐயனாரைக் குலதெய்வமாகவும் உறவு முறைக்காரர்கள் கருப்பணாரைக் குலதெய்வமாகவும் கொண்டிருக் கின்றனர். ஆனால் இவையிரண்டும் ஓரிடத்தனவாக இருப்பதால் ஆண்டுள்ள மக்கள் அனைவரும் அவற்றைத் தெய்வமாகக் கொண்டு

போற்றி வழிபடுகின்றனர். இடைப்பாடியில் வன்னியர், குயவர், வண்ணார், நாவிதர் அனைவரும் ஒன்று சேர்ந்து பெரியாண்ட வனைக் குலதெய்வமாக வழிபடுவதை இன்றும் காணலாம்.

குலதெய்வங்கள் குலக்குழு முறையுடன் இறுகப் பிணைந் துள்ளன. குலதெய்வங்கள் வழியே உறவுமுறை அறிந்து கோடல் இயலும், ஒரே குலதெய்வத்தைச் செய்யும் (வழிபடும்) மக்கள் அக்குலதெய்வத்தை வணங்குவோரிடம் மணவுறவு வைத்துக் கோடல் இல்லை. பூசை முறைகள் குலதெய்வங்கட்குத்தக வேறு வேறு திறத்தனவாக அமைந்துள்ளன. மகப்பேற்றுக் காலத்தும் மணநாள் முன்பும் பின்பும் வழிபாடு மேற்கொள்ளப்படும், ஐந் தல்லது பத்தாண்டுக்கொருமுறை கூட குலதெய்வ வழிபாடு நிகழ்த் தப்பெறும். பெரும்பாலான குலதெய்வங்களின் வழிபாடு இரவுக் காலத்தே (நள்ளிரவில்) நடைபெறும்.

சிறு தெய்வங்களில் சாதித் தெய்வங்களும் (மதுரை வீரன், காத்தவராயன்) உண்டு, சாதித் தெய்வங்கள் குறிப்பிட்ட சாதிக் குப்பொதுவானது. குலதெய்வம் முக்கியத்துவம் பெரும் சாதியில் சாதித் தெய்வங்கள் முக்கியத்துவம் பெறுவதில்லை.

## ஊர்த்தெய்வம் அல்லது காவல் தெய்வங்கள்

மாரியம்மன், காளியம்மன் போன்ற ஒருசில தெய்வங்களே ஊர்த்தெய்வங்களாகப் போற்றப்படுகின்றன. கொல்லி மலையின் காவல் தெய்வம் கொல்லிப்பாவை. ஊர் மக்களை நோய் நொடி யிலிருந்து காத்தற்கும், மழைவளம் சுரத்தற்கும் வழிபாடு நிகழ்த் தப்பெறும். காவல் தெய்வங்களாயமைந்தவை (எல்லைப் பிடாரி, எல்லமாத்தாய்) மக்கள், தம் தொழில் மேற்கொள்ளுங்காலை காப்புத் தருபவைகளாகவும் ஊர்க்காவல் செய்பவைகளாகவும் கருதப்பட்டு வருகின்றன. இத்தெய்வங்களுக்கும் படைப்பதிலோ அல்லது பூசை செய்வதிலோ குலக்குழு முறை பின்பற்றப்படு வதில்லை. குலதெய்வங்களைவிடக் காவல் தெய்வங்கட்கு வழிபாடு மிகுதி. தங்கள் வீட்டுப் பகுதிகளில் நாகப் பாம்பின் தொல்லை காணின் வழிபாடு நடத்தப்படுவதுண்டு.

சிறு தெய்வங்கட்கிடையேயும் பாகுபாடுகள் சிறுகச்சிறுகத் தோன்றின. அவற்றிடை ஏற்றத்தாழ்வுகள் கற்பிக்கப்பட்டன. கிராம, நகர வழிபாட்டு நிலைகளில் சிறுசிறு வேறுபாடுகள் காணப்படுகின்றன. இட அடிப்படையில் (Geographical Basis)


சிறு தெய்வங்களின் வகை
குடும்ப தெய்வம்
குல தெய்வம்
ஊர்த்தெய்வம்
நாகவழிபாடு
மரவழிபாடு
ஆண் தெய்வம்
பெண் தெய்வம்
ஆண் தெய்வம்
பெண் தெய்வம்
ஆண் தெய்வம்
பெண் தெய்வம்


சிறுதெய்வ வழிபாடு
இடம்
சமுதாயக்கூறு
வழிபாட்டுமுறை
தகுதி
உணர்வு
பணி
மலைப் பகுதி
நிலப் பகுதி
சாதி
உயர்வு
தாழ்வு
அன்பு
அச்சம்
பிராமணர்
பிராமணரல்லாதார்
மேனிலை
கீழ்நிலை
பலி
சடங்கு
பூசை
காவல்
கொடுமை தடுப்பு

வழிபாட்டு முறையிலும் அமைப்பு முறையிலும் சில ஒற்றுமைகளும் சில வேற்றுமைகளும் பிரித்தறியக் கூடும். சில சமுதாயக் கூறுகளின் (Social Factors) அடிப்படையிலும், ஒற்றுமை வேற்றுமை சொல்ல முடியும். எடுத்துக்காட்டாக சாதிப்பிரிவு, சமுதாய - பொருளாதார ஏற்றத்தாழ்வுகள் இவற்றால் பலி கொடுக்கும் முறையும், ஆண், பெண் தெய்வ வழிபாட்டு முறையும் விழாக்கள் நடத்தும் முறையும் பாதிக்கப்படுகின்றது. இது போன்றே அன்பு, அச்சம் ஆகிய உணர்வுகளின் அடிப்படையிலும் சிறுதெய்வ வழிபாட்டு முறை மற்றும் அமைப்பு ஆகியவற்றில் வேற்றுமைகள் தோன்றியிருத்தல் அறியத்தகும். சிறுதெய்வங் களின் தகுதியும் (Status) பணியும் (Function) கூட வேறு வேறாகக் கருதப்பட வேண்டிய சூழ்நிலையும் ஏற்படலாயிற்று.

கிராம வாழ்வுத் தொடர்பான பண்பாட்டினைச் சிறு பாரம் பரியம் (Little tradition) என்றும் அதற்கு மேலான செம்மைப் படுத்தப்பட்ட இலக்கியத் தொடர்பும் தத்துவத் தொடர்பும் உள் ளதைப் பெரும் பாரம்பரியம்-பெருமரபு (Great tradition) என்றும் வேறு படுத்தியுள்ளனர். பண்பாட்டுக் கூறுகளை உயர்ந்தோர் பண்பாடு, பாமரர் பண்பாடு என இருபெரும் பிரிவுகளாகப் பகுத்துப் பண்பாட்டாய்வாளர் ஆராய்ந்துள்ளனர்[2]. இவ்விரு பண்பாட்டு நெறிகளும் உயர்வர்க்கம், பாமர வர்க்கம் என்ற இரு சமூக அமைப்பின் அடித்தளத்திலே தோற்றம் பெற்று வளர்ந்து வந் துள்ளன. கல்வி, செல்வ மதிப்பு போன்றவற்றால் சிறந்து விளங்குவோரது பண்பாடு உயர்ந்தோர் பண்பாடாகவும் சமூக அமைப்பின் அடிமட்டத்திலே வாழ்ந்துவரும் எளிய மக்களின் பண்பாடு பாமரர் பண்பாடாகவும் கணிக்கப்படுகின்றன. பேராசிரி யர் க. சிவத்தம்பி கூறுகிறார்.[3]

"சிறு பாரம்பரியத்துக்கு வேத ஆகம அங்கீகாரம் கிடையாது. ஆனால் வழக்கு நிலையில் அவற்றுக்குரிய வன்மையுண்டு. இவை மிகக் குறைந்த மட்டத்திலே தொழிற்படுபவை. அது மாத்திர மல்லாது அவற்றின் ஒழுக்க வட்டம் மிகக்குறுகியது; மிக நெருக்க மானது" என்று.

சமூகத்தின் கருத்துத் தொடர்ச்சிக்கும் தொடர்ந்துவரும் இயக் கப்பாட்டிற்கும் இச்சிறு பாரம்பரியம் அத்தியாவசியமாகின்றது. அடிநிலை மக்களிடையே இவை அதிகமாகக் காணப்படலாம். ஆனால் மற்றவர்களிடையேயும் இவை இல்லாமலில்லை.

இத்தகைய பிரிவுகளின் அடிப்படையில் நாட்டார் இலக்கியமும் நாட்டார் கலைகளும் நாட்டார் தெய்வங்களும் பாமரர் பண்பாட்டைச் சார்ந்தனவாகின்றன.

சிறு பாரம்பரியம் பல பெரும்பாரம்பரியத்துடன் இணைக்கப்படுவதைக் காணலாம். கண்ணகியம்மன், மாரியம்மன், நாச்சிமார் கோயில்கள் ஆகமநெறிக் கோயில்களாக மாறி, மாரி அல்லது கண்ணகியம்மன் உமாதேவியாக வழிபடப்படுவதைக் காணலாம். முனியப்பன் வழிபாடு பிள்ளையார் வழிபாடாகவும் (தாதம்பட்டியில்) அரிகரபுத்திரனாகவும் திரிக்கப்பட்டு வழிபடப்படுகின்றன. ஆகமத் தொடர்பற்ற கண்ணகித் தெய்வக் கோயில்கள் பல ஈஸ்வரி, நாகம்மை ஆலயங்களாக மாற்றமடைந்தமை கடந்தகால வரலாறு.

புராண இதிகாசக் கதைகள் கிராம மட்டத்தில் உயர் வகுப்பினரிடையே வழக்கில் இருப்பதும் ஐயனார், பேச்சியம்மன் போன்ற சிறு தெய்வம் பற்றிய கதைகளே சமூகத்தின் கீழ் மட்டத்தினரிடையே பெருவழக்கில் இருப்பதும் பின்னாளில் இப்புராண இதிகாசக் கடவுளர்கள் மெல்ல மெல்ல சிறுதெய்வங்கள் பெற்ற இடத்தினைப் பெறுவதும் அல்லது அவற்றுடன் இணைக்கப்படுவதுமான வரலாற்றுண்மைகள் ஈண்டும் சிந்திக்கத் தக்கன.

காட்ட வளைத்து வில்லாய்ப் பூட்டி
கானாய் கோபவிடும் செந்தலை வேடுவர்
கோ கோ குமாரா கொலுவுக்கு அலங்காரா
நீதிவாகனா, நித்திய அவதாரா
நாராயணா, நரசிம்ம அவதாரா
அரிக்கும் சிவனுக்கும் உற்பத்தியாய்ப் பிறந்த
அரிமால் புத்திரா ஐயனாரப்பா
வேட்டுவத் தலைவா வேடியப்பா[4]

இப்பாடல் பிற்காலத்தே புனையப்பட்டது. நடுகல் வீரரை உயர் தெய்வங்களோடு இணைக்கும் முயற்சியாகும் இது. நடுகல் கல்வெட்டுக்களில் காட்டப்பட்டுள்ள வீரசுவர்க்கம் காட்சிகளில் நடுகல்-வீரர்கள் சிவனுடனும் திருமாலோடும் பிரம்மாவுடனும் ஒன்றிவிடுவதான நிலையைக்காண முடிகின்றது. ஆண் தெய்வங்களை உயர் தெய்வங்களோடு இணைக்க முயற்சிக்கும்போது சிவன் விஷ்ணு தெய்வங்களோடு இணைக்க வேண்டி இப்பாடல் புனையப்பட்டதாகக் கொள்ளலாம்.

ஆக்தாளே மீனாட்சி அம்பிகையே நீதிரும்பு
மாதாவே மீனாட்சி மகராசி நீதிரும்பு
ஆரம் கழுத்திலிட்டு அனுப்பும்மா உம்மகனை
மாலை கழுத்திலிட்டி மகனாரை நீ அனுப்பு
அப்பா மதுரை அழகுதுரை சீமானே
சாமி மதுரை சைவ குலச்சீமானே
புரவி அலங்காரா பொம்மி மணவாளா [5]

இந்நாட்டுப் பாடலில் மீனாட்சியை மதுரை வீரனுக்குத் தாயாக்கி வழிபட்ட மரபு புலனாகின்றது. உண்மையில் மதுரை வீரனுக்கும் மீனாட்சிக்கும் எவ்விதத்தொடர்பும் இன்றேனும் மதுரை வீரனைத் தெய்வமகனாகப் போற்றுதலால் அவனுக்கு ஏற்றம் அளிக்கும் நோக்கம் புலனாம். மக்கள் உள்ளங்கவர்ந்த ஒருவனை இவ்வாறு உலகன்னையின் மகனாகப் போற்றிடின் தம் அர்ச்சகப் பணி சிறக்கும் எனக் கருதினர் போலும் அர்ச்சகர்.

வெள்ளியினாலமைந்த முக அமைப்பு, கை, கால் உறுப்புக் களுடன் குடும்பத்தில் கருதப்படும் மாரியம்மன் மூலதெய்வம் இப் பொழுது அந்நிலையுடன் சிலையாகவும் மாற்றமடைந்துள்ளமை யும் நாள்தோறும் பூசை செய்வதற்கான மரபும் ஆகம மரபு தழுவிய பிற தெய்வங்களுடன் மாரியம்மனையும் ஒன்றாக எண்ணும் நிலையும் காண்கிறோம். இத்தகைய மாற்றங்கள் சமூகப் பண் பாட்டின் பரிணாமத்தை உணர்த்துகின்றன.

ஒருசில தெய்வங்கள் புராணக் கதைகள் வாயிலாக மூலக் கடவுளருடன் தொடர்பு படுத்தப்பட்டுள்ளன. கதைகளுக்கும் மதச் சடங்குகளுக்கும் ஒரு சமுதாயம் மதிப்பளிக்க வேண்டிய சூழ்நிலை ஏற்பட்டபோது சிறு தெய்வங்களுக்கும் சடங்குகளும் அவை பற்றிய புராணக் கதைகளும் (Legends) புனைகதைகளும் (Myths) பெரு கத்தொடங்கிப் பின் ஒன்றோடொன்று இணைத்து பிரித்தறியப் படாவண்ணம் கலந்தன. அந்நிலையிலேயே சிறு தெய்வங்களுக் கும் மழு, மறி, காளை, அரவு, பிறை, சங்கு, கருடன், சூலம், மயில், சேவல் எனும் குறியீடுகளை அமைத்து உருவங்கள் அமைக்கத் தொடங்கினர்.

நாட்டுப்புற மக்களிடையே வழங்கும் கதைப் பாடல்களை நால்வகைப்படுத்தலாம், [6] 1. சிறு தெய்வப் புனை கதைகள் 2. புராணங்கள் கூறும் கதைகள் 3. சமூகக் கதைகள் 4. வரலாற்றுக் கதைகள். இவற்றுள் சிறுதெய்வப் புனை

கதைகள் கிராம தேவதைகளின் பிறப்பு வரலாற்றைப் பற்றிக் கூறுவன. மதுரை வீரனைப் பற்றிய மதுரை வீரன் கதை, மதுரை வீரசாமி கதை, வீரய்யன் அம்மானை, இராமப்பையன் அம்மானை முதலியனவும், அண்ணன்மாரைப்பற்றிய அண்ணன்மார் சுவாமிக்கதை, குன்றுடையான் கதை முதலியனவும் இவ்வகையைச் சேர்ந்தவை. ஒருசில நாட்டுப் பாடல்களில் மாரியம்மன், கருப்பனார் ஆகிய தெய்வங்கள் புராண இதிகாசக் கதைகளுடன் தொடர்பு படுத்தப்படுதல் காணலாம். இத்தெய்வங்கள் முற்றிலும் திராவிடத் தொடர்புடையனவாம். இந்நிலையில் இவற்றிற்குப் புராணத் தொடர்புறுப்பது மக்களின் கல்வியறிவின்மையாலா அன்றி சிறு தெய்வங்களையும் உயர் கடவுளர்களுடன் இணைக்க வேண்டும் என்னும் கருத்தினாலா என்பது புலப்படவில்லை.

பொதுவாக சிறுதெய்வ வழிபாட்டின்போது தாரை, தப்பட்டை மத்தளம், உடுக்கை, பம்பை போன்ற இசைக்கருவிகள் பயன்படுத்தப்படுகின்றன. தற்போது கிராமியக் கலைக்கு மாறாக நாதசுரம், மத்தளம், பியானோ, எக்கோடின் முதலியன இசைத்தல் சிறு தெய்வ வழிபாட்டிலும் பயன்படுத்துவதைக் காணலாம். கும்மி கோலாட்டம் போன்ற கலைகளை விடுத்து பரதநூன் முறைக்கேற்ப நாட்டிய முறைகளைப் புகுத்தியுள்ள தன்மையும் சான்றாக அமைகின்றன. பெருந்தெய்வ வழிபாட்டு முறையில் உள்ளது போலவே குறிப்பாக அருச்சனை, அபிஷேகம், ஆராதனை, உருவ வழிபாடு, கடவுளை-உருவங்களை வெளியே எடுத்து வலம்வரச் செய்தல், அத்தணர்களைக் கொண்டு மூன்று கால, ஆறு கால பூசனைகள் நடத்துதல் போன்றவை சிறு தெய்வ வழிபாட்டில் செய்யப்படுகின்றன.

பெருந்தெய்வ வழிபாட்டு முறையின் செல்வாக்கும் ஓரளவிற்கு ச் சிறுதெய்வ வழிபாட்டு முறையில் மாற்றங்கள் தோன்றக் காரணமாக அமைந்தது என்றால் மிகையாகாது. பலி கொடுத்தல் போன்ற முறைகள் பல இடங்களில் மறைந்து வருவதைச் சான்றாகக்கூறலாம். குருதிப் பலிக்கு மாறாகக் குங்குமம் பூசிப் பூசணிக்காய், எலுமிச்சங்காய் போன்றவற்றை வெட்டிக் குருதி சிந்துவது போன்ற நிலை ஏற்படுத்துவதை நாமறிவோம். விலங்குப் பலி நிறுத்தப்பட்ட கிராமக் கோயில்களில் திருப்பாவை, திருவெம்பாவை ஓதப்பெறுவது குறிப்பிடத்தக்கது.

முன்பெல்லாம் சிறுதெய்வ வழிபாட்டில் அந்தணர்கள் மற்றும் உயர் வர்க்கத்தினர் கலந்து கொள்ளாத நிலை இருந்து வந்தது.

சில இடங்களில் விழாவினைத் தொடங்கி வவப்பதற்காக அந்தணர் களை அழைப்பதுண்டு. ஆயின் அன்னோர் விழாவிலும் வழிபாட் டிலும் பங்கேற்பதில்லை. சில இடங்களில் பிராமணர் வழிபாடு நடக்கும் இடத்தின் அயலே இருந்து பங்கேற்று வத்தனர். பலி கொடுத்தல் போன்றவற்றைப் பார்த்தலை வெறுத்து ஒதுக்கிய நிலை இருந்து வந்தது. ஆனால் சிறு தெய்வங்களை வழிபடாது புறக்கணிப்பதால் உயிருக்குத் தீங்கு நேரும் என்ற அச்ச உணர் வால் சிறிது சிறிதாகச் சிறுதெய்வ வழிபாட்டில் உயர் வர்க்கத் தினர் ஈடுபடத் தொடங்கினர். மேலும் சிறுதெய்வங்களில் சில வற்றைச் சக்தி வாய்ந்தவை (காளி, பிடாரி, ஐயனார்) என்று கருதியதும் இந்த வழிபாட்டிற்குக் காரணமாகும்.

பல சிறுதெய்வக் கோயில்களில் (மாரியம்மன், காளியம்மன்) அந்தணரே பூசாரிகளாக இருப்பதும் சிந்திக்கத்தக்கது. (சேலம் மாரியம்மன், ஈரோடு மாரியம்மன், செவ்வாய்பேட்டை மாரியம் மன், மேச்சேரி காளியம்மன் ஆகிய கோயில்களில் அந்தணர்கள் பூசாரிகளாக இருக்கின்றனர்.) சில ஆண்டுகளாகவே அந்தணர் களும் சிறுதெய்வ வழிபாட்டில் பங்கேற்றுச் சிறுதெய்வங்களை வணங்குவதைக் காண்கிறோம். இதுபோன்ற முறையினையே கீழ்நிலையாக்கம் எனலாம்.

### சமய உணர்வைப் பேணுதல்

தொல்வரவாம் சமூகங்களின் வாழ்வில் சமயம் முதன்மை பெறும். வாழ்க்கையில் பல்வேறு நடைமுறைகளும் செயற்பாடு களும் சமயத்துடனும் கோவில்களுடனும் இணைக்கப்பட்டிருக்கும். இவ்விணைப்புச் சங்கிலிகளாகக் கரணங்கள் விளங்குகின்றன. இந் தியக் கிராமங்களின் சமயம் குறித்துப் பின்வருமாறு ஏ.ஆர். தேசா யும் கூறுவது உற்று நோக்கத் தக்கது.[7] (சமயம்) கிராமத்தில் பொருளாதார வாழ்வில் முக்கிய பங்கை வகித்துள்ளது; இன்றும் வகிக்கின்றது. வேளாண்மை உற்பத்தியில் முக்கியமான படிநிலை கள்-விதைத்தல், பாதுகாத்தல், அறுவடை செய்தல் போன்றவை யும் ஏனையவையும் சமயக் காரணங்களால் முக்கியத்துவம் பெறு கின்றன, வினைஞன் ஒருவன் தனது தொழிலைத் தொடங்கும் போது இன்றியமையாது கடைப்பிடிக்கத்தக்க காரணங்கள் உண்டு. உழவருடைய கலப்பையும் வினைஞருடைய கருவிகளும் அவை முதன் முதல் பயன்படுத்தும்போது பொருத்தமான சமயக் கரணங் களால் புனிதப் படுத்தப் படுகின்றன.

தொழில்களின் பல்வேறு கட்டங்களும் சமயச் சடங்குகளுடன் தொடர்பு கொண்டனவாக அமையும். வேளாண் தொழிலில் இதற்குச் சான்றுகள் பல காணலாம். வயலை உழத்தொடங்கு முன் காவேரியம்மனுக்கும் பொன்னியம்மனுக்கும் பொங்கலிட்டுத் தொடங்குதல், வயலில் பூச்சி விழுந்து அழிவேற்படுத்தாமல் கோயிலுக்கு நேர்ந்து கொள்ளுதல், கோயில் கிணற்றிலிருந்து பெற்ற நீர் தெளித்து வயல் காவல் செய்தல் ஆகிய சடங்குகள் சமயத்துடனும் கோயிலுடனும் தொன்று தொட்டுத் தொழில் முறைகளுடன் இணைந்திருப்பதைக் காட்டும். கதிரடிக்கும் களத்தைச் சாண நீரால் வழித்து, உருண்டையான வெண்கல் ஒன்றைக் களத்தின் நடுவில் வைத்து அதன்மேற் கதிரைக் கொட்டுவர். அக்கல்லுக்கு 'மல்லாண்டவர்' என்று பெயர். சில இடங்களில் அதை 'அம்மையனார்' என்பர். இது கதிரைக் காத்தல் என்னும் நன்மை கருதியேயாகும். (மல்லன் - வலியோன் மல்லாண்வர் - வலி பொருந்திய தெய்வம்). ஏனைய தொழில்கள் தொடங்கு முன்னரும் தெய்வம் வாழ்த்தித் தொடங்குவது மரபாகும். தொழிலின் வருவாயோ விளைவோ குறையும்போது சமயம் சார்ந்த காரணங்களால் அவற்றை நிவர்த்திக்க முயற்சி செய்யப்படும். தொடர்ந்து ஒரு குறிப்பிட்ட பகுதியில் மீன்படுவது குறைவாக இருப்பின் வழிபடு தெய்வத்திற்கு மடை வைத்துப் பூசை செய்து 'மீன் அழைப்பு மந்திரம்' சொல்ல வேண்டுமென்பர். கோயிற் பூசாரிகள் தலைமை வகித்துச் செய்யும் இக்கரணம் கிராமியப் பொருளாதாரத்தைச் சமயத்துடன் இணைப்பதற்குச் சிறந்த சான்றாகும். தனியொருவன் வலையில் மீன் படாவிடில் கோயிற் பூசாரியைக் கொண்டு நீர் மந்தரித்து மீனவர் தன் உடலிலும் வலையிலும் தெளிப்பதுண்டு. இங்கும் சமயம் கிராமத்தின் சமூக வாழ்க்கையில் பயன்படும் இணைப்பும் கொண்டு விளங்குவது புலனாகிறது. இப்பயன்பாடும், இணையும் கரணங்கள் மூலம் வெளிப்படுகின்றன.

கிடைக்கின்ற சான்றுகளைக் கொண்டுநோக்கும் போது சிறு தெய்வங்களின் செல்வாக்கு கிராமியச் சூழலில் மிகுதியும் உள்ளது புலனாகும்.[8] மேனிலையாக்கத்தின் தாக்குதல் கிராமப் புறங்களில் குறைவாக இருத்தலே இதற்குக் காரணம். வழிபாட்டு முறையில் எளிமையும் மந்திரச் சடங்கின்மையும் சிறுதெய்வ வழிபாட்டில் நாம் காணலாம், பிராமணியத்தின் செல்வாக்கு இவ்விடங்களில் இன்மையே இவ்வெளிய முறைக்குக் காரணம். சிறுதெய்வ வழிபாடு செழித்துச் சிறந்ததற்கு கிராமங்களின் எளிய பொருளாதார

அமைப்பும் காரணமாகலாம். பெருங்கோயில்களின் நிர்மாணத் திற்கோ பெருவிழாவிற்கோ அப்பொருளாதாரம் இடந்தரவில்லை. மரத்தடியில் மிக எளிமையாகக் கல்லொன்று நட்டு முனியப்ப னென்றோ கருப்பன் என்றோ வழிபட்டு மனநிறைவு கொண்ட சமுதாயம் கிராம சமுதாயம்.

சிறு தெய்வங்கள் பெரும்பாலும் (1) செழுமை நல்குவன (2) நோய் நொடி நீக்குவன (3) அச்சுறுத்துவன (4) ஊர்க் காவல் புரிவன என்றின்ன திறத்தனவாக மக்களின் வாழ்க்கை யுடன் பின்னிப் பிணைந்தனவாக அமைந்துள்ளன. பரம்பொருள் எனக்கருதப்படும் சிவனாயினும் திருமாலாயினும் உலகு புரக்கும் அருள்நாட்டம் உடையவர்களாகவே கருதப்பட்டனரேயொழிய ஊரைக் காவல் புரியும் இயல்பினராக மக்கள் கருதவில்லை. நோய்நொடி நீக்கத்திற்கு மக்கள் நேர்ந்து கொள்வது சிறுதெய் வத்துக்கேயன்றி பெருந்தெய்வங்களுக்கல்ல. சிவன், திருமால் முதலியன மதரீதியாகவும், தத்துவ ரீதியாகவும் மக்களோடு தொடர்புடையன. ஆனால் சிறுதெய்வங்களாம் பல்வகை அம்மன்களோ செழிப்பு, அச்சம், நோய் நொடி நீக்கம் முதலிய காரணங்களால் கிராம மக்களின் உளம் பிணிப்பனவாம்.

## மேற்கோள்கள்

1. Singer milton, Krishna myths, rites and attitudes P. 62.
2. இ. பாலசுந்தரம், ஈழத்து நாட்டார் பாடல்கள் ப. 2, பண்பாட்டாய்வாளர்கள் main stream / substream; main culture/Little culture; Great tradition / Little tradition என்னும் அடிப்படையில் மேற்கொண்டுள்ளனர்.
3. க. சிவத்தம்பி (பதி) இலங்கைத் தமிழ் நாட்டார் வழக்கியல் பக். 43-44,
4. R. Nagasamy (Ed) Seminar on Hero Stones P-32.
5. பாடல் உதவி : பூங்குன்றன், பதிவு அலுவலர், தொல் பொருளாய்வுத் துறை, கோவை.
6. நா. வானமாமலை, தமிழர் நாட்டுப் பாடல்கள், ப. 19.

7. A R. Desai, Rural Religion, Rural S ocialogy in India P. 61.

8. (i) அ. இராசேந்திரன், சேலம் மாவட்டக் கோயில்கள் ப.4 கிராமதேவதைக் கோயில்கள் 36% சிவன் கோயில்கள் 20% வைணவக்கோயில்கள் 25% விநாயகர் கோயில்கள் 8% முருகன் கோயில்கள் 3% ஏனைத் தெய்வக் கோயில்கள் 8%.

(ii) Census of India 1961. Fairs and Festivals Vol. IX சேலம் மாவட்டத்தில் மட்டும் 2899 அம்மன் கோயில்கள் உள்ளன. இது மற்றெல்லாக் கோயில் களைக் காட்டிலும் எண்ணிக்கையில் மிகக் கூடுதலானவையே.

---

# 8. கொங்குநாட்டு இலக்கியங்கள்

**டாக்டர் நா. செயராமன்**
தமிழ்த்துறைத் தலைவர்
பாரதியார் பல்கலைக்கழகம்
கோயம்புத்தூர்

உலக இலக்கியம், இந்திய இலக்கியம் என்ற கோட்பாடுகள் உருவாகி வரும் இருபதாம் நூற்றாண்டில் வட்டார இலக்கியம் என்று பிரித்துக் காண்பது முரணாகுமோ என்ற ஐயம் ஏற்படுவது இயல்பு. உலக இலக்கியம், இந்திய இலக்கியம் என்று பொதுமைப் படுத்திக் காணுகின்ற அதே நேரத்தில் வட்டாரத்தோடு பொருத்தி அதன் இயல்போடு இணைத்துப் பார்ப்பது தமிழ் இலக்கிய மரபுக்கு ஏற்றதேயாகும். ஏனெனில் தமிழிலக்கியம் எனப்பொதுப்பட எடுத்

துக்கொண்டாலும் திணைதோறும் முதல், கருப்பொருள்களை வேறு படுத்தித்திணை இலக்கியங்களைப் பற்றிப் பேசுகிறார் தொல் காப்பியர். மேலும் இன்றைய வட்டார நாவல்களின் நிலையையும் இதனோடு ஒப்ப வைத்து எண்ணலாம்.

சங்க இலக்கியம் எனப் பொதுமைப்படுத்திப் பேசும் அதே நேரத்தில் கலித்தொகையும் பரிபாடலும் மதுரையைச் சார்ந் தெழுந்த பாடல்கள் என்ற அடிப்படையில் காணுகின்ற போது மேலும் புதிய செய்திகள் புலனாகும். சேர நாட்டுப் புலவர்களைப் பிரித்துக் காணும் போக்கு ஏற்கனவே உருவாகியுள்ளது.

இந்த அடிப்படையில் கொங்கு நாட்டில் தோன்றிய இலக் கியங்களைத் தொகுத்துக் காணும் நோக்கில் இக்கட்டுரை அமைகிறது.

கொங்குநாட்டு இலக்கியங்களை மூன்று வகையாகப் பிரித்துக் காணலாம்.

1. கொங்குநாட்டுப்பிரிவு தோன்றுவதற்கு முந்திய காலத்தில் கொங்கு நாட்டில் தோன்றிய புலவர்கள் இயற்றிய இலக் கியங்கள்
2. கொங்கு நாட்டுப் புலவர்கள் இயற்றிய இலக்கியங்கள்
3. கொங்கு நாட்டின் வரலாறு, சமுதாயம், பண்பாடு ஆகியவற்றைப் பற்றிய இலக்கியங்கள்.

சங்க கால ஊர்ப் பெயர்களையும், நாட்டுப் பிரிவுகளையும் அடிப்படையாகக் கொண்டு சங்ககால வள்ளல்களையும் சங்ககாலப் புலவர்களையும் வரையறை செய்வர். அவ்வாறு சங்க காலத்தே வாழ்ந்த வள்ளல்களாக

1. குமணன் - முதிரமலை
2. ஓரி - கொல்லிமலை
3. அதியமான் - தகடூர்
4. எழினி - தகடூர்
5. நள்ளி
6. எயினன்

7. பேகன் - பழனி
8, பழையன் (மோகூர்)
9. விச்சிக்கோ

ஆகியோர் கூறப்படுவர்.

1. பெருந்தலைச்சாத்தனார் (பெருந்தலையூர்-பவானிக்கரை)
2. அந்திகரனார் (அந்தியூர்)
3. கருவூர்கதப்பிள்ளை
4. கருவூர் கந்தப்பிள்ளை சாத்தனார்
5. கருவூர் பெருஞ்சதுக்கப்பூதநாதனார்
6. கருவூர் கோசனார்
7. உரோடகத்து சுந்தரத்தனார் (உலகடம்)

ஆகியோர் ஊர்ப்பெயர்களை அடிப்படையாகக் கொண்டு கொங்கு நாட்டுப் புலவர்களாகக் கூறப்படுவர்.

பக்தி இயக்க காலத்தில் தலங்கள் தோறும் நாயன்மார்கள் சென்று தேவாரம் பாடியுள்ளனர். அவற்றுள் கொங்கு நாட்டில் சைவத்தலங்களாக

1. திருநரை - (பவானி)
2, அவிநாசி
3. பேரூர்
4. திருமுருகன் பூண்டி
5. கொடுமுடி
6. குரக்குத்தளி
7. திருச்செங்கோடு

கொங்கேழ் தலங்கள் ஆகியவை கூறப்படும். எனவே தேவாரம் பாடியோர் கொங்கு நாட்டவர் அல்லராயினும் தலங்கள் கொங்கு நாட்டில் இருப்பதால் தேவாரப்பாடல்கள் கொங்குநாடு பற்றியவை எனக் கூறலாம்.

இதே காலகட்டத்தில்தான் கொங்குவேளிர் பெருங்கதையைப் பாடியுள்ளார். தம் பெயரிலேயே கொங்கு எனத் தாங்கியுள்ள முதல் புலவராக இவரை நாம் காண்கிறோம்.

தமிழில் தோன்றிய முதல் சமணக்காப்பியம் என்னும் பெருமை இதற்கு உண்டு எனலாம்.

நன்னூல் எழுதிய பவணந்திட வச்சணந்திமாலை, நேமிநாதம் ஆகியவற்றை எழுதிய குணவீரபண்டிதர் ஆகியோர் கொங்கு நாட்டில் தோன்றிய இலக்கணப்புலவர்களாவர்.

சிலம்பிற்குச் சிறந்த உரைகண்ட அடியார்க்கு நல்லார் கொங்கு நாட்டு உரையாசிரியர்,

## தலபுராணங்கள்

கொங்கு நாட்டில் உள்ள புண்ணியத் தலங்கள் பல. அத் தலங்கள் மீது பல தலபுராணங்கள் எழுந்துள்ளன.

கரூர், பவானி, பழனி, தாராபுரம், அன்னியூர், அவிநாசி, திருச்செங்கோடு, சென்னிமலை, கொடுமுடி ஆகிய எட்டுத்தலங்கள் மீது தலபுராணங்கள் பாடப்பட்டுள்ளன.

பாலசுப்பிரமணியக் கவிராயர் அவர்கள்பாடிய பழனித் தல புராணம் 1924-ல் மூன்றாம் பதிப்பாக வெளிவந்துள்ளது. இதனைப் பதிப்பித்த யாழ்ப்பாணம் கதிரைவேற்பிள்ளை 1908-ல் மதிப்புரை எழுதியுள்ளார். அவருக்கு முன் 250 ஆண்டுகட்குமுன் எழுதப் பட்டதாக அவர் எழுதியுள்ளதால் 1658ல் இத்தலபுராணம் எழுதப் பட்டிருக்கலாம். முப்பது சருக்கங்களையும் 987 பாடல்கனையும் கொண்டு விளங்குகிறது இந்நூல். இந்நூலுக்குக் கதிரைவேற் பிள்ளையவர்கள் பொழிப்புரை எழுதியுள்ளார்.

திருநணு என்று வழங்குகிற பவாநிகூடற்புராணம் 1882-ல் (சித்திரபானுவருஷம்) பாடப்பட்டுள்ளது. 18 சருக்கங்களும் 901 பாடல்களும் உள்ளன. ''கோயமுத்தூருக்கடுத்த ஓராட்டுக்குப்பை செட்டிபாளையம் மகாவித்துவான் வாசுதேவ முதலியாரவர்கள் மொழி பெயர்த்தது'' என்று மூதல் அட்டையில் உளது. ஆயின் பாடல் வடிவில் உள்ளது. மொழிபெயர்ப்பு என்று கூற இயல வில்லை.

கருவூர்ப்புராணம் விரோதி ஆண்டு அச்சிடப்பட்டுள்ளது. வசனமும் அதனோடு இணைந்துள்ளது. கந்தசாமி முதலியாரால் இயற்றப்பட்டது எனக் கருவூர்ப்புராண வசனம் முடிவடைகிறது.

வசனம் மட்டும் அவர் எழுதினாரா புராணமும் அவர் எழுதினாரா என்பது தெரியவில்லை. இருபத்தோரு சருக்கங்களும் 1129 பாடல்களும் இந்நூல் கொண்டுள்ளது.

1906:ல் வேலாயுதபண்டிதரால் இயற்றப்பட்டது தாராபுரத் தலபுராணம். பலருடைய சாற்றுகவிகள் நூலுக்கு முகப்பாக உள. 743 பாடல்களும் பல்வேறு படலப்பிரிவுகளும் கொண்டுள்ளது. அவிநாசிப்புராணம் கந்தசாமி முதலியார் முத்துநாகப்ப முதலியார் ஆகியோரால் பதிப்பிக்கப்பட்டுள்ளது. ஆக்கியோன் பெயர் தெரிய வில்லை என முன்னுரையில் கூறுகின்றனர். 13 சருக்கமும் 1020 பாடல்களும் கொண்டுள்ளது. இறுதியில் சுருக்க வசனமும் தரப்பட்டுள்ளது. விபவ வருஷம் பதிப்பிக்கப்பட்டுள்ளது.

1937-ல் கௌமாரமடாலயம் இராமானந்தர் மாணவர் கந்தசாமி சுவாமிகளால் எழுதப்பட்டது அன்னியூர் தலபுராணம்.

தென்காசி கவிராஜபண்டிதர் இயற்றிய திருச்செங்கோட்டுப் புராணம் 1932-ல் வெளியிடப்பட்டுள்ளது. 45 சருக்கங்களும் 1200 பாடல்களும் கொண்டுள்ளது.

இத்தல புராணங்கள் அந்தந்தத் தலத்து இறைவனது அருட் செயல்களையும் அற்புதங்களையும் விளக்கமாகப் பேசுகின்றன.

திருமூர்த்தி மலைப் புராணம் கிடைக்கவில்லை. வேலாயுத பண்டிதர் இதன் ஆசிரியர், 1910-ல் வெளியிடப்பட்டுள்ளது. 18 படலமும் 963 பாடல்களும் கொண்டது. அதன் வசனம் மட்டும் தனியே 1936-ல் வித்துவான் அருணாசலக் கவுண்டரால் வெளி யிடப்பட்டுள்ளது.

## திருப்பேரூர்ப்புராணம்

கச்சியப்பரால் இயற்றப்பட்டது. நாட்டுப்படலம், நகரப் படலம் தொடங்கி முப்பத்தாறு படலங்களும் 2220 பாடல்களும் கொண்டுள்ளது. 1885 ஆம் ஆண்டினையொட்டி முதல் பதிப்பு வெளியிடப்பட்டுள்ளது. சி. கே. சுப்ரமணிய முதலியார் இரண்டாம் பதிப்பினை வெளியிட்டுள்ளார்.

இந்நூலின் முற்பகுதியில் கோயம்புத்தூர் வித்துவான் கந்த முதலியார் எழுதிய திருப்பேரூர்ப் போற்றிக் கலிவெண்பா (92 அடிகள்) திருப்பேரூர்க் கிள்ளை விடுதூது, பேரூர் மும்மணிக் கோவை, பேரூர் பச்சைநாயகியார் ஊசல். திருப்பேரூர் மரகத வல்லியம்மன் மாலை, பேரூர் பச்சைநாயகியம்மை ஆசிரியவிருத்தம் ஆகிய நூல்கள் முத்துநைனாத்தை முதலியார் பாடியவை. பேரூர் பச்சை நாயகியம்மை பிள்ளைத்தமிழ், ஆசிரியர் பெயர் தெரியாத பேரூர்ப்பட்டி புராணம், திருப்பேரூர்க் கண்ணாடி விடுதூது, திருப் பேரூர் விளக்கு விடுதூது, வித்துவான் குட்டிகவுண்டர் பாடிய திருப் பேரூர் அரசம்பல விருத்தம், இராமசாமிக் கவிராயர் பாடிய திருப் பேரூர் வண்ணம், சிதம்பர தாண்டவராய முதலியார் பாடிய திருப் பேரூர் மரகதமஞ்சரி,வாசுதேவமுதலியார் பாடிய திருப்பேரூர் பச்சை நாயகியம்மன்பந்தடி, மு. அ.நஞ்சலக்கவிராயர் பாடிய திருப் பேரூர் உலா,கந்தசாமி முதலியார் பாடிய மருதாசலபதி உயிர்வருக்கமாலை ஆக்கியோர் பெயர் தெரியா மருதாசலபதி தாய்மகளேசல், மரு தாசலமூர்த்தி சதகம், பச்சைநாயகியம்மன் பேரில் வருகை, ஊஞ்சல், தென்பாங்கு, திருப்பேரூர் மரகதமாலை முதலிய 23 நூல்களும் திருப்பேரூர்ப் பிரபந்தச் செய்யுள் திரட்டு எனும் பெயரில் தொகு த்துத் தரப்பட்டுள்ளன.

தவத்திரு கந்தசாமி சுவாமிகள் பாடியதாகத் திருப்பேரூர்க் கோவை எனும் நூல் 477 பாடல்களையுடையதாய் உளது; திருப் பேரூர் பச்சைநாயகிஅம்மை பிள்ளைத் தமிழ் 100 பாடல்களை உடையது. இவர் எழுதிய நூல்கள் அறுபது; பாடல்கள் இரு பதினாயிரம் என முன்னுரை கூறுகிறது.

## சிற்றிலக்கியங்கள்

வீராச்சிமங்கலம் கந்தசாமிக் கவிராயர் வேளாள புராணம் 1907-ல் பாடிப்பதிப்பித்துள்ளார். வேளாளர் நிந்திக்கப்பட்டதால் அவர் பெருமை பாடப் புகுந்ததாக முன்னுரை கூறுகிறது. 1373 பாடல்களுடன் பல்வேறு படலப்பிரிவுகளுடன் நூலமைந்துள்ளது.

வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள் பாடிய பழனித்திரு வாயிரம் எனும் நூல் 16 வகைச்சிற்றிலக்கியங்களின் தொகுப்பாக முருகன் மேல் பாடப்பட்ட பாடல்கள் ஆயிரத்தின் தொகுப்பாகும். 1915-ல் முதற்பதிப்பும் 1973-ல் இரண்டாவது பதிப்பும் வெளி

வந்துள்ளன வெண்பாமாலை, பிள்ளைத்தமிழ், கலம்பகம், அந்தாதி முதலிய பல சிற்றிலக்கியங்களின் தொகுப்பு இது.

கோவை கா. சதாசிவ முதலியாரைப்புகழ்ந்து 1896-ல் பி. ஆர். கிருஷ்ணமாச்சாரியார் பாடியவை இரட்டைமணிமாலை அம்மானை' கோவைக்கலம்பகம் ஆகியவை. இரட்டைமணிமாலை 20 பாடல்கள் அம்மானை 3 பாடல்கள், கலம்பகம் 30 பாடல்கள் உள்ளன.

சி. கே. சுப்பிரமணிய முதலியார் எழுதிக் கோவைத் தமிழ்ச் சங்கத்தால் 1926-ல் வெளியிடப்பட்டது திருப்புக்கொளியூர் அவிநாசிப் பெருங்கருணையம்மை பிள்ளைத்தமிழ். 100 பாடல்கள் கொண்ட பெண்பாற் பிள்ளைத்தமிழ் இது.

1941-ல் கோவை கு. நடேசகவுண்டர் இயற்றியது மங்கை யர்க்கரசியார் பிள்ளைத்தமிழ் நூல்.

பழனிச்சமீன் விசயகிரிவேலச்சின்னோவையன் பாடிய 1943-ல் இரண்டாம் பதிப்பாக வெளியிடப்பட்ட நூல் பழனிப்பிள்ளைத் தமிழ். முப்பது பாடல்கள் பருவத்துக்கு மூன்று பாடல் வீதம் பாடப்பட்டுள்ளது.

வையாபுரிப்பள்ளு எனும் நூல் பழனி இம்முடிப்பட்டம் விசைய கிரி வேலச்சின்னோவையனால் இயற்றப்பட்டு 1943-ல் வெளியிடப் பட்ட சிற்றிலக்கியம். பள்ளுக்குரிய எல்லா இலக்கணத்தோடும் அமைந்துள்ளது, இந்நூலாசிரியரே பாடிய பழனித்துரை வண்ணம் எனும் நூலும் இதனோடு இணைத்து வெளியிடப்பட்டுள்ளது.

கொங்கு மண்டல சதகங்கள் என மூன்று சதக நூல்கள் காணப் படுகின்றன. அவற்றைக் கார்மேகக் கவிஞர், வாலசுந்தரக்கவி ராயர், கம்பநாதசுவாமிகள் ஆகியோர் இயற்றியுள்ளனர். கம்ப நாத சாமியவர்கள் பாடிய சதகத்துள் 30 பாடல்களே உள. ஏனைய இரண்டிலும் 100 பாடல்கள் உள்ளன. அம்பலவாணக் கவிராயர் பாடிய அறப்பளீசுவரசதகம், ஆறைக்கிழார் பாடிய கார்மண்டல சதகம் ஆகியவையும் குறிக்கத்தக்கவை.

பேரூர் தவத்திரு சாந்தலிங்க அடிகளார் திருமடவெளியீடாகப் பல பிரபந்தங்கள் வெளி வந்துள்ளன. வைராக்கிய சதகம், வை

ராக்கிய தீபம், கொலை மறுத்தல், அவிரோத உந்தியார் ஆகி யவை அவ்வாறு வெளிவந்தவை.

பாம்பணகவுண்டன் குறவஞ்சி எனும் நூலை பவானி பால பாரதி முத்துசாமி அய்யர் பாடியுள்ளார்.

அசதிக் கோவை, வருக்கக் கோவை, பட்டீசுவரக் கோவை ஆகியவை கொங்கு நாட்டில் தோன்றியவைாகும்.

கௌமாரமடத்தைச் சார்ந்த திரு இராமானந்த சுவாமிகள் எழுதிய இராமானந்தத் திரட்டு திரு சுந்தர சுவாமிகள் எழுதிய இராமானந்தப் பிரதாபம், திரு கந்தசாமி ஐயா எழுதிய சற்குரு சரித வண்ணக் கோவை ஆகியவை கௌமார மடாலயத்தால் வெளி யிடப்பட்டுள.

இச்சிற்றிலக்கியங்கள் அனைத்தும் பெரும்பாலும் 18, 19 ஆம் நூற்றாண்டில் தோன்றியவையாகும்.

எம்பெருமான் பத்தர்பாடி என்பார் பாடிய தக்கை இராமா யணமும் காங்கேயர் பாடிய உரிச்சொல்நிகண்டு, உசிதசூடாமணி எனும் நிகண்டு இரண்டும் கொங்கு நாட்டில் தோன்றியவை.

கருவூர்ச்சித்தர், கஞ்சமலைச்சித்தர், கொங்கணசித்தர், பாம் பாட்டிசித்தர் முதலியவர்கள் கொங்கு மண்டலத்தைச் சார்ந்த சித் தர்களாகக் கூறப்படுவர்.

பெரிய புராணத்துக்குச் சிறந்த உரையாக அமைந்துள்ளது சி. கே. சுப்பிரமணிய முதலியார் உரை. இவ்வுரை மட்டுமின்றி இவர் எழுதிய சிற்றிலக்கியங்களும் பலவாம். சி. எம். இராமச் சந்திரன் செட்டியார் கொங்கு நாட்டுத் தமிழறிஞர்.

இருபதாம் நூற்றாண்டில் கொங்கு வட்டாரத் தன்மையைக் காட்டும் (சண்முகசுந்தரம், பண்ணன், பிரதிபா ராஜகோபாலன்) வட்டார நாவல்கள் தோன்றின. வானம்பாடி கவிதை இயக்கம் தோன்றியது. (சிற்பி பாலசுப்பிரமணியம், புவியரசு அத்தகைய கவிஞர் வரிசையில் உள்ளவர்கள்) இன்னும் பற்பல படைப்பா ளர்கள் தோன்றியுள்ளனர். புலவர் குழந்தை திறனாய்வு, இலக் கணம் படைத்துள்ளார்.

கொங்கு வட்டார இலக்கியங்களை ஒன்றாகத் தொகுத்து அறிமுகம் செய்யும் முயற்சியே இங்கு மேற்கொள்ளப்பட்டுள்ளது. இவ் விலக்கியங்களை மேலும் நுணுகி ஆராய்ந்தால் அவற்றிற் கிடையே உள்ள பொதுமைப் பண்புகள், தனித்த இயல்புகள் புலப்படும்.

---

# 9. ஆர். ஷண்முகசுந்தரத்தின் நாவல்கள்

டாக்டர் ம. திருமலை
தமிழ் விரிவுரையாளர்,
மதுரை காமராசர் பல்கலைக்கழகம்

## முன்னுரை

தமிழ் நாவல் இலக்கிய வகையின் வரலாற்றில் விடுதலைக்குப் பிந்திய காலகட்டத்தில் குறிப்பிடத்தகுந்த எழுத்தாளராகத் திகழ்ந் தவர் ஆர். ஷண்முகசுந்தரம். முதலில் மொழி பெயர்ப்பு முயற்சி களில் ஈடுபட்டு, பின்னர் நாவல்கள் எழுதத் தொடங்கியவர். மணிக்கொடி எழுத்தாளர்களுள் முதன் முதலில் நாவல் எழுதத் தொடங்கியவர் ஷண்முகசுந்தரம்தான் என்று சிட்டி, சிவபாத சுந்தரம் ஆகியோர் குறிப்பிடுகின்றனர். [1]

கொங்கு நாட்டின் வட்டார மணம் கமழும்படி நாவல்களை எழுதியவர் இவர். ''கொங்கு நாட்டு கிராமங்களில் மக்கள் வாழ்க் கையில் சம்பவிக்கும் தவிர்க்க முடியாத நட்வடிக்கைகளை இயல் பான கலை நோக்குடன் ஷண்முகசுந்தரம் சித்தரித்திருக்கிறார்''[2] என்று சிட்டி, சிவபாதசுந்தரம் ஆகியோர் குறிப்பிடுகின்றனர்.

நாவல் இலக்கிய வகையின் வரலாற்றில் சமுதாய விமரிசனம் இலக்கிய உணர்வு ஆகிய போக்குகள் தோன்றிய காலகட்டத்தில்

ஆர். ஷண்முகசுந்தரத்தின் இலக்கிய உலக வருகை அமைகின்றது. எனவே இந்தக் காலகட்டத்து நாவல்களுக்குரிய போக்குகளுக் கேற்ற வகையில், புதிய சூழ்நிலைகல் உருவாகி வருதல் புதிய சூழ்நிலைகளின் தனிமனிதன் எதிர்கொள்ளும் இன்னல்கள்[3] ஆகியவ ற்றை ஆர் ஷண்முகசுந்தரம் தனது நாவல்களில் காட்டுகிறார். சமுதாயத்தில் தோன்றி வளரும் மாற்றங்கள் நன்கு புலப்பட புலப்பட அவற்றைப் பற்றிய அறிவு நன்கு தெரியும். அப்பொழுது அம் மாற்றங்களை மனித வாழ்வுடன் தொடர்புறுத்திப் பார்க்கக் கூடிய அறிவுப் பின்னணி ஏற்படுகின்றது. இதனால் நாவலின் முக்கியத்துவம் வளரத் தொடங்கும். நாவல் இலக்கியவரலாற்றில் இத்தகைய சூழ்நிலை உருவான போது ஆர். ஷண்முகசுந்தரம் நாவல் புனையத் தொடங்கியதால் அவருடைய நாவல்களில் சமூக மாற்றங்கள் மிகவும் ஆழமாகச் சித்திரிக்கப்படுகின்றன.

இந்தியாவில் வேளாண்மைச் சமூக அமைப்பின் சிதைவிற்கும் தொழில் துறைச்சமூக அமைப்பின் தோற்றத்திற்கும் ஆங்கிலேயர் களின் ஆட்சி முறை காரணமாக அமைந்தது.[5] பத்தொன்பதாம் நூற்றாண்டின் பிற்பகுதியிலிருந்து இந்திய நாடு முழுவதிலும் தேசிய முதலாளித்துவத்தொழில் வளர்ச்சி மிகுதியாக ஏற்பட்டது. ''நாட்டில் பெரிய முதலாளித்துவத் தொழில் நிலையங்கள் தோன்றியது தேசிய முதலாளித்துவ வளர்ச்சியைத் தூண் டியது''[6] என்று இது பற்றி வரலாற்றாசிரியர்கள் குறிப்பிடு கின்றனர். நாடு முழுவதிலும் காணப்பட்ட இந்தப் பொது நிலை மைகள் தொழில் வளர்ச்சி மிகுந்த கொங்கு நாட்டுப் பகுதிக்கும் பொருந்தக் கூடியதே. சமூகத்தில் நிலவிய இந்த மாற்றங்களினால் கிராமப் புறத்து மக்களின் வாழ்க்கையில் ஏற்பட்ட மாற்றங்களை ஆர். ஷண்முகசுந்தரம் தனது நாவல்களில் காட்டியிருக்கிறார்.

## நிலவுடமைப் போட்டி :

வேளாண்மை முதன்மைத் தொழிலாகத் திகழும் கொங்கு நாட்டில் நிலவுடமைக்காக நிகழும் போட்டிகளையும், அதன் மூலம் தனிமனிதர்களின் வாழ்வில் ஏற்படும் சிதைவுகளையும் ஆர். ஷண் முகசுந்தரம் சித்திரிக்கிறார்.

'நாகம்மாள்' நாவல் ஆர். ஷண்முகசுந்தரத்தின் நாவல்களுள் மிகச்சிறந்ததாகக் கருதப்படுகின்றது. சொத்துடமைக்காக நிகழும் போட்டியில் மனித உயிர்களும் குடும்ப உறவுகளும் மிக அற்ப மாகப் போய் விடுவதை இந்நாவல் காட்டுகிறது. கணவனை இழந்த நாகம்மாள் தன் கணவனின் தம்பியான சின்னப்பனின்

குடும்பத்துடன் இணைந்து வாழ்ந்து கொண்டிருக்கிறாள். அவளுடைய அடிமனத்தில், தன் கணவனின் சொத்துக்களில் தன் பகுதியைப் பிரித்துக் கொண்டு தனியே போய் விட வேண்டும் என்ற எண்ணம் இருந்து கொண்டே இருக்கிறது. இந்த எண்ணத்திற்கு அவ்வூர் மணியக்காரரும் ஊரில் போக்கிரி என்று பெயர் வாங்கியவனான செட்டியப்பனும் தூபமிடுகின்றனர். இறுதியில் இப்போராட்டத்தில் சின்னப்பன் உயிரிழக்கிறான். குடும்பத்தில் சொத்துப் பிரிவினைக்காக நடக்கும் இப்போராட்டத்தை நாட்டுப் பிரிவினையுடன் ஒப்பிட்டுக் காட்டுவார். தி. க. சிவசங்கரன்[7] எனினும் நாவலில் இக் கருத்துக்குரிய அகச்சான்றுகள் இல்லை.

"பனித்துளி' நாவலிலும் இதே போன்று விவசாயிகளுக்கிடையே நடக்கும் போட்டி சித்தரிக்கப்படுகிறது. பரம்பரைப் பணக்காரரான ராமசாமிகவுண்டர், கள் வியாபாரம் செய்துபுதிதாகச் செல்வரான கருப்பணக் கவுண்டர் ஆகிய இருவருக்குமிடையே ஊர்ப் பெரிய மனிதர் என்ற இடத்தை அடைய முயற்சிப்பதால் நிகழும் போட்டியில் தனி மனிதர்களின் வாழ்க்கை சிதைவதைக் காட்டுகிறார் ஆசிரியர். ''இப்போது கருப்பணக் கவுண்டர் தமது அந்தஸ்து எவ்வளவு இருக்கிறது என்று பரீட்சை செய்வதிலேயே கவனம் செலுத்தினார்''[8] என்று ஆசிரியர் கூற்றாகவே நாவலில் வருகின்றது. குப்பணக் கவுண்டரின் நிலத்தைக் கடனுக்கீடாகச் 'சுவாதீனம்' செய்வதில் தீவிரம் காட்டுவதன் மூலம் கருப்பணக் கவுண்டர் தனக்குப் புதிய அந்தஸ்தைத் தேடிக் கொள்ள முனைகின்றார்.[9] இதன் விளைவாக ஏற்பட்விருக்கும் கலகங்கள், உயிரிழப்புகள் ஆகியவற்றைப் பற்றி ஒரு மாறிய கோணத்தில் சிந்தித்துப் பார்க்கும்போது கருப்பணக்கவுண்டர் மனம் தெளிவடைகிறது. பாதை மாறுகிறது.[10]

'பூவும் பிஞ்சும்' நாவலிலும் இதேபோல் நிலவுடமைப் போட்டிகளை ஆசிரியர் காட்டுகின்றார். இறுதியில் விவசாயிகளிடையே ஒற்றுமை ஏற்படுவதாக இந்நாவலில் காட்டுகிறார்.

இத்தகைய நிலவுடமைப் போட்டிகளைக் காட்டும் போழ மனிதன் இவற்றிலிருந்து மீட்சி பெற வேண்டும் என்ற குறிப்பு[11] தொனிக்கும்படியாகவே ஆர். ஷன்முகசுந்தரம் காட்டுகிறார். சொத்துக்களில் பிரிவினை வேண்டும் என்று கோரும்போது இடையிடையே மிகுந்த மனப்போராட்டத்திற்கு ஆட்படுகிறாள்.[12] இறுதியில் அவளது செயல்களின் விளைவுகளைக்கண்டு செயலற்று

நிற்கிறாள்.[13] 'பனித்துளி', 'பூவும் பிஞ்சும்' ஆகிய நாவல்களில் இம்மீட்சி மிகவும் வெளிப்படையாகவே தெரிகிறது.

**வேளாண்மையின் நலிவு :**

தமிழகத்தின் வறண்ட பகுதிகளில் வேளாண்மை ஒரு லாபகரமான தொழில் அல்ல. பல தலைமுறைகளாக மண்ணைக் கிளறி வாழ்க்கை நடத்திப் பழகிப் போனதாலும் வேறு தொழில்கள் தெரியாததாலும் அதனையே செய்து வருகின்றனர். இயற்கைக்கும் மனிதனுக்கும் இடையே தொடர்ச்சியாக நடைபெற்று வரும் இந்தப் போராட்டத்தில் மனிதன் பல நேரங்களில் தோற்று விடுகின்றான். இத்தகைய சமயங்களில் விவசாயிகள் தங்கள் பிழைப்பிற்காக வட்டிக்குக் கடன் வாங்குவதை நடைமுறையில் காணலாம்- இதனால் சிறு விவசாயிகள் தங்கள் நிலங்களை இழந்து கூலித்தொழிலாளிகளாக மாறுவது, ஊரை விட்டுப் பிழைப்பிற்காக வேறிடம் போவது போன்ற அவலங்கள் நேர்கின்றன. ஆர். ஷண்முகசுந்தரம் இந்த அவலங்களைக் கூர்ந்து நோக்கி அவற்றைத் தம் நாவல்களில் காட்டியிருக்கிறார். 'பூவும் பிஞ்சும்' 'பனித்துளி', 'வரவேற்பு' ஆகிய நாவல்களில் இதனைக் காணலாம்.

'பூவும் பிஞ்சும்' நாவலில் வரும் காங்கயம் வீரப்பச் செட்டியார் விவசாயிகளுக்குக் கடன் கொடுத்து, சிறிது சிறிதாக அவர்களின் நிலங்களைக் கைப்பற்றிக் கொள்கிறார். இந்நாவலில் வரும் கொட்டத்தூட்டுக்காரர், ராமசாமிக் கவுண்டர் ஆகியோர் செட்டியாரிடம் கடன்பட்டு, தங்கள் நிலங்களை இழக்கின்றனர்.[13] ஊரிலிருக்கும் சிறு விவசாயிகளின் நிலங்களை செட்டியார் கைப்பற்றும்போது அவருக்குத் துணை நின்ற மணியக்காரர் இறுதியில் தனது நிலங்களைச் செட்டியாரிடம் இழக்கும் நிலை ஏற்படுகின்றது. 'சுள்ளிவலசில் அடியெடுத்து வைத்த புதிதில் மணியக்காரர் தயவால் மற்றவர்களை ஒரு வழியாகத் தலையைத் தடவி விட்டார். இப்போது மணியக்காரர் மேலேயே 'அம்பு' தொடுக்க வேண்டியிருந்தது'[14] என்று செட்டியாரின் மனநிலை காட்டப்படுகின்றது.

'வரவேற்பு' நாவலிலும் இதேபோன்று வீரப்பச்செட்டியாரின் செயல்கள் காட்டப்படுகின்றன. 'பனித்துளி' நாவலிலும் கடன் வாங்கிய சிறு விவசாயிகளின் சிதைவுகளைக் காட்டுகிறார் ஆசிரியர்.

வேளாண்மைத் தொழிலின் மீது வட்டித் தொழிலின் ஆதிக்கம் பரவியிருந்ததை ஆர். ஷண்முகசுந்தரம் தனது நாவல்கள் பலவற்றில் காட்டியிருக்கிறார். விவசாயிகளுக்கிடையே பிளவுகளை ஏற்படுத்தி அவர்களைத் தன் கைப்பிடிக்குள் வைத்திருக்கும் வணிகத் துறையின் திறன்களை இவரது நாவல்கள் காட்டுகின்றன. ஒரு விவசாயியின் நிலத்தைக் கைப்பற்றுவதற்கு அதே ஊரில் உள்ள இன்னொரு விவசாயியின் உதவியை நாடுவது; பின்னர், துணை நின்றவனின் நிலங்களைக் கைப்பற்றுவதற்கு வேறொருவனின் உதவியை நாடுவது; விவசாயிகளைப் பிரித்தாழுதல் ஆகிய சூழ்ச்சிகளையும்[15] சந்தர்ப்பவாதங்களையும் ஆர். ஷண்முகசுந்தரம் விமரிசிப்பதை இந்நாவல்களின் மூலம் காணமுடிகின்றது. வேளாண்மைத் தொழிலின் மீது வணிகத் துறை ஏற்படுத்திய இந்தப் பாதிப்பினைப் பற்றி வரலாற்றாசிரியர்கள் கூறுகின்ற கருத்தும் இங்கு ஒப்பு நோக்கத்தக்கது; அது பின்வருமாறு; இந்திய வர்த்தகர்களிடமும் வட்டித் தொழில்ளாளர்களிடமும் நிதி மூலதனம் குவிந்ததால்... வர்த்தக வட்டித்தொழிலாளர்கள் நிலவுடமையாளர்கள் ஆயினர்.[16] ஷண்முகசுந்தரத்தின் நாவல்களில் வீரப்பச் செட்டியார் என்ற வகை மாதிரிப் பாத்திரத்தின் செயல்களின் அடிப்படையையும், விளைவுகளையும் நாம் உணர முடிகின்றதல்லவா?

வேளாண்மையில் ஏற்படும் நலிவுகளைக் காட்டும்போது, அதற்குரிய காரணங்களையும் ஆர். ஷண்முகசுந்தரம் காட்டி அவற்றை விவசாயிகள் வென்று முன்னேற வேண்டும் என்பதையும் வலியுறுத்துகின்றார். விவசாயிகள் தங்களுக்குள் ஏற்படும் பிரிவினைகளை மறந்து ஒன்றுபடவேண்டும் என்ற கருத்தைத் தனது நாவல்களில் வற்புறுத்துகிறார்.

விவசாயிகளிடையே ஒற்றுமை ஏற்படுவதாகத் தனது நாவல்களில் காட்டும்போதும் அதனை யதார்த்தமாகக் காட்டுவதில் ஆர். ஷண்முகசுந்தரம் வெற்றி பெறுகின்றார். குறிப்பிட்ட சூழ்நிலையிலேயே பழகிப்போன மனிதர்களை அச்சூழ்நிலையிலிருந்து மாற்றுவதற்குரிய புதிய ஒளிபுற உலகிலிருந்து வேறிடத்திலிருந்து வருவதாகக் காட்டுகிறார். இது நடப்பியலுக்கு உகந்ததாகும். 'பூவும் பிஞ்சும்' நாவலில் சுள்ளிவலசு கிராமத்தில் மக்களிடையே ஒற்றுமையையும் விழிப்புணர்ச்சியையும் அதே ஊரைச் சேர்ந்த இளைஞன் மாரியப்பன் ஏற்படுத்துகிறான். அவனுக்கு இத்தகைய சமூக நோக்கு உருவாவதற்கு, அவன் நகரத்தில் சென்று கல்வி பயின்று புறவுலகுடன் தொடர்பு கொண்டது காரணமாக அமைகின்றது.

ஆர். ஷண்முகசுந்தரத்தின் நாவல்களில் காணப்படும் இப் பண்பு காரணமாக அவை நடப்பியல் நெறிக்கு உகந்தவையாகக் காணப்படுகின்றன. இருக்கின்ற நடைமுறைகளை அப்படியே சித்திரிக்கும் இயற்பண்பு வாத நாவல்களாக அமையாமல் இருக் கின்ற உண்மைகளை ஆய்தல், ஆய்ந்து மாற்றுதல்[17] என்ற பண் புகளைக் கொண்ட நடப்பியல் நாவல்களாக அவை திகழ்கின்றன.

## குடும்ப அமைப்பில் மாற்றம்

ஆர். ஷண்முகசுந்தரத்தின் நாவல்களில் புலப்படும் பிறிதொரு கூறு கூட்டுக்குடும்ப அமைப்பின் சிதைவாகும். கூட்டுக்குடும்பம் என்பது பழமையான நிலவுடைமைச் சமூக அமைப்பின் சின்ன மாகும் என்கிறார் கா. சிவத்தம்பி.[18] நிலவுடமைச் சமூக அமைப்பு மாற்றத்திற்குள்ளாகின்ற போது, அதன் ஒரு கூறான கூட்டுக் குடும்ப வாழ்க்கை முறையும் சிதைகின்றது.

'சட்டி சுட்டது' நாவலில் இதனைக் காட்டுகிறார். ஆர். ஷண் முகசுந்தரம். ஒரத்தப் பாளையம் சாமிக்கவுண்டரும் அவரது முன் னோர்களும் பல தலைமுறைகளாக அவ்வூரில் பெரிய நிலவுட மையாளர்களாகத் திகழ்ந்தவர்கள். சாமிக்கவுண்டர் தன் பிள்ளை களைக் கல்வி கற்பதன் பொருட்டு திருப்பூரில் கொண்டு போய் விடுகின்றார். நகர வாழ்க்கை அச்சிறுவர்களுக்குப் பல புதிய அனுபவங்களை ஏற்படுத்துகின்றது; தந்தையின் வழியிலிருந்து தடம் மாறிச் செல்கின்றனர் பிள்ளைகளின் போக்கு பிடிக்காமல் சாமிக்கவுண்டர் வீட்டை விட்டு வெளியேறுகின்றார்.

ஒருபுறம் நகர வாழ்க்கையும் பிறிதொரு புறம் நிலப்பிரபுத்துவ வாழ்க்கை முறையின் சீர்கேடுகளும் சாமிக் கவுண்டரின் கூட்டுக் குடும்பம் சிதையக் காரணமாகின்றன.

'நாகம்மாள்' நாவலிலும் நிலவுடமைக்கான போட்டி, கூட்டுக் குடும்பச் சிதைவுக்குக் காரணமாவதைக் காணலாம்.

## கிராம மக்கள் இடம் பெயர்தல்

நாவல் இலக்கியம் தோன்றுவதற்கே நிலவுடமைச் சமூக அமைப்பில் ஏற்பட்ட மாறுதல்கள் காரணம் என்பது பொதுவாகக் கூறப்படும் செய்தி, க. கைலாசபதி, கா. சிவத்தம்பி, சிட்டி சிவ பாதசுந்தரம் போன்றோர் இதைப் பற்றி விரிவாக எழுதியிருக் கின்றனர்.[19]

சென்ற நூற்றாண்டின் தொடக்கப் பகுதியில் கிராம மக்கள் பெருந்திரளாக நகரங்களை நோக்கி இடம் பெயர்ந்தனர்.[20] இத்தகைய இடப்பெயர்ச்சி இந்தியாவின் மரபு வழியான வாழ்க்கை முறைக்கு எதிரானது என்பதால்தான் காந்திஜி, கிராமத்தை நோக்கி திரும்பிச் செல்வதை ஒரு கோஷமாக முன் வைத்தார் என்று கூறலாம். சமூகத்தில் ஏற்பட்ட இந்த மாறுதலை ஆர். ஷண்முகசுந்தரம் தனது நாவல்களில் சித்திரித்திருக்கிறார்.

வேளாண்மையில் உழைப்புக்கும் தேவைக்கும் ஏற்ற ஊதியம் கிடைக்கவில்லை; இந் நிலையில் ஆலைத் தொழிலில் கிடைக்கும் நிரந்தரச் சம்பளம், பாதுகாப்பு போன்றவை மக்களுக்குக் கவர்ச்சி யூட்டுகின்றன. மக்களின் இம்மனநிலை 'சட்டி சுட்டது' நாவலில் ஒரு கதைமாந்தரின் கூற்றாகப் பின்வருமாறு வெளிப்படுகின்றது: ''ஒடம்பை வளைக்காமே உள்ளுக்குள்ளே திரிஞ்சுக்கிட்டிருந்தா போதும் பத்தாம் தேதி சம்பளம் கைக்குள்ளே வந்து உழுகும்ப்பா இங்கே மாளாத வெய்யிலில்லே பொளுதுக்கும் மமிட்டியைப் புடிச்சுப் பாரு ...... என்ன கிடைக்கும்?[21]

'தனிவழி' நாவலிலும் இத்தகைய இடப்பெயர்ச்சி காட்டப் படுகின்றது. கிராமத்தில் வாடகை வண்டி ஓட்டிக் கொண்டிருந்த கிட்டப்பன், கூலி வேலை செய்து கொண்டிருந்த கருப்பணன் ஆகியோர் நகரத்திற்குச் சென்று உயர்நிலைகளையும் வசதி களையும் அடைவதை இந்நாவலில் காணமுடிகின்றது.

முதலாளித்துவத்தின் தொடர் விளைவாக, தொழிற் சங்கங் களின் தோற்றம், போராட்டங்கள் தொழிற் சங்கங்களுக்கிடையே ஏற்படும் போட்டிகள், தொழிலாளர் தலைவர்களின் செயல்கள் ஆகியவையும் இவரது நாவல்களில் காட்டப்பட்டுள்ளன.

### வணிகத்தின் எழுச்சி

தொழில் துறைகளின் வளர்ச்சியைப் போன்றே நாட்டில் ஏற்பட்ட வணிக வளர்ச்சியும் இவரது நாவல்களின் காட்டப் படுசின்றது. தொழில் வளர்ச்சி ஏற்பட ஏற்பட பெரும் நிலச் சொந்தக்காரர்களை விடவும் வணிகர்களுக்கு மிகுந்த செல்வாக்கு சமூகத்தில் ஏற்பட்டது. இதனால் பெரிய நிலவுடமையாளர்களும், வணிகத்தில் ஈடுபடுவதில் ஆர்வம் காட்டினர். தமிழில் இரண் டாவது நாவலான கமலாம்பாள் சரித்திரத்திலேயே இச்சமூக நிலை

பிரதிபலித்துக் காட்டப்பட்டுள்ளதை அறிவோம். ஆர். ஷண்முக சுந்தரமும் இதனைத் தனது நாவல்களில் காட்டியிருக்கிறார்.

'அதுவா? இதுவா? என்ற நாவலில் படியூர்க் கிராமத்தில் பெரிய நிலவுடைமையாளராக இருந்த குருசாமிமுதலியார். திருப்பூர் பனியன்தொழிற்சாலையில் பங்குதாரராகச் சேர்ந்து பெருஞ்செல்வத் தை ஈட்டுகிறார். பின்னர் தானே தனியாகச்சில வியாபாரங்களை ஆரம்பித்து செல்வம் சேர்க்கிறார். இதனால் அவருக்கு முன்பி ருந்ததை விடவும் செல்வாக்கும் கௌரவமும் உயர்கிறது. இந்தியா விடுதலை பெற்ற பின்னர் வணிக வளர்ச்சிக்கு உகந்த சூழல் நிலவியதையும் ஆசிரியர் இந்நாவலில் காட்டுகின்றார்.[22]

'மாயத்தாகம்' நாவலும் வணிக வளர்ச்சியை மிக விரிவாக எடுத்துரைக்கிறது.

### காதல் சித்திரிப்பு

சமூக நிகழ்வுகளைக் காட்டியது போலவே, காதல் கருப் பொருளையும் ஆர். ஷண்முகசுந்தரம் தனது நாவல்களில் காட்டு கின்றார்.

காதல் தோன்றுவதற்கு இயல்பான சூழ்நிலைகளும் தகுந்த காரணங்களும் தேவை. அவையில்லாமல் திடுமெனக் கண்டதும் தோன்றுகின்ற காதல் நடைமுறையில் சாத்தியமானதல்ல. ஒத்த சமுதாயப் படிநிலையில் இருக்கும் ஆணும் பெண்ணும் பல்காற் பழகக்கூடிய வாய்ப்பு கிடைக்குமாயின் நட்பாகி காதல் மலர் வதுண்டு; சமநிலையில் இருப்போருள் துன்பப்படும் ஒருவர் மீது மற்றவர்க்கு முதலில் பரிவுணர்ச்சி தோன்றி, பின்னர் அதுவே காதலாகவும் மாறுவதுண்டு. இவ்வாறு தோன்றும் காதல் பல் வேறு சமூக பொருளாதார காரணங்களால் தடைபடுவதாகவோ, காதலர்களின் மனத்திண்மையினால் திருமணத்தில் நிறைவெய்து வதாகவோ காட்டும் போது, அச்சித்திரிப்பு நடைமுறைக்கு உகந் ததாகக் காணப்படும். காதல் கருவை வெற்றிகரமாகக் கையாண்டு கதைகள் புனைந்திருக்கும் பல்வேறு எழுத்தாளர்களின் படைப்புக் களில் இதனைக் காணமுடியும்.

ஆர். ஷண்முகசுந்தரம் 'இதயதாகம்' 'அதுவா? இதுவா?' ஆகிய நாவல்களில் காதல் கருவைக்கையாண்டிருப்பதற்கும் 'பூவும் பிஞ்சும்' 'தனிவழி', 'வரவேற்பு' ஆகிய நாவல்களில் காதலைக் கையாண்டிருப்பதற்குமிடையே மிகுந்த வேறுபாடு காணப்படு கின்றது.

'இதயதாகம்' நாவலில் கமலம்-சந்திரன் இருவருக்குமிடையில் காதல் தோன்றுவது,[23] வளர்வது, காதல் சிதைவது[24] அனைத்துமே செயற்கையாகச் சித்தரிக்கப்பட்டுள்ளன. 'கண்டதும் காதல்' என்ற பழமையான மரபு இந்நாவலில் பின்பற்றப்பட்டிருக்கிறது.

'அதுவா? இதுவா?' என்ற நாவலில் அருக்காணி - மணி இருவரின் காதல் சித்திரிக்கப்படுகின்றது. இதில் இருவருக்கும் காதல் தோன்றியதும் வளர்ந்ததும் தகுந்த காரணகாரிய இயை புடன் காட்டப்படவில்லை. நாவலின் இறுதிப் பகுதியில் ஆசிரியர் கூற்றாக ஒரு குறிப்பு மட்டுமே வருகின்றது. இறுதியில் காதலன் மணியுடன் கல்யாணிவேற்றூருக்கு ஓடிப்போகத்தயாராக இருக்கும் நிலையில், மணி வராமல் மணியின் உதவியாளன் காளிமுத்து வருகிறான். மணி சிறைப்பட்டதைத் தெரிவிக்கிறான். அருக்காணி காளிமுத்துவுடன் தன் வாழ்க்கையைப் பிணைத்துக் கொள்கிறாள். கல்யாணியின் இச்செயலுக்கும் தகுந்த விளக்கம் நாவலில் இல்லை. அப்பகுதி வருமாறு; ''விவரத்தைக் கேட்டாள். 'இனி மணி வர மாட்டான் ஆம் வரமாட்டான் என்று முணுமுணுத்தது மனம். 'அடுத்தபடியாக என்ன செய்யப் போகிறோம்? என்று அவள் மனம் மயங்கவில்லை. எதிலும் விரைவாக ஒரு முடிவுக்கு வந்து விடுவாள். தோல்வியைத் தூவென்று தள்ளும் சுபாவம்! தங்கப் பூட்டைத் திறக்க வெள்ளிச் சாவிதான் வேண்டுமா?

காளிமுத்துவைப் பார்த்தாள். அடிக்கும் தலைக்கும் ஊடுருவினாள்! நல்ல இளைஞன் நல்ல தேகக்கட்டு! புறப்படு முத்து! போவோம்! என்றாள் அருக்காணி''[25]

மேலே காட்டப்பட்ட பகுதியில் காதலுக்காக ஊரை விட்டு வேற்றூருக்குப் போகும் நிலையில் காதலன் சிறைபட்டதை அறியும்போது எந்த ஒரு சாதராணப் பெண்ணுக்கும் இயல்பாக ஏற்படும் அதிர்ச்சி, ஏமாற்றம், குற்றவுணர்ச்சி, போராடும் மன நிலை இவை எதுவுமே அருக்காணிக்கு ஏற்படவில்லை. காதலன் முன்னிலையில் ஆடைகளற்ற நிலையில் புகைப்படம் எடுத்துக் கொள்ளும் எல்லை வரை சென்ற ஒருத்தியினால் எவ்வாறு அவனை எளிதில் மறக்க முடிகிறது? காதலன் இல்லையென்றான பிறகு காளி முத்துவைத் துணையாக ஏற்க அவனது இளமையும் உடற்கட்டுமே காரணமாகக் கூறப்படுகின்றது.

இச்சூழல்கள் அனைத்தையும் நோக்கும் போது அருக்காணி பாத்திரப் படைப்பில் மனத்திண்மையும் முடிவெடுக்கும் திறனும்

அவளது செயல்களுக்குரிய காரணங்களாகக் கூறப்படுகின்றன. இதனைக் ''காதல் என்ற கருத்தின் மாற்று மதிப்பாகக் கொள்ளலாம்'' என்று தா. வே. வீராசாமி கூறுகிறார்.[26] ஆயின் ஒரு குறிப்பிட்ட பாத்திரத்தின் பண்புகளைத் தூக்கிப் பிடிக்கும் முயற்சியில் விளைந்த குழப்பங்கள்தான் இவை என்று கூற இடமிருக்கிறது.

'பூவும் பிஞ்சும்' நாவலில் மாரியப்பன்-செல்லாயா, 'தனிவழி' நாவலில் கிட்டான்-குஞ்சாள், 'வரவேற்பு' நாவலில் சாமியப்பன் ருக்மணி ஆகிய காதல் இணைகளின் காதற் சித்திரங்கள் நடப்பியலுக்கு உகந்த வகையில் சித்திரிக்கப்பட்டுள்ளன'. பூவும் பிஞ்சும்' நாவலில் நட்பும், 'தனிவழி' நாவலில் பரிவுணர்ச்சியும் 'வரவேற்பு' நாவலில் உறவு முறையும் காதல் தோன்றும் களன்களாகக் காட்டப்படுகின்றன. இந்நாவல்களில் காதல் சித்திரங்களைப் படைப்பதில் நடப்பியல் நெறியை ஆர். ஷண்முகசுந்தரம் பின்பற்றியிருக்கிறார்.

## முடிவுரை

ஆர், ஷண்முகசுந்தரத்தின் நாவல்களை நுணுகிக் காணும் போது, அவர் சமூக நடப்புக்களைக் கூர்ந்து கவனித்து வெளிப்படுத்துவதை உணரலாம். வேளாண்மைத் தொழிலின் சிதைவு, தொழில் துறைகளின் பெருக்கம், வணிகத்தின் எழுச்சி ஆகிய சமூக நடப்புகளை மிகவும் ஆழமாக வெளிப்படுத்துகிறார்; இவற்றைச்சித்தரிக்கும் போது நடப்பியல் இலக்கிய நெறியை இவர் முற்றிலும் பின்பற்றுகிறார்.

காதல் உணர்ச்சியைப் புனைவதில் இவரிடம் ஒரு சீர்மை காணப்படவில்லை. சில இடங்களில் மிகைப்புனைவாகவும் சில இடங்களில் நடப்பியலாகவும் படைத்திருக்கின்றார். சமூகச் சிக்கல்களைக் காட்டும் நாவல்களில் காதல் துணைக்கருவாக வருமிடங்களில் நடப்பியல் பேரிடம் பெறுகின்றது. காதல் மையக் கருவாக அமையும் நாவல்களில் மிகைப்புனைவும் மேலோட்டமான பார்வையும் இடம் பெறுகின்றது.

கொங்கு வட்டாரப் பழக்க வழக்கங்கள், பேச்சு மொழி ஆகியவை இவருடைய நாவல்களில் முக்கியக் கூறாக அமை

கின்றன. வட்டாரச் செய்திகள் நாவல்களில் அறிக்கைகளாக அமையாமல் கதைப் போக்கினூடேயே கலந்து கூறப்படுகின்றன. வட்டாரக் கூறுகள், நாவலின் முதன்மை நோக்கிற்கு ஊறு செய்யாத நிலையிலேயே இடம் பெற்றிருக்கின்றன.

'வட்டார நாவல்கள் ஒரு குறிப்பிட்ட வட்டாரத்தைப் பின்னணியாகக் கொண்டிருந்தாலும், மனித சமுதாயம் முழுவதும் - உணர்ந்து அனுபவிக்கத்தக்க பொறுமை அதில் இருக்க வேண்டும்' [27] என்ற கூற்றுக்கு ஏற்ற வகையில், ஆர். ஷண்முகசுந்தரத்தின் நாவல்கள் மனித சமூகத்திற்கே பொதுவாக இருக்கின்ற சிக்கல்களையே சித்திரிக்கின்றன. இவ்வகையில் ஆர். ஷண்முக சுந்தரத்தின் படைப்புக்கள் பிராந்திய இலக்கியம் என்ற நிலையைத் தாண்டி இந்திய இலக்கியம் என்ற நிலையை அடைகின்றன.

## குறிப்புக்கள்

1. சிட்டி & சிவபாதசுந்தரம், தமிழ் நாவல் நூறாண்டு வரலாறும் வளர்ச்சியும் (சென்னை : கிறித்தவ இலக்கியச் சங்கம், 1977), ப. 175
2. மேலது
3. கா. சிவத்தம்பி, தமிழில் சிறுகதையின் தோற்றமும் வளர்ச்சியும் (சென்னை : தமிழ்ப் புத்தகாலயம், 1978), ப. 16
4. மேலது
5. க. கைலாசபதி, தமிழ் நாவல் இலக்கியம் (சென்னை : நியூசெஞ்சுரி புக் ஹவுஸ், 1977), ப. 11, 26
6. கொ. அ. அனதோவா, இ. ம. போன்காரத் வேலின், இ. கி. கத்தோவ்ஸ்கி, இந்தியாவின் வரலாறு (சென்னை : நியூசெஞ்சுரி புக் ஹவுஸ் (வி. உ.), 1979), ப. 144
7. தி. க. சிவசங்கரன், **நாகம்மாள்,** தமிழ் நாவல் 50 பார்வை, இரா. இராஜசேகரன் (ப. ஆ.), (பூம்புகார் : பத்தினிக் கோட்டம் பதிப்பகம், 1978) ப. 45

8. ஆர். ஷண்முகசுந்தரம், பனித்துளி (கோயமுத்தூர் : புதுமலர் நிலையம், 1945), ப. 23

9. மேலது, ப. 22

10. மேலது, ப. 64

11. சி. சு. செல்லப்பா, **தமிழ் நாவல்களில் மனித விமோசனம்** என்ற கட்டுரை, தமிழ் நாவல்களில் மனித விமோசனம் தி. பாக்கியமுத்து (ப. ஆ.), (சென்னை : கிறித்தவ இலக்கியச் சங்கம், 1976), பக். 15, 20

12. ஆர். ஷண்முகசுந்தரம், நாகம்மாள் (சென்னை : இன்ப நிலையம், 1961), பக். 104, 123

13. மேலது

13அ. ஆர். ஷண்முகசுந்தரம், பூவும் பிஞ்சும் (சென்னை : இன்ப நிலையம், 1961), பக், 63, 65, 66

14. மேலது, ப. 115

15. மேலது, பக். 112, 113. 114

16. கொ. அ. அனதோவா மற்றும் பலர், மு. நூ., ப. 139

17. எஸ். தோதாத்ரி, தமிழ் நாவல் சில அடிப்படைகள் (சிவகங்கை : அகரம், 1980) ப. 4

18. கா. சிவத்தம்பி, நாவலும் வாழ்க்கையும் (சென்னை : தமிழ்ப் புத்தகாலயம், 1978) ப. 16

19. க. கைலாசபதி, மு. நூ., ப. 12-28; கா. சிவத்தம்பி, தமிழில் சிறுகதையின் தோற்றமும் வளர்ச்சியும், ப. 15-17; சிட்டி & சிவபாதசுரம், மு. நூ. ப. 3-8

20. Hang Nagpaul, Family and Social Change in Modern India, P. 97

21. ஆர். ஷண்முகசுந்தரம், சட்டி சுட்டது (சென்னை : தமிழ்ப் புத்தகாலயம், 1965), ப. 88

22. ஆர். ஷண்முகசுந்தரம், அதுவா? இதுவா? (நாகப்பட்டினம்: இமயப் பதிப்பகம், 1966), ப. 21

23. ஆர். ஷண்முகசுந்தரம், இதய தாகம் (சென்னை: குயிலன் பதிப்பகம், 1961), ப. 24, 26

24. மேலது, ப. 77, 81

25. ஆர். ஷண்முகசுந்தரம், அதுவா? இதுவா? (நாகப்பட்டினம்: இமயப் பதிப்பகம், 1966), ப, 115

26. தா. வே. வீராசாமி, தமிழில் சமூக நாவல்கள் (சென்னை: தமிழ்ப் புத்தகாலயம், 1978), ப. 127

27. இரா. தண்டாயுதம், நாவல் வளம் (சென்னை : தமிழ்ப் புத்த காலயம், 1977), ப. 203

---

# 10. சித்திரைக்கனி, கல்லும் மண்ணும் நாவல்களில் உள்மனப்பேச்சு

---

**மா. சு. திருமலை**
இந்திய மொழிகளின் நடுவன நிறுவனம்,
மைசூர்-570006.

உள்ளம் என்று ஒன்று உண்டா, அது உடலின் ஓர் உறுப்பாக இயங்குகிறதா அன்றி அது இரத்த ஓட்டம்போல், மூச்சு விடுதலைப்போல இன்னோர் ஓட்டமா, பேச்சாலும் நடத்தையாலுமே வெளிப்படுகிற ஒன்றா என்ற கேள்விகள் மிக முக்கியமானவை. நாவலைப் பொறுத்தவரையில் பேச்சாலும் நடத்தையாலும் பேச்சை மறைப்பதாலும் நடத்தையை மறைப்பதாலும்

பேச்சையும் நடத்தையையும் திசை திருப்புவதாலும் ஆசிரியர் கூற்றாலும், அவர் கதையைக் கூறிச்செல்லும் முறையாலும் அவருடைய வருணனையாலும் உள்ளம் உருப்பெறுகிறது. உருப் பெற்ற உள்ளம் வாசகர் உள்ளத்திலே பதியும்போது ஏற்படும் விளைவுகளின் அடிப்படையில் நாவலின் தராதம்மியம் நம்மால் கணிக்கப்படுகிறது—பிற கணிப்புகளுக்கு அடிப்படையாகவோ, பிற கணிப்புகளில் ஒன்றாகவோ இது அமைந்து விடுகிறது.

பேச்சு பல வகைப்படும். உரையாடலாக அமையலாம், ஒருவர் பேசியதை ரிப்போர்ட் செய்வதாக அமையலாம், உள்மனப் பேச்சாக அமையலாம், உள்மனப் பேச்சின் உருவிலே அமைந்து உள்மனப் பேச்சின் தொழிலோடு வெளிப்பேச்சின் தொழில்போல நடைபெறலாம். ஒருவரே பேசலாம், பலரும் சேர்ந்து பேசலாம், ஒருவர் பேசிய பின் இன்னொருவர் பேசுவதாகவோ, ஒருவரை மறித்து மறித்துப் பேசுவதாகவோ அமையலாம், சொற்களும் தொடர்களும் வாக்கியங்களும் தொடர்பு கொண்டு அமையலாம்‘ தொடரற்றும் அமையலாம், எழுத்துத் தமிழிலோ கொச்சைத் தமிழிலோ அல்லது இரண்டும் கலந்தோ, கிளை மொழி கலந்தும் தொழிற்பேச்சும் குழூக்குறி மிகுந்தும் உவமை உருவகங்கள் கொண்டும் அமையலாம். நடத்தை என்பதை நடை உடை பாவனை என்பனவற்றோடு ஒருவர் ஆற்றும் செயல்களையும் குறிப்பதாகக் கொண்டு அச்செயல்களுக்கும் நடை உடை பாவனைகளுக்கும் சமூகத்தில் கொடுக்கப்படும் அர்த்தங்களோடு ஒருசேரப் பார்க்க வேண்டும். தனி மனிதரின் உள்ளம் கூடச் சமூக அர்த்தங்களின் விளைவே என்பதை நாம் மறந்து விடக்கூடாது.

ஆசிரியர் கூற்றின் வழி வெளிப்படும் உள்ளம், ஆசிரியர் கூறும் வாக்கியங்களாலும் விளக்கங்களாலும் வெளிப்படும் உள்ளம் ஆசிரியர் தொட்டுக்காட்டி, முரண்பாடுகளை வெளிப்படையாகச் சொல்வதால் வெளிப்படும் உள்ளம் இலக்கிய நயம் குறைந்த உத்தியாகவே கொள்ளப்பட வேண்டும். ஆசிரியர் கூற்று கருத்து வடிவிலே, கருத்தாகவே அமையும்போது உள்ளம் என்பது கருத்தே, கொள்கையே, தத்துவமே என்றாகி விடுகிறது. உள்மனப்பேச்சின் வழியாகவே கதையை நடத்திச் செல்கிற நாவல்களில், சித்திரைக் கனி, கல்லும் மண்ணும் போன்றவற்றில், பிறபொருளையோ பிற மாந்தரையோ இவ்வுலக நடத்தையையோ விமரிசிக்கும் கதை மாந்தனின் கூற்று ஆசிரியர் கூற்றின் தொழிலைச் செய்கிறது. ஆகவே இவ்விமரிசனத்தின் வழியாக வெளிப்படும் உள்ளமும்,

உள்ளமும் கருத்தும் ஒன்றே என்ற அடிப்படையில் இயங்குகிறது. அதாவது இவ்வாசிரியர் கூற்றுப் போன்ற கருத்துகளின் அடிப் படையிலும் உள்ளத்தின் இயல்பைத் தெரிந்து கொள்கிறோம். இவ்வாசிரியர் கூற்றிலும் இவ்வாசிரியர் கூற்றுப் போன்ற கதை மாந்தரின் உள்மனப் பேச்சுக் கூற்றிலும் தொனிப் பொருள் இருக்குமானால் இலக்கிய நயம் கூடி விடுகிறது.

உள்மனப் பேச்சு வடிவிலேயே கதையை நடத்திச் செல்வது தமிழிலே பல நாவலாசிரியர்களால் கையாளப்பட்டுள்ள உத்திதான். இருப்பினும் இவ்வுத்தியின் புதுமை இன்னும் குறையவில்லை என்றே சொல்ல வேண்டும். புதுமை குறையாததற்குக் காரணம் பல. அவற்றுள் இவ்வுத்தி அதிக அளவு பயன்படுத்தப் படவில்லை என்பதோடு ஒரு சில கதைப் பொருளுக்கும் உணர்வுகளுக்கும் இவ்வுத்தி மிகவும் பொருத்தம் என்று கருதப்படுவதும் இவ்வுத் திக்கும் தனிக் கவிதைகளுக்கும் நெருங்கிய தொடர்பு உண்டு என் பதும் காரணமாகலாம்.

சித்திரைக் கனியும், கல்லும் மண்ணும் உள்மனப் பேச்சைக் கொண்டு கதையை நடத்திச் செல்கின்றன. கல்லும் மண்ணும் 1962 லும், சித்திரைக்கனி 1978 லும் வெளியிடப்பட்டுள்ளன. இரண்டுமே ஒன்றிற்கு மேற்பட்ட பதிப்பைப் பார்த்து விட்டன. சித்திரைக் கனியில் பல பாத்திரங்கள், ஒரு முகப்பட்ட கதை, எல்லாப் பாத்திரங்களும் மேன்மையைப் பாராட்டுகிற பாத்திரங் கள், உயர்ந்த பாத்திரங்களாகக் காட்சி அளிக்கின்றனர். கல்லும் மண்ணும் நாவலில் இரண்டே பாத்திரங்கள், ஒரு முகப்பட்ட கதை என்று சொல்ல முடியாது. இயற்கையை மூன்றாவது பாத்திரமாகக் கொள்ளலாம். கல்லும் மண்ணும் கொங்கு நாட்டு நாவலென்றும், சித்திரைக்கனி கொங்கு நாட்டெழுத்தாளர் எழுதிய சமன் செய்யப்பட்ட நாவலென்றும் கொள்ளலாம். சித்திரைக் கனியின் நாவலமைப்பு ஒரு பாத்திரம். பேசி முடிந்தவுடன் இன் னொரு பாத்திரம் பேசுகிற அமைப்பு. இவ்வாறு ஒருவர் விட்டு ஒருவர் பேசுகிற உள்மனப் பேச்சின் அடிப்படையிலேயே கதை நடைபெறுகிறது. கல்லும் மண்ணும் நாவலில் ஒருவர் விட்டு ஒருவர் பேசிக் கதையை நடத்தாது, ஆசிரியரே நடத்திச் செல் கிறார். இருப்பினும் இங்கே செங்காடனின் உள்மனப் பேச்சும் உளைச்சலும் நம்முடன் அவன் நேரடியாகப் பேசுவது போன்ற உணர்வைத் தருகின்றன. இந்த உணர்வுக்கு மிக முக்கிய கார ணம் கதையிலமையும் பாத்திரங்களின் குறைந்த எண்ணிக்கை,

செங்காடனின் சிந்தனையே நாவலில் அதிக இடம் பெறுவது. செங்காடன் பிறரின் உள் மனத்தையும், இயற்கையின் உள்மனத்தையும் சென்றுபோன நாட்கள் மற்றும் அனுபவங்கள் பற்றியுமே நினைப்பதும் ஆகும். அதாவது உள்மனப்பேச்சு பல்வகைகளில் அமையலாம் என்பதற்கும் இருநாவல்கள் வெவ்வேறு உருவத்தில் அமைந்தபோதிலும் உள்மனப் பேச்சு உணர்வை நமக்குத்தர முடியும் என்பதற்கும் சித்திரைக்கனியும் கல்லும் மண்ணும் எடுத்துக் காட்டுகளாக அமைகின்றன.

இன்னொரு மிக முக்கியமான செய்தி - இவ்விரண்டு நாவல்களுமே எழுத்துத் தமிழில் அமைந்துள்ளன. உள்மனப் பேச்சு கொச்சையிலேயே அமைகிறது. எனவே நாவலிலும் அவ்வாறே அமைப்பதுதான் சரியென்றாற்போல ஒருசிலரும் (சமூக யதார்த்த நாவல்கள் பலவற்றில் பார்க்கிறோம்), வயதுக்கேற்றவாறும் கல்விக்கேற்றவாறும் உள்மனப் பேச்சு கொச்சைப் பேச்சிலிருந்து தெளிந்த தமிழுக்கும், எழுத்துத் தமிழுக்கும் மாறிவரும் என்றாற்போல் ஒரு சிலரும் (நீல பத்மநாபன்), எல்லா நிலைகளிலும் எழுத்துத் தமிழே உகந்தது என்றாற்போன்று ஒரு சிலரும் உள் மனப்பேச்சைப் பயன்படுத்துகிறார்கள். சித்திரைக்கனியில் இலெ. செ. கந்தசாமியும். கல்லும் மண்ணும் நாவலில் க. ரத்னமும் தெளிந்த, எளிய எழுத்துத் தமிழையே முழுக்க முழுக்கப் பயன்படுத்துகிறார்கள். நாவல் இலக்கியத்தில் எழுத்துத் தமிழின் வெற்றியாக அவர்களுடைய மொழி அமைந்து விடுகிறது. அவர்கள் பயன்படுத்தும் எளிய, தெளிந்த, எழுத்துத் தமிநடையும் உள் மனப்பேச்சின் கவர்ச்சிக்கு ஒரு காரணமாக அமைகிறது என்று நான் நம்புகிறேன். எழுவாய் செயப்படுபொருள் பயனிலை வாக்கிய அமைப்பு, வாக்கியத்தில் சொற்களும் தொடர்களும் அமைகிற வரிசை, பயன்படுத்தப் பட்டுள்ள சொற்கள், அச்சொற்களோடு இயல்பாக வரக்கூடிய விகுதிகளையே பயன்படுத்துதல், வாக்கியத்தின் இயல்பான நீளம் ஆகியவை அன்றாடப் பேச்சின் இயல்புக்கு, இயற்கைக்கு மாறாகப் பயன்படவில்லை. எடுத்துக் காட்டாக அரசியல் மேடைப் பேச்சை, அது பயன்படுத்தும் விகுதிகளையும், வாக்கிய நீளத்தையும், வாக்கியத்திற்குள் சொற்களும் தொடர்களும் அமைகிற வரிசையையும், தெரிந்தெடுத்துப் பயன் படுத்துகிற சொற்களையும் நாம் ஒத்திட்டுப் பார்த்தால் நான் சொல்லும் செய்தியின் முக்கியத்துவம் புரியும். அதாவது சாதரண மொழியமைப்பையும், இயல்பாகப் பயன்படுகிற மொழியமைப்பையும் கொண்டு எழுதுவோமென்றால், வெளிப்படையான பேச்சே

உள்மனப் பேச்சாகக் கதையில் வேலை செய்ய முடியும்; பேச்சுத் தமிழில்தான், கொச்சைத்தமிழில் தான் உள்மனப் பேச்சு தரப்பட வேண்டும் என்பதில்லை என்பதும் எழுத்துத் தமிழே உள்மனப் பேச்சின் மணத்தையும் தரவல்லது என்பதையும் இவ்விரு நாவல் களால் தெரியவருகிறோம். ஆயின் ஒன்றைப் பேச்சுத் தமிழில் எழுதித் தன்மை நிலையைத் தந்துவிட்டால் உடனே அது உள் மனப்பேச்சாகக் கருதப் படுவதோடு உணரப்படவும் செய்கிறது. அதைப்போன்ற உணர்வை எழுத்துத் தமிழைக் கொண்டு எழுது வதால் உடனடியாகத் தர முடிவதில்லை. எழுத்துத் தமிழில் எழுதப்படுவது உள்மனப் பேச்சுத்தான் என்று உணர்வதற்குக் கதையின் பிடிப்பும் கதை சார்ந்த பிறவும் அதிக அளவு தேவைப் படுகிறது என்று எனக்குத் தோன்றுகிறது.

ஒருவர் பேசிய பின் இன்னொருவர் பேசி, ஒருவர் விட்ட இடத்திலிருந்து இன்னொருவர் தொடங்கிக் கதையை நடத்திச் செல்லும் சித்திரைக்கனியில், உள்மனப்பேச்சு, நம்மை நோக்கிய வாசகரை விளித்துக் கூறுகிற சொற்பொழிவே என்று கொள்ள வேண்டும். இப்பாத்திரங்களின் பேச்சு வாய்விட்டுச் சிந்திக்கிற உள்மனப் பேச்சு அல்ல. பலவிடங்களில் இப்பேச்சு வாய்விட்டுச் சிந்திக்கிற உள்மனப்பேச்சின் இயல்புகளைக் கொண்டிருந்த போதிலும், இப்பேச்சின் முக்கிய தொழில் கதையை நடத்திச் செல்வதே. சிந்தனையை உள்ளடக்கிடக்கையை மட்டுமே வெளிக் காட்டுவதல்ல. இது சுயசிந்தனை வெளிப்பாடாகவும், கருத்தை வெளிப் படுத்துகிற சாதனமாகவும், உணர்ச்சியைக் காட்டுகிற நம்மிடத்தில் உணர்ச்சியை விளைவிக்கிற சாதனமாகவும் பலவிடங்களில் மாறுகின்றது. ஆயின் அவ்வாறு மாறுவதெல்லாம், கதையை நடத்திச் செல்லுகிற நோக்கத்தை விடக் குறைந்த அளவிலேயே அமைகிறது. சித்திரைக் கனியில் கல்லும், மண்ணும் நாவலில் உள் மனப்பேச்சு வாசகரை விளித்துக் கூறுகிற சொற்பொழிவாக அமையாது செங்காடனின் மனத்தின் சிந்தனையை நமக்குத் தெரிவிக்கும் கருவியாக மாறி விடுகிறது. இவற்றுள் எது தேவை எது உயர்ந்தது என்ற பேச்சிற்கே இடமில்லை. இரண்டும் வெவ்வேறு தொழில்கள். இயற்கையைத் ,தோன்றாத்' துணையாகக் கொள்கிற கல்லும் மண்ணும், அவ்வியற்கையாலேயே உள்மனப்பேச்சின் பொருள் ஆழத்தை விரித்துக் கொட்டுகிறது. முந்தியதில் கதை நடத்துதல் முக்கியத்துவம் பெற, பிந்தியதில் மனவோட்டம்-பாத்திரத்தின் மனவோட்டமும் உணாச்சியும் முக்கியத்துவம் பெறுகிறது. இன்னுமொரு முக்கிய இயல்பு-கல்லும் மண்ணும் நாவலில்

ஆசிரியர் கூற்றும் உண்டு, பாத்திரத்தின் உள்மனப்பேச்சே கூற்றுப் போலத் தொழில் செய்யும் பலவிடங்களும் உண்டு. ஆசிரியர் கூற்று கதையை நடத்திச் செல்வதற்கும் பாத்திரத்தின் உள்மனப் பேச்சு பாத்திரத்தின் இயல்பையும் உணர்ச்சியையும் காட்டு வதற்கும் பயன்படுகின்றன. சித்திரைக் கனியிலோ பாத்திரத்தின் உள்மனப்பேச்சே ஆசிரியர் கூற்றுப் போலவும் பாத்திரத்தின் இயல் பையும் உணர்ச்சியையும் காட்டுவதற்கும் பயன்படுகின்றன.

சித்திரைக்கனியின் உள்மனப்பேச்சு தன் செயலுக்கு வருந்து கிற பேச்சாகவே முனைந்து நிற்கிறது. தான் செய்த தவறுகளால் ஏற்படும் கழிவிரக்கத்தைச் சித்திரைக் கனியில் ஒவ்வொரு பாத் திரமும் காட்டுகிறார்கள். இக்கழிவிரக்கம் இரண்டு நிலைகளைக் காட்டுகிறது-ஒன்று பாத்திரங்கள் தவறு செய்த போதிலும் இயல் பில் உன்னதமானவர்கள்; அவர்கள் வருந்தித் திருந்துகிறார்கள்; அல்லது செய்கிற தவறைப்பிறரின் நன்மைக்காகவே செய்கிறார்கள்; என்ற நிலை; இக்கழிவிரக்கத்தால் சென்று போன நிகழ்ச்சிகளைக் குறித்துஇரங்கலும் ஏங்கலும் தரப்படுகின்றன. இரண்டாவதுசென்று போன நிகழ்ச்சிகள் குறித்தும் அப்போது நடைபெற்றுக் கொண் டிருக்கின்ற நிகழ்ச்சிகள் குறித்தும், வரப் போகிற நிகழ்ச்சிகள் குறித்தும் உள்மனப் பேச்சு அமைந்தாலும், சென்று போன நிகழ்ச் சிகள் குறித்தே நம் சிந்தனை பெரும்பாலும் செலவழிவது போன் றே, சித்திரைக் கனியிலும் சென்று போன நிகழ்ச்சிகளே அதிக அளவு உள்மனப்பேச்சின் பொருளாக அமைகின்றன. ஆசிரியர் கதையை இறந்த காலத்திலேயே பொதுவாக நடத்திச் செல்வது மரபு என்றாலும் கதைகளை நாம் படிக்கும் போது அவை அப் போதுதான் நடக்கிறது என்ற உணர்வு நமக்கு எழும். வேண்டு மென்றே முன்பே நடந்தது என்ற உணர்வைத்தருவதாகச் சித்திரைக் கனியின் உள்மனப் பேச்சுச் சொற்பொழிவு அமைகிறது. அதற்கு எதிர்மாறாகக் கல்லும் மண்ணும் நாவலில் இழந்து போன உணர் வைத் தருவதற்காக, கழிவிரக்கம் காட்டுவதற்காக அல்ல, உள் மனப்பேச்சு அமைகிறது. இங்கே செங்காடன், ஆசிரியர் ரத்னம் கூறுவது போல, சிந்தனை யந்திரம் ஆக அவனுடைய உள்மனப் பேச்சின் வழி காணப்படுகிறான்.

மற்றுமொரு வேற்றுமை கூட உண்டு - 'கல்லும் மண்ணும்' செங்காடன் தனக்குத் தானே பேசிக்கொள்ளும் பேச்சையே நிறைய பேசுகிறான். இவ்வாறு சொல்லிக்கொண்டான், என்று நினைத்தான் போன்ற வினையடைத் தொடர்களைக் கொண்டு முடிபவை

ஆசிரியர் கூற்றாக எழுதப்படும். ஆனால் கல்லும் மண்ணும் நாவலில் இவ்வினையடைத் தொடர்களைச் செங்காடனின் உள் மனப் பேச்சைக் குறிக்க ஆசிரியர் பயன்படுத்துவதேயில்லை. இவ்வாறு பயன்படுத்தாததால் ஆசிரியர் கூற்றுக்கும்,, கதையை வளர்த்துச் செல்கிற ஆசிரியர் கூற்றுக்கும், பாத்திரத்தின் நேர டியான உள்மனப்பேச்சிற்கும் நல்ல வேற்றுமையை இடைவெளியை ரத்னம் உண்டு பண்ணுகிறார். இதோ ஓர் எடுத்துக்காட்டு.

உடலைக் கழுவிக் கொண்ட அவர்கள், வயிற்றை நிரப்பிக் கொள்ள வட்டிலின் முன் அமர்ந்தனர். இருவரும் வயிறு நிரம்ப உண்டனர். ஒருவர் முகத்தை ஒருவர் பார்த்தபடி, மௌனமாகவே உண்டனர்.

'என்ன பேசுவது! சோறு உண்ணும் போது வாய் பேச முடியுமா? மௌனமே நல்லது. வயிறு நிரம்பும் போது மௌனமே நல்லது. இப்பொழுது பேசி மனத்தை ஏன் வெறுமையாக்க வேண்டும்?'

வெற்றிலைப் பையை அவிழ்த்தபடி, அரசமரத்தடிக் கல்லின் மீது அமர்ந்திருந்த செங்காடன் வயிறும், மனமும் நிறைந்திருந்தன. மேற்கே நன்றாக மழை பெய்து கொண்டிருந்தது. சாரை சாரையாக, மழைக் கால்கள் இறங்கி இருந்தன. 'இன்றாவது அந்த மழை இங்கு வருமா?' என அவன் மனம் ஏங்கியது. கரையான் அதற்குள் வாழை மரத்தைச் சுற்றப் போய் விட்டான்.

மேற்கூறிய பகுதியில் தனித்த உள்மனப்பேச்சும், ஆசிரியர் கூற்றுக் கலந்த உள்மனப்பேச்சும் வருவதைக் கவனியுங்கள்.

தனித்த உள்மனப்பேச்சில் என, என்று மேற்கோள் விகுதிகள் அமையாமல் ஆசிரியர்கூற்றாக வரும் உள்மனப்பேச்சில் மேற்கோள் விகுதிகள் அமைந்து காணப்படுகின்றன. பிந்தியது கதையை நடத்திச்செல்வதற்கென்றும் முந்தியது பாத்திரத்தின் இயல்பாகவும் தொழில் புரிகின்றன கல்லும் மண்ணும் நாவலில்

உள்மனப்பேச்சு தனக்குத்தானே பேசிக்கொள்கிற பேச்சாகவும் ஆசிரியர் ரத்னத்தால் பயன்படுத்தப் படுகிறது. ஆனால் இங்கே தனக்குத் தானே பேசிக் கொள்ளும் பேச்சு, சிறுகுழந்தை மிகச்சிறு குழந்தை, விளையாடும் போது தனக்குள்ளே கற்பனை செய்து

கொண்டு பேசும் பேச்சுப் போலவோ ஆங்கிலத்தில் soliloquy என்று சொல்கிறார்களே அதைப்போலவோ, அன்றி நாடகங்களில் aside பேச்சு என்கிறோமே அதைப் போலவோ அமையாது. running commentary யாகவும், பிறருக்குத் தெரியாது தன்னோடு இருக்கும் ஒருவரிடம் மெல்ல, மவுனமாக, ஓசையில்லாது, மறை முகமாகப் பேசுவது போலவும், வெளிப்படச் சொல்லக்கூடிய தைச் சொல்லாது மனதிற்குள்ளேயே சொல்லிக் கொள்ளும் இயல்பை உடையதாகவும் அமைகிறது. செங்காடனின் மொழி இயல்பாகவும், உரையாடல் இயல்பாகவும் அவனுடைய குண நலனின் இயல்பாகவும் உள்மனப் பேச்சு மாறி விடுகிறது. சித் திரைக்கனியில் கதை மாந்தரின் மொழி இயல்பாகவும், உரையாடல் இயல்பாகவும் குணநலனில் இயல்பாகவும் உள்மனப்பேச்சு அமை யாது, ரிப்போர்ட் செய்வதே தொழிலென்று காணக்கிடக்கிறது. இவ்விரண்டும் வெவ்வேறு பயன்கள் எது உயர்ந்தது, எது தாழ்ந் தது என்று அறுதியிடுவது சரியல்ல. சித்திரைக் கனியிலும் கல்லும் மண்ணும் நாவலிலும் உள்மனப்பேச்சு சோகம் தழுவியே அமை கிறது. சோகம் தழுவி அமைதல் சென்று போன பொருளைப் பற்றிப் பேசுவதோடு நெருங்கிய தொடர்பு கொண்டுள்ளது. சித் திரைக்கனி இன்பமுடிவு நாவல் என்று நாம் கொண்டாலும் அடுத்தடுத்து வரும் கழிவிரக்கமும் சோகமும் துன்பத்தையும் தியாகத்தையும் (தியாகம் என்பது துன்பத்தை ஏற்றுக் கொள்வ தென்று கொள்ளலாமல்லவா?) மிகவும் முனைப்பாகக்காட்டுகின்றன இழப்பைப் பெரிதுபடுத்துவது, கொஞ்சம் கொஞ்சமாகக் கொண்டு வருவது, முன்பே இழந்து போனதைக் குறிப்பது உள்மனப் பேச்சின் வேலையாகக் கல்லும் மண்ணும் நாவலில் அமைந்து விடுகிறது. உள்மனப் பேச்சு சோகத்தை மட்டுமே குறிப்பதற்குத் தமிழ் நாவலில் பயன்படுகிறது என்று சொல்ல முடியாது. சித் திரைக் கனியில் வருகிய ரிப்போர்ட் பாணி, தன்மை இடத்தில், முதல் தமிழ் நாவலான பிரதாப முதலியார் சரித்திரத்திலேயே இன்பமுடிவுக்குப் பயன்படுகிறது. பல நாவல்களில் காதலுக்கு, இன்பமுடிவு தரும் வகையில் அமைகிறது. இருப்பினும் இந்த நடை சோகத்திற்கே உரியது, மிகவும் பொருந்தும் என்கிற நினைப்பும் நம்மிடம் உண்டு. அதை உறுதிப்படுத்துவது போல சித்திரைக்கனியும் கல்லும் மண்ணும் அமைகின்றன.

உள்மனப்பேச்சின் இன்னொரு பயன் உள்மனப்பேச்சின் வழி கதைமாந்தர் தங்கள் தங்கள் இயல்புகளை வெளிக் காட்டுவ தோடு இவ்வுலகத்தைப் பற்றிய அவர்கள் கருத்தையும் வெளி

யிட உள்மனப் பேச்சு மிகவும் பயன்படுகிறது. இக்கருத்துகள் அறநெறிப்பட்டனவாக அமையலாம், வேறு வகையிலும் அமையலாம். அறநெறிப் பட்டனவாக சித்திரைக்கனியிலும், உலகத்தை விட்டு விலகி இருப்பதை, விலகி இருக்க விரும்புவதைக் காட்டுவதாகக் கல்லும் மண்ணும் நாவலிலும் அமைகின்றன. நமக்குப் பேச வாய்ப்புக் கிடைத்தால் விட்டு விடுவோமா? மனிதர்கள் தங்கள் தங்கள் குரலையே கேட்டுக் கொண்டிருப்பதில் மிகவும் மகிழ்ச்சியடைவது இயற்கையில் காணக்கூடிய ஒன்று. தங்களைப் பற்றியே பேசுவதில் மகிழ்ச்சியடைவதும் இயற்கையில் காணக் கூடிய ஒன்று; ஆயின்' இந்த 'தங்களைப் பற்றியே பேசிக் கொண்டிருக்கும் இயல்பு' வெறும் புலம்பலாகவும்/ அலட்டலாகவும் கதையோடு தொடர்பு இல்லாததாகவும் இருந்தால் கதை தொடர முடியாது. ஆகவே கதை நடத்து முடிவதற்குரியவாறு தங்களைப் பற்றியே பேசிக் கொண்டிருக்கும் இயல்பு நாவலாசிரியர்களால் கட்டுப்படுத்தப்படுகிறது. இக் கட்டுப்பாட்டோடு பிறரையும் பிற பொருள்களையும் விமர்சிக்கிற இயற்கையான குணத்தையும் சேர்த்தவுடன் இவ்வுலகத்தைப் பற்றிய கதை மாந்தரின் கருத்து உருப்பெறுகிறது.

பொதுவாகச் சொன்னால், கதை மாந்தரின் உள்ளம் உண்மையான மனிதர்களின் உள்ளத்தைவிட எளிமையானதே. அதாவது கதை மாந்தரின் உள்ளமென்பது ஆசிரியர் தம் கதையைக் கொண்டு உருவாக்குவது. உள்ளத்தை, கதை மாந்தரின் உள்ளத்தைக் கதைக்குள்ளேயே அடக்கி விடுகிறார்; கதையின் எல்லைக்குள் இருந்தே உள்ளத்தைப் புரிந்து கொள்ள வேண்டும் என்பதால் உண்மையான மனிதர்களின் உள்ளத்தைவிட அது எளியது என்று கொள்ளலாம். ஆனால் கதையையே உலகத்தைப் போலவும் உலக மாந்தர் போலவும் சிக்கல் உடையதாகவும், பல்வேறு இயல்புகளை ஒன்றுக்குள் ஒன்றாய் அடக்கிப் படைக்கும்பொழுது கதை மாந்தர் உள்ளமும் உலக மாந்தர் உள்ளம்போல சிக்கல் மிகுந்ததாக மாறலாம். ஆனால் இவ்வாறு மாற்றுத்திறன் படைத்தவர்கள் மிகக்குறைந்த நாவலாசிரியர்களே. இவ்வாறு உலக மாந்தர் உள்ளம்போல் கதை மாந்தர் உள்ளத்தையும் சிக்கலாகப் படைப்பதற்கும் உள்ளத்தையே உருவாக்குவதற்கும், கதை மாந்தரைப் பொம்மை நிலையிலிருந்து உயிருள்ளவர்களாக மாற்றுவதற்கும் உள்மனப்பேச்சு சிறந்த கருவியாக அமைகிறது. இக் கருவியைக் கந்தசாமியும் ரத்னமும் இலக்கிய உணர்வை வளர்க்கும்

வண்ணமும் கதை மாந்தர் குணநலனை வெளிக்காட்டும் வண்ணமும், கதை மாந்தர்க்கு உயிரூட்டுவதற்கெனவும் பயன்படுத்துகின்றனர்.

உள்மனப்பேச்சின் ஒரு தொழில் கதை மாந்தருக்கு உயிரூட்டும் தொழில் என்றேன். உள்மனப்பேச்சு உடையவராகக் காட்டப்பட்ட உடனேயே கதை மாந்தர் உள்ளியக்கம் உடையவர், சிந்தனை யந்திரம் என்று சொல்லாமலேயே குறிக்கப்படுகிறார்கள். அதாவது உள்மனப்பேச்சே உயிரின் அடையாளமாக, உயிரின் அசைந்தாடுவதின் அடையாளமாக மாறி விடுகிறது. விலங்குகளும் பறவைகளும் கிளத்துந போல அமைவது மனிதநிலைக்கு, உயிருள்ள உணர்வுள்ள நிலைக்கு வருவதை நம் தொன்னூல் கூறுகிறதல்லவா? மனிதரைப் பொறுத்த வரையில் வெளிப்பேச்சு இயல்பானது; உள்மனப்பேச்சு அனர்களுடைய உயிர் ஓட்டத்திற்கு, விலங்குகளின் கிளத்தும் இயல்பு போல, குறியீடாக மாறி விடுகிறது. அதை அடுத்த நிலையில் உள்மனப்பேச்சின் அமைப்பியல்புகள் எவ்வாறு உண்மை மனிதரின் உள்மனப்பேச்சின் இயல்போடு பொருந்திக் காணப் படுகின்றன என்பதிலும், வெளிப்பேச்சின் இயல்போடு பொருந்திக் காணப்படுகின்றன என்பதிலும் இந்த உயிரூட்டும் திறன் வெளிப்படும். நாவலாசிரியர்கள் கந்தசாமியும் ரத்னமும் உள்மனப்பேச்சுக்கே மிகவும் முக்கியத்துவம், பெரிய இடம் தருகிறார்கள். இவ்விரு நாவல்களிலும் உள்மனப்பேச்சு கல்லும் மண்ணும் நாவலில் அடிக்கடி அமைகிறது. சித்திரைக்கனியில் உள்மனப்பேச்சே கதையாக மாறிவிடுகிறது. கதை மாந்தர் உயிருள்ளவர்களாக மிக எளிதில் மாறி விடுகிறார்கள். அதற்கடுத்த நிலையில், கந்தசாமி பொதுவான முடிவுகளை ஒவ்வொரு கதைமாந்தரின் உள்மனப்பேச்சிலும் அமைத்து விடுகிறார்; இது அறிவுரையாகவோ அங்கலாய்ப்பாகாவோ அமையலாம். இவ்வுத்தியும் கதை மாந்தர் உயிருள்ளவர்கள் என்பதை நமக்குக் காட்டுகிறது. ரத்னம், செங்காடன் அடிக்கடி வெளிப்படையில் கூறக்கூடியதையே உள்மனப்பேச்சாக மாற்றுகிறார். இவ்வாறு மாற்றித்தருதல் குணநலனைக் காட்டுவதோடு, கதைமாந்தனுக்கு உயிரூட்டும் செயலைத் தருகிறது. அடுத்து எழுத்துத்தமிழைக் கையாளும் முறை, உவமைகள், வாக்கிய நீளங்கள், பேச்சுக் கோர்வைகள் என்றும் வேறு பல செய்திகள் இவ்வுயிரூட்டும் செயலைச் செய்கின்றன.

கொங்கு நாட்டெழுத்தாளர் இருவர் எழுதிய இந்நாவல்கள் புதிய உத்திகளை நமக்குத் தருகின்றன. சித்திரைக்கனி மு. வ.

வை நினைப்பூட்டுகிறது என்கிறார் பேராசிரியர் ம. ரா. போ. குருசாமி அவர்கள், மு. வ. வின் தொனியை அங்கங்கே காட்டிய போதிலும், அறிவுரையில் காட்டிய போதிலும், கந்தசாமி உள் மனப்பேச்சின் வழியிலும், கதையை விட்டுவிட்டு மறைமுகமாகப் பின்னுவதிலும் மாறுபட்டு நின்று தனித்த இயல்பை நிலைநிறுத்துகிறார். ரத்னம், கந்தசாமி விட்டு விட்ட கொங்கு நாட்டு மண் வாசனையை, இறுகப்பற்றிக் கொண்டு, ஆனால் கந்தசாமியைப் போலவே, உலகத்திற்கேயுரிய பொதுப் பொருள் குறித்துத் தன் கதையை நடத்திச் செல்கிறார். முந்தியதில் கொங்கு நாட்டு நிலம் பின்னுக்குத் தள்ளப்பட்டுச் சமன் செய்யப்பட்ட, தமிழ்நாட்டுப் படித்த நடுத்தரவர்க்கம் உயிர் பெறுகிறது. பிந்தியதிலோ கொங்கு நாட்டு நிலம் நேரடியாக உலகத்தோடு ஒன்றிவிடுகிறது- எங்கெங்கெல்லாம் தனிமனிதன்; ஒற்றை மனிதன் பல்வேறு இழப்புகளை அடைகிறானா அங்கெங்கெல்லாம் ரத்னத்தின் நாவல் எளிதில் புரிந்து கொள்ளப்படும். இவ்விருவரும் இன்றைய கொங்கு நாட்டெழுத்தின் இரு முக்கிய இயல்புகளுக்குப் பிரதிநிதிகளாகிறார்கள்.

---

# 11. கொங்கு நாட்டுக் காப்பியம்

---

மா. கிருபாகரன்
தமிழ்த்துறை
பாரதியார் பல்கலைக் கழகம்

இலக்கியம் என்பதைக் குறிப்பிட்ட ஒரு வகைக்குள் அடக்கி விடுதல் இயலாது. ஏனெனில் இலக்கியம் காலமாற்றத்திற்கும், சமூக அமைப்பிற்கும் ஏற்ப வடிவ அமைப்பிலும், பாடுபொருளிலும் மாற்றம் பெற்று வந்துள்ளமை நாம் அறிந்த ஒன்றே. தமிழ் இலக்கியங்கள் பலநூறு ஆண்டுகளுக்கு முன் தோன்றியுள்ளன; தொடர்ந்து இன்றும் பல்வேறு வடிவ மாற்றம் பெற்றுத் தோன்றி வருகின்றன. அவ்வாறு தோன்றிய இலக்கியங்களை அவற்றின்

பாடுபொருள், வடிவ் அமைப்பு இவற்றிற்கேற்ப அதனை அறிஞர்கள் ஒன்றிலிருந்து மற்றொன்றைப் பாகுபடுத்திக் காட்டும் வகையில் வகைமைப்பாடு செய்துள்ளனர். அவ்வகையில் தமிழில் தோன்றி உள்ள பல இலக்கிய வகைகளுள் ஒன்றான காப்பியத்தை அதன் நுவல் பொருளுக்கேற்பப் பெருங்காப்பியம், சிறு காப்பியம் என்று வகைப்படுத்துவர். பொதுவாகக் காப்பியம் என்பது தொடர்நிலைச் செய்யுள் என்ற கருத்து அனைவராலும் ஒப்புக்கொள்ளப்பட்ட ஒன்று. தமிழில் தோன்றியுள்ள காப்பியங்கள் பல. எனினும் அவற்றுள் நின்று நிலைப்பன சிலவே. தமிழில் தோன்றிய பழைய காப்பியங்களுள் குறிப்பிடத்தக்க ஒன்று பெருங்கதை. இக்காப்பியம் கொங்கு நாட்டவரான கொங்கு வேளிரால்' எழுதப் பெற்றது. கொங்கு . நாட்டாரால் இயற்றப் பட்டதால் 'பெருங்கதை' 'கொங்கு நாட்டுக் காப்பியம்' எனும் இக்கட்டுரைக்கான முதல் நூலாக எடுத்துக் கொள்ளப்படுகின்றது. கொங்கு நாட்டவரான புலவர் குழந்தை என்பவரால் 20 ஆம் நூற்றாண்டான இக்காலத்தில் எழுதப்பெற்ற 'இராவண காவியம்' என்ற நூல் இக்கட்டுரைக்கான மற்றொரு முதனிலை நூலாக அமைகிறது. இங்கு 'கொங்கு நாட்டுக் காப்பியம்' கொங்கு நாட்டவர்க்கோ, சமுதாயத்திற்கோ உரிய ஒன்று என்ற பொருளில் எடுத்தாளப்படவில்லை. இந்நூலாசிரியர்கள் கொங்கு நாட்டவர்கள் என்ற கருத்திலேயே அமைக்கப் பெற்றுள்ளது. எனவே, பெருங்கதை, இராவண காவியம் ஆகிய இரு காப்பியங்களின் ஆசிரியர், காலம், அமைப்பு ஆகியவற்றை மட்டுமே இக் கட்டுரை எடுத்துக்காட்ட முயல்கின்றது.

### பெருங்கதை :

### *ஆசிரியர், காலம் :*

இந்நூலின் ஆசிரியர் கொங்குவேளிர் என்பார். இவர் வேளிர் மரபினர் என்பதை பெயரே விளக்கி நிற்கும். கொங்கு நாட்டைச் சேர்ந்த விசயமங்கலம் என்ற ஊரினர். "கொங்கு நாட்டைச் சேர்ந்த சிற்றரசர்களின் குடும்பத்தைச் சார்ந்தவர் ஆதலாட் கொங்குவேளிர் என்று அழைக்கப்படுகிறார்"[1] இவர் சமண (ஜைன) சமயத்தவர்.

"சங்க காலத்தைச் சார்ந்து எழுந்த சிலப்பதிகாரத்திற்கும், மணிமேகலைக்கும் பிறகு இயற்றப்பட்டவற்றுள் சிந்தாமணிக்கும் முற்பட்டது இந்நூலென்று தோன்றுகின்றது. இந்நூலுக்கு முதற்

நூலாகக் கருதப்படும் பிருகத்கதையை இயற்றிய கங்க அரசனாகிய துர்விநீதன் என்பவன் ஆறாம் நூற்றாண்டின் இறுதியில் இருந்தவன். சிந்தாமணி 9 ஆம் நூற்றாண்டில் இயற்றப்பட்டது. தமிழ்ப் பெருங்கதை இம்மூன்று நூற்றாண்டுகளுக்கும் இடைப் பட்ட காலத்தில் இயற்றப்பட்டிருத்தல் கூடும்''[2] என்கிறார் கி. வா. ஜகந்நாதன்.

ஆனால் பெருங்கதைக்கு உரையெழுதிய சோமசுந்தரனார் அது காலத்தால் சிலப்பதிகாரத்திற்கும் மணிமேகலைக்கும் முற்பட்டது என்ற கருத்துக் கொண்டுள்ளார்.

''கி. பி. 5 ஆம் நூற்றாண்டில் அல்லது 6 ஆம் நூற் நூற்றாண்டிலிருந்த துர்விநீதன் என்னும் கங்கராசன் பைசாச மொழியிலிருந்து மொழி பெயர்த்தமைத்த பிருகத் கதையே இதன் முந்நூல் என்று சிலர் கூறுகின்றனர். இவற்றுள் குணாட்டியர் நூல் இப்பொழுது இல்லை. மேலும் அது சைவசமயச் சார்பானது என்று அந்நூலினின்று பிற்காலத்தில் எடுத்தாளப் பெற்ற மேற்கோள்களிலிருந்து தெரிகிறது. கங்கராசன் இவ்வாசிசியர்க்குக் காலத்தால் பிற்பட்டவன் என்று தெரிகிறது''[3] என்றும் கூறி அது 6 ஆம் நூற்றாண்டைச் சார்ந்தது என்ற கருத்தினை மறுக்கிறார்.

பொதுவாக, குணாட்டியர் பைசாச மொழியில் இயற்றிய 'பிருகத் கதா' என்னும் நூலை, கங்கராசன் 'பிருகத்கதை' என்று மொழி பெயர்த்ததே பெருங்கதைக்கு முதல் நூல் என்ற கருத்துப் பெரும்பாலோரால் ஏற்றுக் கொள்ளப்பட்ட ஒன்று. கங்கராசனின் காலம் ஆறாம் நூற்றாண்டின் இறுதிப்பகுதி என்பதால் பெருங் கதையின் காலம் ஏழு முதல் ஒன்பதாம் நூற்றாண்டிற்கு இடைப் பட்டதாக இருக்கும் என்ற கி. வா. ஜகந்நாதனின் கூற்றுப் பொருத்தமானதே எனலாம்.

### பெருங்கதை அமைப்பும், பிற செய்திகளும் :

பெருங்கதை, உஞ்சைக் காண்டம், இலாவண காண்டம், மகத காண்டம், வத்தவ காண்டம், நரவாண காண்டம், துறவுக் காண்டம் எனும் ஆறு காண்டங்களையும் ஒவ்வொரு காண்டத்தி லும் பல உட்பிரிவுகளையும் உடையது. இவற்றுள் ஆறாவது காண்டமாகிய 'துறவுக் காண்டம்' கிடைக்கவில்லை. பிற காண் டங்களிலும் சில பகுதிகள் கிடைக்கவில்லை. முதல் காண்டமா கிய உஞ்சைக் காண்டத்தில் 58 உட்பிரிவுகள் உள்ளன. அவற்றுள்

முதல் 31 நீங்கலாகப் பிந்திய 27 பிரிவுகளே கிடைத்துள்ளன. முப்பத்திரண்டாம் காதையிலும் முற்பகுதி கிடைக்கவில்லை. மகத காண்டத்துப் 11 ஆம் காதை கிடைக்கவில்லை. 12, 17 ஆம் காதைகளின் முற்பகுதி, 10, 16 ஆம் காதைகளின் பிற்பகுதியும் கிடைத்தில. நரவாண காண்டத்தில் ஒன்பது பிரிவுகளே கிடைக்கப் பெற்றுள்ளன.

பெருங்கதைக்கு, உதயணன் காதை, கொங்குவேளிர் மாக்கதை என்ற பெயர்களுமுண்டு. இது ''குணாட்டியார் என்பார் பைசாச மொழியில் இயற்றிய 'பிருகத்கதா' என்ற நூலினைத் தழுவி, அதிலுள்ள பிற கதைகளையெல்லாம் நீக்கி விட்டு, நரவாணதத்தன் வரலாற்றை மட்டும் முதன்மையாகக் கொண்டு எழுதப்பட்ட சமயக் கோட்பாடுகள் நிறைந்த நூல் என்று டாக்டர் உ. வே. சா. கூறுகிறார்''[4].

காப்பியம் நுதலும் பொருள்கள்,

1. காப்பியத்தின் திரண்ட பொருள் : அறம், பொருள், இன்பம், வீடு என்பன.

2. வருணனைகள்.

3. இன்பச் செய்திகள்

4. அரசியற் செய்திகள்''[5] என்பர்.

பெருங்கதை இந்நான்கு பொருள்களையும் உள்ளடக்கி அமைந்துள்ளது. இந்நூலாசிரியர் வருணனைகளைத் தமிழ் முறைப்படி கொண்டு செல்கிறார். ''பெருங்கதையைப் பற்றிக் கூறும் அடியார்க்கு நல்லார் அது இடைச் சங்க காலத்துச் செய்யுட்களாகிய கலியும் குருகும் வெண்டாளியும் முதலிய செய்யுள் இலக்கியம் ஆராய்ந்து செய்யப்பட்டதென்று சிறப்பிக்கிறார்.''[6] பெருங்கதையில் சமணசமயக் கருத்துக்கள் ஆங்காங்கே கூறப்பட்டாலும் அவை கதைச் சுவை குன்றா வகையில் ஆசிரியரால் அமைக்கப் பட்டுள்ளன.

## *இராவண காவியம் :*

### *நூலாசிரியர் வரலாறு, காலம் :*

இராவண காவியம் கொங்கு வட்டாரச் சிற்றூர் ஒன்றில் பிறந்த புலவர் குழந்தை என்பவரால் இயற்றப் பெற்றது.

ஈரோட்டிற்கு தென்புறத்தே 26 கிலோமீட்டருக்கு அப்பாலுள்ள ''ஓலவலசு'' என்னும் சிற்றூர் இவரது ஊர். ''ஓலவலசுப் பண்ணையக்காரர்'' என்னும் பெருங்குடியில் 1-7-1906ல் முத்துச்சாமிக் கவுண்டர் - சின்னம்மை ஆகியோருக்கு மகனாகப் பிறந்தார். நான்கைந்து திண்ணைப் பள்ளிகளில் விட்டுவிட்டுப் படித்த இவரது பள்ளிக் காலம் எட்டு மாதங்களே. பத்தாண்டுப் பருவத்திலேயே கவிபாடும் ஆற்றலை இயற்கையாகப் பெற்றிருந்தார். அறிஞர் பலரின் உந்துதலால் தாமே முயன்று கற்று 1934ஆம் ஆண்டில் சென்னை பல்கலைக் கழகப் புலவர் பட்டம்பெற்றார். 1924 முதல் 1962 முடிய 32 ஆண்டுகாலம் ஆசிரியப்பணி புரிந்துள்ளார். அவற்றுள் 1941 முதல் 1962 முடிய பவானி கழக உயர்நிளைப் பள்ளியில் தலைமையாசிரியராகப் பணியாற்றி ஓய்வு பெற்றுள்ளார். இவர் இளமைக் காலத்தில் ஓலவலசில் இவருக்குமுன் படித்தவர் எவருமில்லை. எனவே தாம் படித்த காலத்தில் தம்மையொத்த இளைஞர்களுக்கு கல்வி கற்பித்து அவர்கள் மூலம் வயதில் மூத்தோருக்குக் கையெழுத்துப் போடப் பழக்கினார். 1925ல் பெரியாரின் சுயமரியாதை இயக்கத்தி ல்சேர்ந்தார். பின் அதன் மறுதலிப்பான திராவிடக் கழகம், பின் அதனின்று பிரிந்த திராவிட முன்னேற்றக் கழகத்தில் சேர்ந்து தொடர்ந்து அதில் இருந்து வந்தார். சுயமரியாதை, திராவிடக் கொள்கைகளில் அசையாத, ஆழ்ந்த நம்பிக்கை உடையவர். 1938, 1948ஆம் ஆண்டுகளில் இந்தி எதிர்ப்புப் போராட்டங்களில் பங்கு பெற்றவர். 'இந்தி ஆட்சி மொழி ஆனால், என்ற ஆய்வு நூலினை 1965ல் கோவையில் நடந்த காங்கிரஸ் மாநாட்டில் வழங்கினார். இவர் 1946 முதல் 1950 வரை வேளாள இனத்தினரை ஒன்றினைக்கும் நோக்கில் 'வேளாளன்' என்னும் மாத இதழைத் தொடங்கி நடத்தினார்.

புலவர் குழந்தை இராவண காவியம் மட்டுமின்றி பல செய்யுள், நூல்கள், உரைநூல்கள், இலக்கணநூல்கள், உரைநடை நூல்களை எழுதியுள்ளார்.

### செய்யுட் நூல்கள் :

1. இராவண காவியம், 2. அரசியலரங்கம், 3. நெருஞ்சிப்பழம், 4. காமஞ்சரி, 5, உலகப் பெரியோன் கென்னடி, 6. திருணாச்சிலேடை வெண்பா, 7. புலவர் குழந்தை பாடல்.

### உரை நூல்கள் :

8. திருக்குறள் — குழந்தையுரை
9. தொல்காப்பியப் பொருளதிகாரம் — குழந்தையுரை
10. நீதிக்களஞ்சியம் உரை

### இலக்கண நூல்கள் :

11. யாப்பதிகாரம், 12. தொடையதிகாரம்,
13, இன்னூல் [சூத்திரம்]

### உரைநடை நூல்கள் :

14. தொல்காப்பியர் காலத்தமிழர், 15. திருக்குறளும் பரிமேலழகரும், 16. பூவா முல்லை [இம்மூன்றும் ஆராய்ச்சி நூல்கள்] 17. கொங்குநாடு, 18. தமிழக வரலாறு, 19. தமிழ் வாழ்க [நாடகம்] 20. தீரன் சின்னமலை [விடுதலை வீரன் வரலாறு], 21. கொங்குநாடும் தமிழும், 22. கொங்குக்குல மணிகள், 23. அருந்தமிழ் விருந்து, 24. அருந்தமிழ் அமிழ்து, 25. சங்கத் தமிழ்ச் செல்வம், 26. ஒன்றே குலம், 27. அண்ணல் காந்தி, 28. தமிழெழுத்துச் சீர்திருத்தம், 29. தீரன் சின்னமலை நாடகம் [அச்சாகவில்லை] என்பன.

யாப்பிலக்கணம் படிக்கும் முன்னரே இவர் பாடிய சில நூல்கள் யாப்பமைதி உடையனவாக உள்ளன. 1918ல் இவர் பாடிய 'கன்னியம்மன் சிந்து' என்னும் சிறு நூல் அச்சாகியுள்ளது. இவர் பாடிய அச்சாகாத பாடல்களும் பல. 'ஆடிவேட்டை', 'நல்ல தம்பிச் சர்க்கரைத் தாலாட்டு' என்பன அறிஞரால் பாராட்டப் பெற்றவை. 1926 - 27ல் வெள்ளகோவில் 'வீரக்குமாரசாமி இரதோற்சவச்சிந்து', வீரக்குமாரசாமி காவடிச்சிந்து' 'வெள்ள கோவில் வழிநடைச் சிந்து' ஆகிய நூல்களையும் பாடியுள்ளார். இவை அச்சாகியுள்ளன.[7]

இவரது வாழ்க்கை வரலாற்றினை உற்று நோக்கும் போது தன்னம்பிக்கையோடு முயற்சி செய்பவர்களுக்கு வாழ்வில் வெற்றி நிச்சயம் என்ற கருத்துப் புலனாகிறது.

### இராவண காவியக் காலம், நோக்கம் :

இராவண காவியம் 1946ல் வெளியிடப்பெற்றது. அது வெளிவந்த இரண்டாண்டுக் காலத்தில் [2—6—1948] தமிழகத்தை

அப்பொழுது ஆண்ட காங்கிரசாரால் தடை செய்யப்பட்டது. பின்னர் 23 ஆண்டுகளுக்குப் பின் 17—5—1971ல் திராவிட முன்னேற்றக் கழக ஆட்சியின்போது தடை நீக்கப்பெற்று மீண்டும் வெளிவந்தது.

'இராவண காவியம்' என்ற தலைப்பிலேயே இவ்விலக்கியத்தின் நோக்கம் இராவணனைத் தூயோனாகச் சித்திரித்து, இராமனைக் குற்றவாளியாக்கிக் காட்டுவது என்ற எண்ணத்தில் பிறந்தது என்ற உண்மை ஓரளவு தெரியவரும்.

'இராவண காவியம்' திராவிட இனத்தவனான இராவணன் மாசு மருவற்றவன், அவன் மீது யாதொரு தவறும் இல்லை என்பதை விளக்கி, ஆரிய இனத்தவனான இராமன் செயல்கள்தான் தவறு, அவன்தான் இராவணனுடன் வலிந்து போரிட்டுக் கொன்றான். எனவே இராமனே குற்றவாளி என்பதை மெய்ப்பிக்கும் முயற்சியே எனலாம். பொதுவாக இராமாயணத்தில் சித்திரிக்கப் படும் இராமன், அவனைச் சேர்ந்த பிறரைப் பற்றிய நற்குணங்களைத் தவறு என்ற வகையில் சித்திரித்து, இராவணனையும் அவனைச் சேர்ந்தவர்களையும் நல்லவர்களாக அறவோராகச் சித்திரித்து எழுதப்பட்டுள்ளது இக்காவியம். திராவிட இயக்கத்தாரின் கொள்கை, அவர்கள் கூறும் ஆரிய, திராவிடப் பாகுபாட்டினையொட்டித் திராவிட இனத்தவனான இராவணன் நல்லவனே என்பதைப் புலப்படுத்தும் முயற்சியில் உருவானதே இக்காவியம் என்பதை ஆசிரியர் முன்னுரை, ஆராய்ச்சி முன்னுரையில் இடம் பெறும் செய்திகளால் அறியமுடிகிறது. 'இராவண காவியம்' எழுந்த நோக்கம் பற்றி ஆசிரியர் தம் முன்னுரையில் பலவாறு குறிப்பிடுகிறார். சான்றாக ஒன்றினைக் காண்போம்.

''கம்பராமாயணத்தை உண்மையென நம்பி, கம்பர் கவிச் சுவையில் ஆழ்ந்து, இராவணன் முதலிய தமிழர் தலைவர்களை அரக்கர் எனவும், தமிழர்களாகிய தங்களுக்கும் அவர்களுக்கும் யாதொரு தொடர்பும் இல்லையெனவும் கொண்டு, இராவணன் முதலியோர் தங்களுக்கு ஏதோ செய்யத்தகாத தீங்கு செய்தனர் போலவும் எண்ணி, கம்பரைக் காட்டிலும் கடைப்பட்ட முறையில் காய்மொழி கூறிக்கடிவதும், தமிழர் குலப்பகைவனான ஆரிய இராமனைப் போற்றிப் புகழ்வதோடமையாது, கோயில் கட்டிக் கும்பிட்டு வருவதுமான தமிழ் மக்களது அறியாமையைப் போக்கி அறிவு கொளுத்தவேயாகும்''[8] என்பதன் வாயிலாக அறியலாம்.

அறிஞர் அண்ணா அவர்களின் ஆராய்ச்சி முன்னுரையில் வரும்'

''இராவண காவியம், புரட்சிக்கவிஞரின் புதுக்கவிதை போல், புதிய தமிழகத்தின் ஓவியம். இதனுடைய நோக்கம், முன்னுள்ள ஏடுகளின் மூலம் ஏற்பட்ட கேடுகளைக் களைந்து, இந்நாள் நிலைக்கேற்ப, அவற்றினை ஆராய்ந்து, புதுஉருவாக்கித் தருவது''[9] என்ற வாசகங்கள் இராவண காவியத்தின் நோக்கத்தைச் சுருக்கமாகப் புலப்படுத்துவனவாகும்.

## இராவண காவியம் - அமைப்பு :

மூன்றாங்கடல் கோளுக்கு முன் இலங்கையிலிருந்து தமிழகத்தை ஆண்டு வந்த தமிழரின் மாபெருந்தலைவர் வழிவந்த வச்சிரவாவுவின் மனைவியான கேகசி என்பாள் இராவணன், கும்பகர்ணன், வீடணன் என்னும் மூன்று ஆண்மக்களையும், காமவல்லி என்னும் ஒரு பெண்மகளையும் பெற்றனள். மூத்தவனான இராவணன் முடிபுனைந்து தமிழகத்தை ஆண்டு வந்தான்''[10] என்ற முறையில் திராவிட இன மன்னன் என்பதையும், அவன் வரலாறு, பேராண்மை, அறம் வழுவாமை ஆகியவற்றைக் கூறி, ஆரிய நாட்டினர் தமிழகத்தில் புகுந்து ஆதிக்கம் செலுத்தியமை, ஆரியச் சிற்றரசரான இராமன் தமிழகம் வருவதற்கான சூழ்நிலை, அவன் காமவல்லியைப் பெண்டாள நினைத்தது அதன் தொடர்பாக இராமனைத் திருத்தும் எண்ணத்தில் சீதையைக் கூட்டி வந்து தன் தங்கையைப் போல வைத்திருந்து இராமன் வந்து தன் தவறுக்கு மன்னிப்புக் கேட்டால் அவனுடன் சீதையைத் திருப்பி அனுப்ப எண்ணுகிறான் இராவணன். ஆனால் இராமன் முறைதவறி நடப்பதோடு அவன் வலிந்து சென்று இராவணனோடு போரிட்டு அறத்தினின்று மாறுபட்ட நிலையில் அவனைக் கொன்றான் என்ற வகையிலும், இராமாயணத்தில் இடம் பெற்றுள்ள பிற நிகழ்வுகளையும் மையமாகக் கொண்டு அதற்கு நேர் எதிரான வகையில் இராமன் குற்றவாளி, அறம் தவறியவன், இராவணன் ஒழுக்கக்கீர்த்தி வாய்ந்த உத்தமத்திராவிடன் என்பதைப் புலப்படுத்தும் வகையில் அமைந்துள்ள 'இராவண காவியம்' கதை நிகழச்சிகளுக்கேற்ப,

| காண்டம் | படலத்தொகை | காண்டப்பாத்தொகை |
|---|---|---|
| 1. தமிழகக் காண்டம் | 8 | 454 |
| 2. இலங்கைக் காண்டம் | 8 | 524 |
| 3. விந்தக் காண்டம் | 11 | 656 |
| 4. பழிபுரி காண்டம் | 12 | 636 |
| 5. போர்க் காண்டம் | 18 | 830 |

என்ற ஐந்து காண்டங்களாகப் பகுக்கப்பட்டு, 57 படலத்தொகை, 3100 காண்டப்பாத் தொகையுடன் அமைக்கப் பெற்றுள்ளது. இவை யாவும் காவிய அமைப்பும் காவியக் சுவையும் குன்றாது எளிய தமிழ் நடையில் வழங்கப்பட்டுள்ளது. காவியத்தில் இராவணன் அறநெறி பிறழாத திராவிட மன்னன் - மறவன் என்பதை இயற்கையோடு இணைத்து வர்ணித்து விளக்கிச் சொல்கிறார் ஆசிரியர்.

## முடிவுரை :-

இதுவரை கண்டவற்றின் மூலப் கொங்குவேளிரால் இயற்றப்பட்ட 'பெருங்கதை' 'பிருகத்கதை'யைத் தழுவி எழுதப் பெற்ற சமணக் கோட்பாடுகள் நிறைந்த நூல் எனினும் அது தமிழ் மரபிற்கேற்ப அமைக்கப் பெற்றுள்ளது என்பதை அறியலாம். இருபதாம் நூற்றாண்டான இன்று புலவர் குழந்தை அவர்களால் எழுதப் பெற்ற 'இராவண காவியம்' திராவிட இயக்கக் கொள்கைகளின் அடிப்படையில் நின்று திராவிடனான இராவணன் குற்றமற்ற தூயோன், அறப்பண்பாளன் என்ற கருத்தை மெய்ப்பிக்கும் வகையில் கம்பராமாயணத்திற்கு நேர் எதிர்க்கருத்தில் அமைக்கப்பெற்றது என்பதும் தெளிவாகும்.

## அடிக்குறிப்புகள் :

1. மு. வ., தமிழ் இலக்கிய வரலாறு, ப. 153
2. தமிழ்க் காப்பியங்கள், ப. 235
3. பெருங்கதை முன்னுரை, பக். 6-7
4. சி. பாலசுப்ரமணியன், தமிழ் இலக்கிய வரலாறு பக். 131-132
5. தமிழ்க் காப்பியங்கள், ப. 145
6. மேலது ப. 205
7. இராவண காவியம், ஆசிரியர் வரலாறு பக். 54-63
8. மேலது, முன்னுரை ப. 43
9. மேலது, ஆராய்ச்சி முன்னுரை ப. 15
10. மேலது. க. சு. ப. 66

**துணை நின்ற நூல்கள் :**

1. கொங்கு வேளிர், 'பெருங்கதை' சோமசுந்தரனார் உ. ஆ,
(உஞ்சைக்காண்டம், இலாண காண்டம்)
கழக வெளியீடு 1973.

2. மு. ஆ., 'பெருங்கதை' சோமசுந்தரனார் (உ. ஆ.)
(வத்தவகாண்டம், நரவாண காண்டம்)
கழக வெளியீடு.

3. புலவர் குழந்தை, ''இராவண காவியம்''
வேலா பதிப்பகம், ஈரோடு
2வது பதிப்பு 1971.

4. வையாபுரிப்பிள்ளை. எஸ், ''தமிழ் இலக்கிய சரித்திரத்தில் காவிய காலம்''
தமிழ்ப்புத்தகாலயம், சென்னை.

5. ஜகந்நாதன் கி. வா. ''தமிழ்க் காப்பியங்கள்''
அமுத நிலையம், சென்னை 1971.

6. வரதராசன் மு, ''தமிழ் இலக்கிய வரலாறு'',
சாகித்ய அகாதெமி, 5 வது பதிப்பு, டெல்லி

7. பாலசுப்பிரமணியன். சி, ''தமிழ் இலக்கிய வரலாறு''
நறுமலர்ப் பதிப்பகம், 16வது பதிப்பு,
சென்னை 600 029.



# 12. கொங்கு நாட்டு இலக்கணம்

மா. சோமசுந்தரம்

தமிழ் இலக்கிய வரலாற்றில் இலக்கண நூல்கள் சிறப்பிடம் பெறுகின்றன. தொல்காப்பியமே நமக்குக் கிடைக்கும் முதல் இலக்கண நூலாகும். இதனைத் தொடர்ந்து இரண்டாவதாகக் கிடைக்கும் இலக்கணநூல் வீரசோழியம். இந்நூல் சோழநாட்டைச் சார்ந்த புத்தமித்திரனாரால் இயற்றப்பட்டது. இவ்வகையில் தமிழ் இலக்கண வரலாற்றில் சோழநாடு முதன்மை பெறுகிறது. இந்நூலுக்குப்பின் கொங்குநாட்டைச் சேர்ந்த இலக்கணக்காரகள் சில நூல்களைப் படைக்கின்றனர். குணவீரபண்டிதர், பவணந் தியார், போன்றோர்கள் தமிழ் இலக்கண வரலாற்றில் மூன்றாம் இடத்தைப் பெறுகின்றனர். இந்நூல்கள் தமிழ் மொழியின் சிறப்பினை விளக்குமுகத்தான் மிக எளிமையில் இயற்றப்பட்டன. தொல்காப்பியத்தை அடிப்படையாகக் கொண்டு தங்கள் காலத் திற்கேற்ப தமிழ் மொழிக்கு இலக்கணம் படைத்தனர். இங்கு கொங்குநாட்டு இலக்கணங்கள் என்பது கொங்கு நாட்டோரால் இயற்றப்பட்ட இலக்கணங்கள் என்ற கருத்திலேயே அமைக்கப் பட்டுள்ளது.

## குணவீரபண்டிதர் :

சமண சமயத்தைச் சேர்ந்த இவர் நேமிநாதம், வச்சிணந்தி மாலை அல்லது வெண்பாப்பாட்டியல் ஆகிய இரு நூல்களை இயற்றியுள்ளார். இவரது காலம் குலோத்துங்கன் காலமாகிய பன்னிரண்டாம் நூற்றாண்டு என இவர் எழுதிய வெண்பா பாட் டியலின் உரைப்பாயிரத்தின் மூலம் அறிய முடிகிறது. மேலும், ''கற்றவர் புகழுங் களந்தை யென் பெரும் பகுதிக் குற்றமில் வாய்மைக் குணவீரபண்டிதன்'' - என்றுகாணப்படுவதால் குணவீர பண்டிதர் கொங்கு நாட்டிலிருக்கும் களந்தை என்ற ஊரைச் சார்ந்தவர் என அறிய முடிகிறது.

*நேமிநாதம் :*

குணவீரபண்டிதர் தாம் இயற்றிய இலக்கண நூலிற்குச் சைன சமயத்தைச் சார்ந்த இருபத்துநான்கு தீர்த்தங்கரர்களுள் இருபத்து இரண்டாம் தீர்த்தங்கரரான நேமிநாதரின் பெயரினையே காட்டியிருக்கிறார் என்பார்கள்.

நேமிநாதம் எழுத்து, சொல் என்ற இரு அதிகாரங்களைக் கொண்டது. தொல்காப்பியச் செய்திகளைச் சுருக்கி 97 வெண்பாக் களால் இயற்றப்பட்டது. (முறையே இருபத்து நான்கு, எழுபது என்ற அடிப்படையில் அமைந்திருக்கிறது.) இந்நூலில் சொல்லதி காரம், தொல்காப்பியர் இயல் என்று குறிப்பிடுகின்றவற்றை மரபு என்ற கலைச் சொல்லால் குறிக்கப்பட்டிருக்கிறது. தொல்காப்பியச் செய்திகளைத் தொகுத்துச் சுருக்கித் தரப்பட்டிருக்கிறது என்பதால் இதனைச் சின்னூல் என்றும் அழைப்பார்கள்.

*வச்சிணந்தி மாலை :*

தொல்காப்பியப் பொருளதிகாரச் செய்திகள் பிற்காலத்தில் வளர்ந்து தனித்தனி இலக்கண நூல்கள் உருவாகின. இந்த அடிப்படையில்தான் குணவீரபண்டிதர் பாட்டியல் இலக்கண நூலினைப் படைத்திருக்கிறார் எனலாம். முதலில் நமக்குக் கிடைத்த பாட்டியல் நூல் பன்னிரு பாட்டியல் ஆகும். இதற்கு அடுத்து இலக்கண உலகில் சிறப்பான இடத்தைப் பெறும் நூல் குணவீரபண்டிதரின் வெண்பாப்பாட்டியலாம்.

இந்நூல் முழுவதும் அந்தாதி அமைப்பில் பாடல்கள் இடம் பெறுகின்றன. மூன்று பிரிவுகளைக் கொண்ட இந்நூல் 102 வெண் பாக்களைக் கொண்டது. முதல் மொழியியல், செய்யுளியல், பொதுவியல் என்ற இயல்களில் முறையே 23, 48, 81 வெண்பாக் களைஉடையது.

இந்நூல் 56 வகை பிரபந்தங்களைப் பற்றியும் செய்யுளில் அமைய வேண்டிய மங்கள எழுத்து சொற்கள் பற்றியும் பேசுகிறது. குணவீரபண்டிதர் தானியற்றிய இந்நூலில் தன் ஆசிரியர் வச்சிணந்தி முனிவரின் பெயரினையே சூட்டியிருக்கிறார்.

*பவணந்திமுனிவர் :*

குணவீரபண்டிதரைப் போன்று இவரும் சமண சமயத்தைச் சார்ந்தவரே! இவரது காலம் சீயகங்கன் என்ற மன்னனது காலம்

(கி. பி. 1212) 12ஆம் நூற்றாண்டிற்கும், குணவீரபண்டிதருக்கும் பிற்பட்டவர். இவர் கொங்குநாட்டினைச் சார்ந்தவர் என கொங்குமண்டல சதகம் வாயிலாக அறிய முடிகிறது.

கங்கக் குரிசில் உவக்க நன்னூலைக் காலத்து புகழ்
துங்கப் புலமைப் பவணந்தி மாமுனி தோன்றியவர்
கொங்குமண்டலமே

என்ற வரிகள் மேற்கூறிய செய்திகளை விளக்குவனவாக அமைகிறது.

இந்நூல் எழுத்து, சொல் இரு பெரும் பிரிவுகளாகப் பிரிந்து முறையே ஐந்து, ஐந்து என உட்பிரிவுகளாக அமைக்கப்பட்டுள்ளது. இந்நூலே இன்றும் எல்லோராலும் பயிலப்பட்டு வருகிறது. தொல்காப்பியத்திற்குப்பின் நீண்ட கால இடைவெளியிட்டு இவ்விலக்கண நூல் அக்கால மொழியின் நிலையை உணர்ந்து இலக்கணம் இயற்றப்பட்டிருப்பது குறிக்கத் தக்கது. எளிமையில் விளங்கக்கூடியது இந்நூலாதலால் தொல்காப்பியத்திற்கு அடுத்த நிலையில் இருக்கிறதெனலாம்.

முடிவுரை :

நேமிநாதம், வச்சிணந்தமாலை, நன்னூல் போன்ற இலக்கண நூல்கள் தமிழ் இலக்கண வரலாற்றில் முக்கிய இடத்தைப் பெற்றிருக்கின்றன. எழுத்து, சொல் என்று படைத்த குணவீர பண்டிதர் பாட்டியலை தனியொரு நூலாகப் படைத்திருப்பது நோக்கத்தக்கது.

இரு இலக்கணக்காரர்களின் பிறப்பிடம் பற்றிய கருத்து வேறுபாடுகள் நிலவுகின்றன. தொண்டைமண்டல சதகம் இருவரையும் தொண்டை நாட்டைச் சேர்ந்தவர்கள் எனக் குறிப்பிடுகிறது. கொங்கு மண்டல சதகம் கொங்கு நாட்டைச் சேர்ந்தவர்கள் என்கிறது. இங்கு சதக இலக்கியங்கள் மிகவும் பிற்காலத்தில் தோன்றியதே. அச்சமயம் மேற்கூறிய இருவர்களையும் தங்கள் தங்கள் மண்டலத்தைச் சார்ந்தவர்கள் என்று குறிப்பிடுவதால் மண்டலங்களிற்குப் பெருமை சேர்க்கும் பொருட்டே எனக் கூறலாம். இங்கு ஒன்று குறிப்பிடத்தக்கது இவ்விருவரும் சமணசமயத்தைச் சார்ந்த தமிழர்கள் என்பதே. கொங்கு நாட்டைச் சார்ந்த இவ்விருவர்கள் தமிழ் மொழிக்குச் செய்த பெரும் பணியே இவ்விலக்கண நூல்கள் எனலாம். இலக்கியங்களை மட்டுமல்லாமல் இலக்கணங்களையும் கொங்கு நாடு நமக்குத் தந்திருக்கிறது.



# 13. கொங்கு நாட்டு வேளாண்மை இதழ்கள்

பி. எம். பழனிசாமி
எம்ஃபில் ஆய்வாளர்
தமிழ்த்துறை
பாரதியார் பல்கலைக்கழகம்
கோயம்புத்தூர் 641 046

*முன்னுரை :*

மக்களின் அறிவு வளர்ச்சிக்கும், நாட்டு முன்னேற்றத்திற்கும் துணைபுரிவன இதழ்கள். இதழ்களைப் பல வகைகளாகப் பிரிக்கலாம். பொழுதுபோக்கு இதழ்கள், வேளாண்மை, மருத்துவம், ஜோதிடம், அறிவியல் போன்ற தொழில் சார்ந்த இதழ்கள். இத்தொழில் சார்ந்த இதழ்களில் வேளாண்மை சார்பான இதழ்கள் மட்டும் இங்கு ஆய்வுக்கு எடுத்துக் கொள்ளப் பெற்றன.

கோவை, பெரியார் ஆகிய கொங்கு மாவட்டங்களில் அச்சாகி வெளியாகும் இவ்விதழ்கள் தமிழகம் முழுமைக்கும் உரிய செய்திகளைத் தருவனவாகும்.

முன்னாளில் தோன்றி மறைந்த வேளாண்மை இதழ்களோடு எவ்வாறு இன்றைய இதழ்கள் மாறுபட்டும், ஒன்றுபட்டும் வந்துள்ளன, இன்றைய இதழ்களின் வளர்ச்சி, அதற்குரிய காரணம், அதன் செய்திகளின் எண்ணிக்கை, தரம் போன்றவற்றையும், இதழ் அமைப்பு முறையையும் காண்பதே இவ்வாய்வின் நோக்கமாகும்.

***வேளாண்மை இதழ்கள் :***

உழவர்களின் சமுதாயம் முன்னேற வேண்டும். எனவே அவர்களின் தொழிலைச் சிறப்பாகச் செய்ய நவீன புதிய கண்டு பிடிப்புக்களை உடனுக்குடன் அறிவிக்கச் செய்தித் தொடர்பு சாதனமாக வானொலி, இதழ்கள், தொலைக் காட்சி, திரைப்படம்

போன்ற துறைகள் செயல்படுகின்றன. மேற்கண்ட துறைகளில் ஒன்றான இதழ்கள், குறிப்பாக மாதம் மற்றும் மாதமிருமுறை இதழ்களைப்பற்றிக் காண்போம்.

20-ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில் வெளியான, சத்திய வாதி, தர்மபோதினி, வேளாளமித்திரன், வேளாள வாலிபன், உழவன் போன்ற இதழ்களும், இப்போது வெளியாகிற, ஏர்உழவன், செய்தி மடல், வளரும் வேளாண்மை, உழவர்முரசு, கோழி நண்பன், நல்விதை போன்ற இதழ்களும் ஒவ்வொன்றும் தனக்குத் தானாகவும், பொதுவாகவும் மாறுபாடு கொண்டிருக்கக் காணலாம்.

## முன்னோடி இதழ்கள் :

இக்காலத்தில் வேளாண்மை இதழ்கள் வளர வழிவகுத்து விட்டு மறைந்த இதழ்களாகச் சிலவற்றைக் குறிப்பிடலாம். மேற் கூறிய இதழ்களில் சத்தியவாதி, தர்மபோதினி, வேளாளமித்திரன், வேளாள வாலிபன், உழவன் போன்ற இதழ்கள் முழுதும் வேளாண்மைச் செய்திகளைத் தராமல், பாதி வேளாண்மைச் செய் திகளையும், மீதி பாதி ஜாதி, இனம், அரசியல், கலை இலக்கியம் பற்றிய செய்திகளையும் வெளியிட்டன.

பவானி, கோவை, ஈரோடு, காங்கயம், தர்மபுரி போன்ற இடங்களில் அச்சாகி வெளியாயின, ரா. கிருணஷ்ணசாமி, வேல்மயில் முதலியார், பாலசுப்பிர்மணிய முதலியார், போன்றோர் வெளியிட்டனர், 1924 முதல் 1954 வரையுள்ள ஆண்டுகளில் நடத்தப்பட்டு நின்றுபோன இதழ்களாகும். இலாபம் அதிகம் இல்லாததால் தொடர்ந்து நிற்க முடியவில்லை.

பொதுவாக மேற்கண்ட மறைந்த இதழ்களை ஒரு தலை முறை என்று கூறலாம். அதன் வழியாக பின்பு, அடுத்த தலை முறை இதழ்களாக இப்போது வெளிவரும் இதழ்கசை் சொல்ல லாம். தந்தையின் தலைமுறைக்கும், அவர்களின் மக்களின் தலைமுறைக்கும் நடை, உடை, பழக்க வழக்கங்களில் புதிய கண்டு பிடிப்புகளில் மாற்றங்கள் நிகழ்வது உலக இயல்பு. அதைப் போலவே இதழ்களிலும் மாற்றங்கள் நிகழ்ந்துள்ளமையைக் காணலாம்.

**ஆய்வுக்குரிய இதழ்கள் :**

இன்றைய உழவர்களின் இன்றியமையாத் தேவையை நிறைவேற்றும் பொருட்டு சில இதழ்கள் வெளியாகின்றன. இவற்றில் இருவகையுண்டு. முதல் வகை ஓரளவு வேளாண்மை சார்ந்த இதழ்கள். மற்றொரு வகை முழுமையும் வேளாண்மை சார்ந்த இதழ்கள். ஏர்உழவன், செய்தி மடல், நல்விதை போன்ற இதழ்கள் முதல்வகைக்குச் சான்று. வளரும் வேளாண்மை, உழவர் முரசு இரண்டாம் வகைக்குச் சான்று.

மேற்கூறிய ஐந்து இதழ்கள் வேளாண்மை மற்றும் பிற செய்திகளை எவ்வாறு வெளியிடுகின்றன, அதன் வரலாறு என்ன என்பதைக காண்போம்.

1. ஏர் உழவன் 1970-ஆம் ஆண்டு முதல் வெளியாகிறது. ரா. கிருஷ்ணசாமிக்கவுண்டர் இதன் ஆசிரியர். சுமார் ஆயிரத்து ஐந்நூறு இதழ்கள் அச்சாகின்றன. ஆண்டுக்கட்டணம், அரையாண்டு, தனி இதழ் என்ற முறையில் விற்கப்படுகின்றன. கட்டணமாக முறையே ரூ. 35/- ரூ. 17.50 மற்றும் ரூ. 1.35 ஆகும். இது மாதமிருமுறை இதழாக வெளியாகிறது.

இவ்விதழின் உள்ளடக்கமாக, உள்ளே ...... என்ற தலைப்பில் பொருளடக்கமும், அட்டையின் உள்பக்கம், அரசியல் சமுதாயச்சிக்கல், நீதி போன்ற பொருள்களடங்கிய கவிதையும் மூன்றாவது பக்கம் அரசியல், உழவர் சிக்கல், சமுதாயம் போன்றவற்றைப் பற்றிய தலையங்கமும், ஐந்தாவது பக்கம் இயற்கை மருத்துவம் பற்றியும் இடையே வேளாண்மை மற்றும் பொதுக் கட்டுரைகளும், துணுக்குச் செய்திகளும், விளம்பரங்களும், 39 வது பக்கத்தில் ''ஊர்வலம்'' என்ற தலைப்பில் பொது அறிவுச் செய்திகளும், இறுதிப்பக்கம் விளம்பரத்தோடு அமையக் காணலாம். கோவை கணபதி உழவன் அச்சகத்திலிருந்து வெளியாகிறது.

2. சக்தி சர்க்கரை ஆலையின், ''செய்தி மடல்'', 1965-லிருந்து வெளியாகிறது. ஆசிரியர் சிதம்பரநாதன். கோவை செந்தமிழ் அச்சகத்திலிருந்து மாத இதழாக வெளியாகிறது. இவ்விதழில் வேளாண்மை மெய்ஞ்ஞானம், விஞ்ஞானம், கிராம அபிவிருத்தி, காந்தியப் பொருளாதாரம், துணுக்குகள், மகளிர் கலைகள் முதலிய செய்திகளுடன், வேளாண்மையில் பணப்பயிரான கரும்பு வேளாண்மையை அதிகம் வலியுறுத்தி வெளியாகிறது. ஆயுள் கட்டணம் மட்டும் ரூ. 100/- பெறப்படுகிறது (டெபாசிட்டாக).

*செய்தி எடுப்பு :*

ஆங்கில 'இந்து' நாளிதழில் வேளாண்மைப் பகுதிகள், வேளாண்மைப் பல்கலைக்கழக ஆராய்ச்சியாளர்களின் கட்டுரைகள்' நியூஸ்லெட்டர், நல்வழி, கிராம ராஜ்யம், யோஜனா, யுனஸ்கோ கூரியர் போன்ற இதழ்களிலிருந்து செய்திகளை எடுத்து வெளியிடுகின்றனர்.

3. 'வளரும் வேளாண்மை', கோவை, வேளாண்பல்கலைக் கழகத்திலிருந்து பேராசிரியர் இல. செ. கந்தசாமியை ஆசிரியராகச் கொண்டு விரிவாக்கக் கல்வி நெறியகம் வெளியிடுகிறது. தனி இதழ் 1 ரூபாய், ஆண்டுச் சந்தா ரூ. 12/-, ஆயுள் சந்தா ரூ 125/- (1987-ல் ரூ. 1. 25, 1. 50 என மாற்றம் செய்யப் பெற்றுள்ளன). என சந்தாத் தொகைப் பெறப்படுகிறது. 1975 ஆம் ஆண்டில் காலாண்டு இதழாக 1000 படிகளோடு தொடங்கிய இவ்விதழ் 1979-ல் மாத இதழாக 5000 படிகளோடு அச்சிடப் பெற்றது. 1981-ல் ஆயுள் சந்தாத் திட்டம் கொண்டு வரப்பட்டது. இன்று சுமார் 3000 ஆயுள் சந்தா உறுப்பினர்களும், 7000 ஆண்டுச்சந்தா உறுப்பினர்களும் உள்ளனர். இது ஓர் அரசாங்க இதழாகும்.

உழவுமுறைகள் பற்றிய உழவியல், களர் உவர்நிலம் பற்றிய மண்ணியல், பயறுதானிய வகைகள் பற்றிய பயிரியல், விதைகள் பற்றிய விதையியல், நோய்களைப் பற்றிய நோயியல், பூச்சியியல் போன்ற வேளாண்மையியல் சார்பான கட்டுரைகளும், கால்நடையியல், வேளாண்பொறியியல், வனவளவியல், மீன்வளவியல், கிராமப்புறச் சமுதாயவியல், மனையியல் சார்பான கட்டுரைகளும், துணுக்குச் செய்திகளும், விளம்பரங்களும் அமையக் காணலாம்.

4. 'உழவர் முரசு', பவானி உழவர் பயிற்சி நிலையத்திலிருந்து வெளியாகிறது. பெரியார் மாவட்ட உழவர் விவாதக் குழுவிற்கான இலவச இதழாகும். குடும்பக்கட்டுப்பாட்டையும், பசுமைப்புரட்சியையும் விளக்கும் முக்கோண விளம்பரம் தவிர வேறு விளம்பரங்கள் இவ்விதழில் வெளியாவதில்லை.

உழவர்களின் அனுபவக் கட்டுரைகளும், வேளாண் பணியாளர்களின் கட்டுரைகளும், துணுக்குகளும் இவ்விதழில் வெளியாகின்றன.

'நல்விதை, கோவை விதைச் சான்று இயக்குநரால் வெளியிடப் பெறும் மாத இதழாகும். ஆசிரியர் இராசுநாயுடு. 1985 ஆம் ஆண்டு தொடங்கப் பெற்ற விதையியல் சார்பான இதழாகும். இதன் எண்ணிக்கை சுமார் இரண்டாயிரம்.

இவ்விதழில், கட்டுரை, உரையாடல், துணுக்குகள், இலக்கியம் சார்பான விளக்கங்கள், உழவர்களுக்குரிய சட்ட விளக்கங்கள் போன்ற செய்திகள் உள்ளடங்கியுள்ளன.

இதுவரை ஆய்வுக்குரிய இதழ்களைப் பற்றி ஓர் அறிமுகம் செய்யப்பெற்றது. ஒவ்வொரு இதழும் அதன் வடிவில், செய்தியை வெளியிடும் முறையில் பல வேறுபாடுகளைக் கொண்டுள்ளது. எனவே வரலாற்றைத் தெரிந்தபின்பு அதன் செய்தியின் அமைப்பு எவ்வாறு அமைந்துள்ளது என ஆராயப்படுகிறது.

## பாகுபாடு :

இவ்வேளாண்மை இதழ்களில் வெளியாகும் செய்திகளைக் கொண்டு கீழ்க்கண்டவாறு பாகுபாடு செய்யப் பெறுகிறது. தலையங்கம், கட்டுரைகள், விளம்பரங்கள், துணுக்குகள், பொதுச் செய்திகள் என்பன. இவைகள் எந்தெந்த இதழ்களில் எவ்வாறு அமைந்துள்ளன என்பதைக் காணல் வேண்டும்.

## தலையங்கம் :

இதழியலில், இன்றியமையாப் பகுதி தலையங்கப் பகுதி. எனினும் சில இதழ்கள் தலையங்கம் எழுதப்படாமல் வெளியாகிறது. 'இதழின் இதயம்', தலையங்கம் என்கிறார் இளங்கோவன் என்ற இதழியல் வல்லுநர். தலையங்கம், ''செய்திக் கருவைத் தெரிவித்துக் காரணத்தை ஆராய்ந்து இறுதியில் சிக்கல் தீரப் பரிந்துரை செய்வதே''[1] என்பர் இதழியலாளர். இதைப் போல வேளாண் இதழ்களில் வெளியாகும் தலையங்கத்தில் உள்ளனவா எனக் காணப்பெறல் வேண்டும்.

ஆய்வுக்கு எடுத்துக் கொண்ட ஐந்து இதழ்களில், இரண்டு இதழ்களில் மட்டுமே தலையங்கப் பகுதி உள்ளது. ஒன்று ஏர் உழவன், மற்றொன்று செய்தி மடல். ஏர் உழவனின் அரசியல், உழவர் சிக்கல் போன்ற கருவைக் கொண்டு ஆசிரியரால் எழுதப் படுவது. செய்திமடலில் அருட்செல்வர் மகாலிங்கத்தின் சிறப்புச்

சொற்பொழிவே, தலையங்கமாக அமையும். அது அரசியல், இலக்கியம், போன்ற ஏதோ ஒன்றைப்பற்றி இருக்கும். இவ்விரு இதழ்களின் முதற்பகுதியே தலையங்கப்பகுதியாகும். இரு இதழ் களின் தலையங்கமும் செய்திக் கருவைத் தெரிவித்து, காரணத்தை ஆராய்ந்து இறுதியிய் தீர்வு சொல்லப்பட்டிருப்பதைக் காணமுடி கிறது. சான்றாக,

"உழவர்களின் போராட்டத்திற்குக் காரணம், விவசாயி களுக்கு நியாயவிலையின்மையே; உழவர்கள் ஒன்றுபடவேண்டும், இடைத் தரகர்களை ஒழிக்க வேண்டும். அரசு ஆதரவு தரவேண்டும். தகுந்த விலை கிடைக்கும் வரை குறிப்பிட்ட இரண்டொரு ஆண்டு களில் பருத்தி, கரும்பு போன்றவைகளைப் பயிரிடுவதில்லை என்று சபதம் எடுப்பதுதான். இதனால் விவசாயித்திற்கு நலம் விளையுமே அன்றித் தீமை விளையாது"[2]

என்றிவ்வாறு தலையங்கம் தெளிவாக, சுருங்கச் சொல்லி விளங்க வைக்கக் காணலாம். எனினும் நாளிதழ்களிலும் பருவ இதழ்களிலும் எழுதப்படும் தலையங்கம் எல்லோராலும் படிக்கப் படுகின்றது எனக் கூறுவதற்கில்லை. எனவேதான் பல இதழ்களில் தலையங்கம் என்ற பகுதி குறைந்து மற்றும் இல்லாது உள்ளன. இதழியலில் தலையங்கம் இன்றியமையாப் பகுதியாக உள்ளது போல் அதில் பிற கட்டுரைகளும் இன்றியமையாதொன்றேயாம்.

**கட்டுரைகள் :**

வேளாண் இதழ்களில் வெளியாகும் பல கட்டுரைகளைக் கீழ்க்கண்டவாறு பாகுபாடு செய்யலாம். வேளாண்மையியல் (தோட்டவியல், மண்ணியல், பயிரியல், விதையியல், நோயியல், பூச்சியியல்), கால்நடையியல், வேளாண் பொறியியல் வன மற்றும் மீன் வளவியல், கிராமப்புறச் சமுதாய இயல், மனையியல் மற்றும் பொதுக்கட்டுரைகள் எனப் பிரிக்கலாம். பல இதழ்களுக்கு இப் பாகுபாடு ஒத்து வருவதால் இவ்வாறு பாகுபடுத்தப்பட்டன.

**வேளாண்மையியல் :**

நிலத்தை எவ்வாறு உழவேண்டும் அதற்கு வேண்டிய சூழ் நிலை, தொழில் நுட்பம் போன்றன என்னென்ன என்பதை விளக் கும் வண்ணம் அமையும் கட்டுரைகளை உழவியல் சார்பானது

எனலாம். சிறு, குறு, பெரு, நடுத்தர உழவர்களுக்குத் தக கட்டுரைகள் அமையக் காணலாம். இதற்குள்ள வேறுபாடு என்னவெனில் உழும் தொழில் ஒன்றென்றாலும், உழும் முறைகள் பல அல்லவா' எனவே பொருளாதார வசதிக்கேற்ப உழும் முறைகள் உழு கருவிகள் மாறும். இந்த முறைகளை ஐந்து இதழ்களுமே கட்டுரைகளாக வெளியிடுகின்றன. சான்றாக,

"நீண்டசால் பாத்தி மற்றும் அகல மேட்டுச்சால் ஆகிய முறைகள் பயன்படுத்தப்பட்டும், மானாவாரி நிலத்தில் மண் ஈரம் காக்க சம உயர வரப்பு அமைத்தும் பயனடையலாம்"[3] என்றிது போன்ற உழவியல் முறைகளை இதழ்கள் உழவர்களால் எளிதில் கையாளும் முறையில் தொழில் நுட்பத்துடன் விளக்கக் க்காணலாம். இதைப் போலவே மற்ற மண்ணியல், நோயியல் போன்ற இயல்களும் வேளாண்மைக்கு மிகவும் பயன்படுகின்ற கால்நடைகள், வேளாண்மைக்கு உழவர் சமுதாயம் மற்றும் வேளாண் பொறியியல் போன்ற படைப்புகள் எவ்வாறு அமைந்துள்ளன என்பதைக் காணலாம்.

### *கால்நடையியல் :*

### *கிராமப்புறச் சமுதாயவியல், பொறியியல்*

மனித இனந்தோன்றி வேளாண்மை செய்த அந்நாளிலிருந்து கால்நடைகள் மற்றும் வேளாண் கருவிகள் வேளாண்மைக்கு மிகவும் தேவைப்பட்டன. ஆகவே தன் தொழிலுக்கு ஏற்றவாறு மனித சமுதாயம் அவைகளைப் பழக்கிக் கொண்டது. எனவே அவைகளை வளர்க்கும் / தயாரிக்கும் முறைகள், பாதுகாக்கும் முறைகள், பயன்படுத்தும் முறைகள் பற்றித் தொழில் நுட்பத்தோடு தெளிவாக இவ்வேளாண் இதழ்கள் மனித சமுதாயத்திற்கு விளக்கக் காணலாம். சான்றாக,

"அறுபத்து ஐந்தரை மெரினோ வம்சா வழி உள்ள மெரினோ நீலகிரி கலப்பு இனத்தை சாண்டிநோ என்ற பெயரில் அழைக்கிறோம். இதனை வளர்ப்பதின் மூலம் விவசாயிகளுக்கு அதிக வருவாய் கிடைக்கும். பிரத்தியேக பராமரிப்புச் செலவு ஒன்றுமில்லை. நீலகிரி போன்ற குளிர்ந்த மலைப் பிரதேசங்களில் மட்டும் வளர்க்க இவ்வினம் ஏற்றவை"[4]. என்றிவ்வாறு கால்நடைகளில் புதிய கண்டுபிடிப்புக்கள் மற்றும் கால்நடைகளை வளர்க்கும் முறைகள் பற்றியும் கட்டுரைகள் வெளியாகின்றன. இதே போல

வேளாண் பொறியியல் சார்பான பல கட்டுரைகள் வெளியாகின்றன. சான்றாக,

''உ. பி. மாநில இலக்னோவில் உள்ள அகில இந்திய கரும்பு ஆராய்ச்சி நிலையத்தின் கண்டுபிடிப்பான பல நவீன எந்திரங்கள் இங்கு கொண்டு வரப்பட்டன. 'பிளேண்ட்டர்' எனும் நடவு செய்யும் எந்திரத்தினை டிரேக்டரில் இணைத்து விட்டால் தானே கரணைகளைப் பூச்சி மருந்தில் நனைத்து நடவு செய்து உரமும் போட்டு விடுகிறது. இதன் விலை ரூ. 4000/-. ஒரே நாளில் குறைந்த ஆட்களை வைத்துக் கொண்டு 5 ஏக்கர் நடவு செய்து விடலாம்''[5]. என்றிவ்வாறு பொறியின் புதிய கண்டுபிடிப்பு மற்றும் அது வேலை செய்யும் முறை, அதன் விலை, அக்கருவி ஒருநாளில் உழைக்கும் கால அளவு போன்ற செய்திகளைத் தெளிவாகக் காணமுடிகிறது. இவ்விதழ்களைப் படிக்கும் உழவர்கள் எதிர்பார்க்கும் அளவுக்குச் செய்திகளைத் தர முயல்கிறது. கிராமப்புறச் சமுதாயம் முன்னேறவே இவ்விதழ்கள் செயலாற்றுகின்றன. மனித உள்ளத்தில் தாழ்வு மனப்பான்மை, பொறாமை, வறுமை, சோம்பேறித்தனம், போன்ற பழக்கங்கள் ஏற்படா வண்ணம் இருக்க இவ்வேளாண்மை இதழ்களில் கட்டுரைகளை அமைகின்றன. சான்றாக,

''முன்னேற்றத்திற்கு வறுமை ஒரு தடையே அல்ல. சாதனை படைத்தவர்கள் பெரும்பான்மையோர் வசதி இல்லாதவர்கள்தாம். உலகத்தால் புறக்கணிக்கப்பட்டவர்கள் தாம். வறுமையின் கொடுமைதான் வளர்ச்சியை விரைவு படுத்துகிறது. பெர்னாட்ஷா, ஆப்ரகாம் லிங்கன், லெனின், மொராஜிதேசாய், லால்பகதூர், தாமஸ் ஆல்வா எடிசன் போன்றோர் வறுமையை எண்ணிச் சோர்ந்து விடவில்லை. முயற்சியால் முன்னுக்கு வந்தவர்கள். எனவே வறுமையை நமக்கு நேர்ந்த தடையாகக் கருதாமல் அதுவே நமக்கு விடப்பட்ட வழியாகக் கொள்ள வேண்டும்''.[6]

என்றிவ்வாறு வரலாற்றாராய்ச்சியோடு அமையும் கட்டுரைகள் உழவர்களால் பெரிதும் வரவேற்கக் காணலாம். உழவர்களின் சோர்வை, அறியாமையைப் போக்கி இதுபோன்ற கட்டுரைகள் இருப்பது நல்லதே.

### பொதுக்கட்டுரைகள் :

ஓரளவு வேளாண்மை சார்ந்த இதழ்களும், முழுமையும் வேளாண்மை சார்ந்த இதழ்களுமாகிய இவ்விதழ்கள் பொதுக்கட்டு

ரைகளைவெளியிட்டு வருகின்றன. பொதுக்கட்டுரைகள், பல்வகை மக்களுக்கேற்ப அமையும். இயற்கை மருத்துவம், கடவுள் நம்பிக்கை, பயண அனுபவங்கள் இலக்கியம் சார்பானவைகள் கட்டுரைகளாக அமைகின்றன. இயற்கை மருத்துவம் ஏர் உழவன் இதழில் மட்டும்வெளியாகின்றது. கடவுள் சார்பான கட்டுரைகளும் அவ்விதழிலேயே அமைந்துள்ளன. பயணக்கட்டுரைகள் ஏர்உழவன், செய்தி மடல், வளரும் வேளாண்மை ஆகிய மூன்றிதழ்களிலும், இலக்கியம் சார்பான கட்டுரைகள் ஏர்உழவன், செய்தி மடல், நல்விதை ஆகிய மூன்றிதழ்களிலும் வெளியாகின்றன. சான்றாக, இயற்கை மருத்துவம் பற்றிய கட்டுரையில் ஒரு பகுதியைக் காணலாம். (பேட்டிக் கட்டுரை)

''கோவை கணபதியில் உள்ள ஆர். கே. இயற்கை நல மருத்துவ மனைக்கு சிசிச்சைக்காக வந்தேன். இங்கு வந்த சேர்ந்த அன்றே மண்பட்டி என்னும் சிசிச்சையினைக் காலையிலும், மாலையிலும் தந்தார்கள். எனிமாக் கொடுத்துக் கொடுத்து குடலைச் சுத்தம் செய்தார்கள். இதனால் வயிற்றில் எஞ்சியுள்ள கழிவுகள் நீக்கப்படுகின்றன. எனவே தானாகவே வாயுத் தொல்லை, வயிறு கனமாக இருப்பது போன்ற உணர்வு இவையெல்லாம் நீங்கின''[7] என்றிவ்வாறு இயற்கை மருத்துவத்தின் அரும்பணியினை விளக்கும் கட்டுரைகள் பொது மக்களுக்கு மிகவும் பயனுள்ளதாகும். உடல்நலமாக இருந்தால் மட்டும் போதாது. மனமும் நலம்பட வேண்டும் என்ற நோக்கில் கடவுள் பக்தி சார்பான கட்டுரைகளும் வெளியாக காணலாம். சான்றாக,

''கடவுள் தீயவர்களைத் தண்டிப்பதும் இல்லை. நல்லவர்களுக்குப் பரிசளிப்பதும் இல்லை. நல்லதும் கெட்டதும் அவரவர்களுடைய வினையினால் ஏற்படுபவையே. செய்கை எதிர்ச் செய்கை விதிகள் இத்தகைய பலன்களைக் கொடுக்கின்றன. இதற்காக எவரையும் குறை சொல்ல வேண்டிய அவசியமில்லை''[8] என்றிவ்வாறு கடவுள் பக்தியை மனத்திலிருந்து மனத்தூய்மை பெற இது போன்ற கட்டுரைகள் பயன்படக் காணலாம். உடலும் உள்ளமும் நலமாக இருக்கும் போது வாழ்க்கையைச் செம்மையாக அமைத்து அமைதியுடன் வாழ்க்கை நடத்த இலக்கியம் சார்பான கட்டுரைகள் படிப்பது நலமல்லவா. எனவே குறள் போன்ற நீதி இலக்கியக் கருத்துக்களை இவ்விதழ்கள் வழங்கக் காணலாம். சான்றாக,

"மனை ஒழுக்கம், கற்பு, நெறி, இல்லறத்தின் மாண்பு இவை பற்றியெல்லாம் ஒளவையார் அழகுபட எடுத்துரைக்கின்றார். கற்பு என்பது என்ன என்று விவரிக்கின்றார். "கற்பெனப்படுவது சொற்றிறம்பாமை", கணவன் சொல்படி நட, அதுவே கற்பு. இதுதான் கற்புக்கு ஒளவையார் தரும் விளக்கம், ஒரு பெண் கணவன் சொற்படி நடந்துவிட்டால் வேறு பிரச்சனையே இல்லை. உண்மையான அன்பு, பற்று, பாசமிக்க கணவனின் சொல்படி நடப்பதைத் தவிர ஒரு பெண்ணுக்கு வேறு என்ன கடமை இருக்க முடியும்"[9]. என்றிவ்வாறு இலக்கியம் சார்பான கட்டுரைகள் மக்களை நன்முறையில் இழுத்துச்செல்ல உதவுகின்றன. இவைகள் தவிர இதழியல் துறையில் இன்றியமையாப் பகுதி விளம்பரங்கள். எனவே அவை வேளாண்மை இதழ்களில் எவ்வாறு அமைந்துள்ளன எனக் காண்போம்.

*விளம்பரங்கள் :*

இன்றைய உலகம் ஒரு விளம்பர உலகம். எங்கும் எதிலும் விளம்பரம் இடம்பிடிக்கக் காணலாம். இதழ்களில் வெளியாகும் விளம்பரங்கள், "நுகர்ச்சி ஆற்றலை மிகுதிப்படுத்தி வாங்கும் ஆர்வத்தை உண்டாக்கியும், ஊக்கியும், வாழ்க்கைத் தரத்தை மேன்மைப்படுத்த வழி கோலுவதே"[10]யாகும். விளம்பரம் பல வகைப்படும். இங்கு ஆய்வுக்குரிய வேளாண்மை இதழ்களில், வேளாண் பொறியியல், மருந்து, பூச்சியியல், உரங்கள், விதையியல் சார்பான விளம்பரங்கள் வெளியாகின்றன. சான்றாக,

"விவசாயிகளின் தேவைக்கு போர்வெல் ஏர்கம்பரஸர்கள், விவசாயம், தொழிற்சாலை மற்றும் குடிநீர் உபயோகங்களுக்கு 1 எச். பி. முதல் 20 எச். பி. வரை மணிக்கு 18,000 காலன் தண்ணீர் கிடைக்கும். குழாய் கிணறுகளிலும், கிணறுகளில் உள்ள போர்க் குழிகளிலும் 600 அடி ஆழம்வரை இருந்தாலும்கூட மிக நவீன முறையில் இப்பொழுதுள்ள முறைகளில் ஆகும் செலவில் பாதி செலவில் அதே அளவு தண்ணீர் பெறலாம். 4″, 6″, 8″ மற்றும் அதைவிடப் பெரிய போர்வெல்களிலும் உபயோகிக்கலாம்.

தயாரிப்பாளர்கள் :

பீ. கே. மெஷின் ஒர்க்ஸ்

அவனாசி சாலை

சிவில் ஏரோட்ரூம் போஸ்ட்

(அரசு சோதனைக்கூடம் எதிர்புறம்)

கோயம்புத்தூர் 641 014.

போன் 87219 பி. பி.

குறிப்பு : எங்கள் தொழிற்சாலையில் எல்லா நாட்களிலும் செயல் விளக்கம் செய்து காண்பிக்கப்படும்''[11]

என்றிவ்வாறு விளம்பரம் தெளிவாகவும், விளக்கமாகவும் அமைவதால் நுகர்வோர்க்கு எளிதாக, விரைவாகப் பயன்கிடைக்க வாய்ப்பமைகிறது. பெரும்பாலும் படத்துடனேயே விளம்பரம் அமைகிறது. பிற மொழிக் கலப்பு, சொற்களில் காணப்பட்டாலும் ஓரளவு நன்கு புரியும் சொற்களாகவே உள்ளன. கோவையிலிருந்து மேற்க்ண்ட இதழ்கள் வெளியாவதால் அதில் வெளியாகும் விளம்பரங்களும் கொங்குநாட்டைச் சார்ந்தவையாக உள்ளன. உழவர் சமுதாயத்தை அறியாமையிலிருந்து நீக்கும் பல கருவிகளில் விளம்பரமும் ஒன்று.

ஆய்வுக்குரிய ஐந்து இதழ்களில் மூன்று இதழ்களே விளம்பரங்களை வெளியிடுகின்றன. இலாப நோக்கம் அதிகம் இல்லாத இதழ்கள் விளம்பரங்களை வெளியிடுவதில்லை. விளம்பரங்கள், ''பொருளினைப் பற்றிய தொடர்பு, பொருளைப் பற்றிய தகவல், பொருளைப் பற்றிய தூண்டுதல்''[12] ஆகிய பண்புகளை உள்ளடக்கி உள்ளன. படத்துடன் கூடிய விளம்பரம் உண்மையான பொருளை எளிதில் புரிந்து கொள்ள முடியும். படத்தைப் பார்த்து நாமே சில கருவிகளைச் செய்யலாம். இதல்களில் விளம்பரங்கள் 4ல் 1 பங்கு வெளியாவதால் மற்ற செய்திகளுக்கு இடம் குறைகிறது என உழவர்களிடமிருந்து விடை கிடைக்கிறது.

அதிக மக்களின் உள்ளத்தை ஈர்ப்பது துணுக்குச் செய்திகளே. ஏனெனில், இலக்கணம் போன்று சுருங்கச் சொல்லி விளங்க வைக்கும் தன்மை கொண்டது. இது விளம்பரம் போன்றே அமையக் காணலாம்.

## துணுக்குகள் :

சிந்திக்க வைப்பதும், சிரிக்க வைப்பதும் துணுக்குகளே. வேளாண்மை இதழ்களில் சிந்திக்கும் துணுக்குகளே உள்ளன. மனித சமுதாயம் முழுவதுமே விரும்பிப் படிக்கும் பகுதி துணுக்குப் பகுதிகளே. துணுக்குகளை, அரசியல், புதிய வேளாண் கண்டுபிடிப்புகள், பழமொழிகள், மருத்துவம், பொது அறிவு, அறிஞர்களின் பொன்மொழிகள் என பல்வகைப்படுத்தலாம். சான்றாக,

''இந்திய தரிசு நிலப்பரப்பில் அய்ந்தில் ஒரு பங்கு (மரஞ் செடி வகைத் தாவரம் வளர்ந்தால் கூட விறகு எரிபொருள் தவிர 48,000 மெ. வா. மின்சாரமும் 70 இலட்சம் பேர்க்கு வேலையும் கிடைக்கும்)''[13] என்றிவ்வாறும்,

''சவுண்டால் தலையிலி மைமோசின் என்ற ஒருவகை ரசாயனப் பொருள் உள்ளது. எனவே அசைபோடும் கால்நடைகளின் உணவில் சவுண்டால் தழைகளை சுமார் 30 சதவீதம் வரை சேர்த்துக் கொள்ளலாம். அதற்கு மேல் சேர்த்தால் ஒருவித நச்சுத் தன்மை ஏற்படும். அசை போடாத கால்நடைகளின் உணவில் 10 சதவிகிதம் சேர்த்தால் போதுமானது. கோழி, பன்றி, முயல், வான்கோழி போன்றவைகளுக்கும் உணவில் சேர்த்துக் கொடுக்கலாம்.''[14] என்றிவ்வாறும் துணுக்குகள் அமையப் பெற்று வேளாண்மை சார்பான மக்களுக்கு அதிகம் பலனளிக்கின்றன.

''மரங்கொத்திப்பறவை மரத்தைக்கொத்தும் வேகம் மணிக்கு 1300 மைல் போன்ற பொது அறிவுச் செய்திகள் பல இதழ்களில் வெளியாகின்றன. ஏர்உழவனில், 'ஊர்வலம் பகுதி பொதுஅறிவுப் பகுதியாகும். 'செய்தி மடலில்' 'மாதம் ஒரு போட்டி', என்ற பகுதியும் பொது அறிவுப் பகுதியாகும். 'வளரும் வேளாண்மை'யில் 1985-ஆம்ஆண்டு சுமார் 96 துணுக்குகள் வெளியாயின. ஒவ்வோர் ஆண்டும் இதே அளவு வரலாம். பொதுவாக துணுக்குகள் சிந்திக்க வைக்கும் பகுதி. இதே போலவே வாசகர் கடிதங்கள் போன்ற பிற செய்திகள் இடம்பெறக் காணலாம்.

## பொதுச் செய்திகள்:

கட்டுரைகள், விளம்பரங்கள், தலையங்கம் துணுக்குகள் போக வாசகர் கடிதங்கள், ஆசிரியவுரை, விமர்சனங்கள், புதுக் கவிதைகள் அம்மாத முக்கிய நிகழ்ச்சிகள் பற்றிய செய்திகள்

போன்றன இப்பகுதியில் அமையக் காணலாம். இதழ் வளர்ச்சிக்கு இப்பகுதி ஆலமரத்திற்கு விழுதுகள் போலப் பயன்படத் தக்கன. ஆசிரியரும் வாசகர்களும் சந்திக்கும் பகுதி 'நெஞ்சோடு நெஞ்சம்' போன்றது. அரசின் குடும்பக் கட்டுப்பாடு, பசுமைப்புரட்சி போன்ற பொதுச் சமுதாயச் செய்தியையும் இவைகள் வெளியிடக் காண லாம். உழவர் எவ்வழியிலும் முன்னேற வழிவகுக்க இவ்வகைச் செய்திகள் நன்கு பயன்படும். உழவர்களின் ஐயங்களுக்குத் தீர்வு தரும் பகுதி 'வினா அங்கே விடை இங்கே' என்ற வினா-விடைப் பகுதியாகும். இவவிதழ்களில் கலப்பு மொழி நடையே காணப் படுகின்றது.

*முடிவுரை :*

ஆய்வுக்குரிய இதழ்களில் சில தனியார் நிறுவனங்களும், சில அரசும் நடத்துகின்றன. எனவே அதிகம் பொழுது போக்குச் செய்திகள் வெளியாவதில்லை. பக்க அளவுகளிலும், செய்திகளை வெளியிடும் முறையிலும் வேறுபாடுகள் கொண்டுள்ளன. எளிய நடையிலேயே அமைந்தாலும் பிற மொழிக் கலப்பால் சில சமயம் நடை கடினமாக உள்ளது.

காலத்திற்கேற்றவாறு செய்திகளைத் தருவதில் எல்லாஇதழ் களுமே முன்னணியில் இருக்கின்றன.

இயற்கை பழிவாங்குவதால் (இழை இன்மை, அதிக மழை) இவ்விதழ்களில் வெளியாகும் செய்திகளை நடைமுறைப்படுத்த முடியாமல் உழவர்கள் தவிப்பது இவ்விதழ்களின் மூலம் தெரி கின்றன.

இத்துறையில் அதிகம் இதழ்கள் வெளியாவதில்லை, வாசகர் மாநாடு நடத்தி உழவர்களின் கருத்துக்களை அறிந்து செய்திகளை வெளியிடலாம் என்பது வலியுறுத்தப்படுகிறது.

செய்தி மடல் வேளாண்மைச் செய்திகளை 50%, மீதி 50% கடவுள் பக்தி மற்றும் பொதுச் செய்திகளையும் வெளியிடுகின்றது.

நல்விதையில் 80% விதையியல் சார்பானவைகளே செய்தி களாக உள்ளன. பொதுச் செய்திகள் 20% இருக்கின்றன.

ஏர் உழவனில் 25% விளம்பரங்களும், 30% வேளாண்மை கட்டுரைகளும், கவிதைகளும், 15% தலையங்கமும், பொதுச்செய்திகளும், 30% மருத்துவக் கட்டுரைகளும் துணுக்குகளும் அமையக் காணலாம்.

எனவே, ஒவ்வோர் இதழ்களும் அதன் வடிவிலும் வெளியிடும் செய்தி அமைப்பு முறைகளிலும் மாறுபட்டுக் காணப்படுகின்றன.

ஆண்டையும் மாதத்தையும் குறிக்க,

1. ஏர் உழவன்—மலர், இதழ்

2. வளரும் வேளாண்மை — மலர், இதழ்

3. நல்விதை - கிளை - கதிர்

4. உழவர் முரசு - முரசு, ஒலி

5. செய்தி மடல் - மலர் மடல் என்றவாறு உள்ளன.

தலையங்கம் சில வேளாணிதழ்களில் மட்டும் எழுதப்படுகிறது. துணுக்குகள் எல்லா இதழ்களிலும் காணப்பெறுகின்றன.

## மேற்கோள் விளக்கம் :

1. கோதண்டபாணி, இரா., 'இதழியல்' ப. 141
2. 'ஏர் உழவன்', மலர் 16, இதழ் 13 ப. 38
3. வளரும் வேளாண்மை', மார்ச் 1985 ப. 54
4. ஏர் உழவன்', மலர் 16, இதழ் 13 ப. 30
5. 'செய்தி மடல்', மலர் 21 - மடல் 9, பக். 13-14
6. 'ஏர் உழவன்', மலர் 16 - இதழ் 5, பக். 29-30
7. 'ஏர் உழவன்', மலர் 16 - இதழ் 20, ப. 6
8. 'ஏர் உழவன்', மலர் 16 இதழ் 3, ப. 21
9. 'செய்தி மடல்', மலர் 21 - மடல் 9 ப. 45
10. இளங்கோவன், மா. இரா., 'இதழியல் நோக்கு', ப. 40
11. 'ஏர் உழவன்', மலர் 16 - இதழ் 4, ப. 24

12. பழனிசாமி, பி. எம்., 1985 - ஆம் ஆண்டு வளரும் வேளாண்மை இதழ்கள் ஓர் ஆய்வு, ப. 78

13. 'நல்விதை', கிளை 3 கதிர் 5 ப. 33

14. 'உழவர் முரசு' முரசு 5 - ஒலி 11 ப. 5

## கருத்துக்கள், ஆலோசனைகள் வழங்கியோர் :

1. டாக்டர் இலெ. செ. கந்தசாமி, ஆசிரியர், வளரும் வேளாண்மை.

2. பவானி உழவர் பயிற்சி நிலைய அலுவலர்கள்

3. திரு ரா. கிருஷ்ணசாமிக் கவுண்டர், ஆசிரியர், ஏர் உழவன்

4. திரு சிதம்பரநாதன், ஆசிரியர், செய்தி மடல்

5. திரு இராசுநாயுடு, ஆசிரியர் 'நல்விதை'

6. டாக்டர் நா. செயராமன், துறைத்தலைவர், தமிழ்த்துறை, பாரதியார் பல்கலைக்கழகம், கோயம்புத்தூர்.

7. டாக்டர் கி. கருணாகரன், தலைவர், மொழியியல் துறை, பாரதியார் பல்கலைக்கழகம், கோயம்புத்தூர்

## பயன்பட்ட நூல்கள்

1. இராமசாமிப் புலவர், சு. அ., 'நாள் கிழமை திங்கள் இதழ் விளக்க வரிசை', சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் லிமிடெட், சென்னை முதற்பதிப்பு 1961

2. இளங்கோ, மா. ரா., இதழியல் நோக்கு சேகர் பதிப்பகம், சென்னை 78 முதற்பதிப்பு 1981

3. கந்தசாமி, இல. செ., கிராமங்களுக்குள்ளே ...... கலைச் செல்வம் பதிப்பகம், 15 இலால்பகதூர் சாஸ்திரி தெரு, பாப்பநாயக்கன்பாளையம் புதூர், கோயம்புத்தூர் 41, அக்டோபர் 1985 முதற்பதிப்பு.

4. கோதண்டபாணி, இரா., இதழியல் கற்பக நூலகம், 21 ஏ ஆசாரி தெரு, கல்லா குளம், மதுரை 2. பிப்ரவரி 1980 - முதற்பதிப்பு.

5. சுப்பிரமணியம், ச. வே., முதலியோர் (ப. ஆ.) எண்பத்திரண்டில் தமிழ், உலகத் தமிழ் ஆராய்ச்சி நிறுவனம், சென்னை, சூலை 1985 முதற் பதிப்பு.

6. பழனிசாமி, பி. எம்., 1985 - வளரும் வேளாண்மை இதழ்கள் ஓர் ஆய்வு (வெளியிடப் பெறாத முதுகலை ஆய்வுக்கட்டுரை) பூ. சா. கோ, கலை அறிவியல் கல்லூரி, கோவை 14, ஏப்ரல் 1986.

7. இதழ்கள்

1. வளரும் வேளாண்மை (மாத இதழ்)

2. ஏர் உழவன் (மாதமிருமுறை இதழ்)

3. செய்திமடல் (மாத இதழ்)

4. உழவர் முரசு (மாத இதழ்)

5. நல்விதை (மாத இதழ்)



# 14. கோங்கு நாட்டுத் தலங்களும் இலக்கியங்களும்

ஆர். பூங்குன்றன், எம். ஏ.,

கொங்கு நாடு மலைகளும் காடுகளும் நிறைந்த நாடு. கொங்கில் கிடைக்கின்ற வரலாற்றுச் சான்றுகள் இங்கு மனித வாழ்க்கை மூவாயிரம் ஆண்டுகட்கு முன் தொடங்கி விட்டது என்பதை வலியுறுத்துகின்றன. கொங்குநாடு தொல்பழங்காலத்து வாழ்க்கை நெறியை அண்மைக்காலம் வரையில் பாதுகாத்து வந்தது. இந்நாடு கிழக்கே கொல்லிமலை, தெற்கே வராகமலை, மேற்கே வெள்ளிமலை, வடக்கே தலைமலை ஆகியவை எல்லையாக அமைந்துள்ளன. சில வரலாற்றாசிரியர்கள் தருமபுரி மாவட்டத்தையும், சேலம் மாவட்டத்தின் ஆத்தூர் வட்டத்தையும் கொங்கு நாட்டில் சேர்த்துக் கொள்கின்றனர்[1], உண்மையில் இப் பகுதிகள் பண்டைய கொங்கு நாட்டில் அடங்கியிருக்கவில்லை. தருமபுரி மாவட்டம், தகடூர நாடு என்றும்'[2] ஆத்தூர் வட்டம்' மகதை மண்டலம் என்றும்[3] அழைக்கப்பட்டன. ஆகையால் இவையொழிந்த பகுதிகளை பண்டைக் கொங்கு நாடாக கொண்டு ஆய்வு செய்வது சாலவும் சிறந்தது. இந்நாட்டில் தலங்கள் தோன்றிய முறை குறிப்பிடத்தக்கது. காலம் தோறும் ஏற்ற இரக்கம் கொண்ட தன்மையுடையவை. சில காலங்களில் ஊர் தோன்றியும், சில காலங்களில் ஊர் அழிந்தும் நிற்கும் போக்கைக் காணலாம். அதற்கு அரசியல், பொருளியல் ஆகிய காரணங்கள் முக்கியமானவை. மற்றொரு காரணம் இயற்கை. அவற்றில் பொருளியல் காரணமே விதந்து கூறத்தக்கது. பின் மண்டல சதக ஆசிரியர்கள் கொங்குத் தல வரலாற்றைக் கூறப் புகுந்தனர்[4]. கொங்கு நாட்டு வரலாற்று ஆசிரியர்கள் பண்டைய தல வரலாறு எழுதப் புகும் பொழுது இலக்கியச் சான்றுகளையே மேற்கோள் காட்டினர். பண்டைய இலக்கியங்கள் நேரடியாக ஊர் வரலாற்றினைக் கூறவில்லை என்பது உண்மையே. ஆனால் பண்டைய இலக்கியங்கள் சில ஊர் பற்றிய செய்திகளைச் சுட்டுகின்றன.

சங்ககாலம் தொடங்கிக் கொங்கில் மக்கள் ஊர் ஏற்படுத்தி ஓரிடத்தில் நிலையாக வாழத் தலைப்பட்டனர். சங்ககாலக் கொங்கு நாட்டில் நகரங்களும் வாணிகத் தலங்களும் சிறப்புற்றன. கரூர், கொடுமணல், பேரூர், கொழுமம், பழனி போன்ற ஊர்கள் பண்டைய வாணிகத் தலங்கள்.[5] நம்பியூர், ஆற்றூர் போன்றவை ஆர்நாட்டார் மலைத் தமிழ்ப் பிராமிக் கல்வெட்டுக்களில் சுட்டப்படுகின்றன.[6] சங்க காலத்தில் உருவாக்கப்பட்டபெருங்கற்சின்னங்களும் அவற்றை உருவாக்கிய மக்கள் வாழ்விடங்களும் கொங்கு நாட்டில் மிகுதியும் உள்ளன.[7] ஐந்து கிலோ மீட்டர் தொலைவிற்கு ஒன்று வீதம் இப்பெருங்கற் சின்னங்கள் அமைந்துள்ளன. இவற்றிற்கருகில் வாழ்விடங்களும் உள்ளன.[8] அண்மைக் காலம் வரை பெருங்கற்சின்ன மக்கள் நாடோடிகளாய்த் திரிந்தவர்கள் என்ற கருத்து நிலவியது.[9] ஆனால் பெருங்கற் சின்னங்களுக்கருகில் வாழ்விடம் இருப்பது இக்கருத்தினைப் பொய்யென்று நிரூபிக்கிறது. கொங்கு நாடு முழுவதும் ஐந்நூறுக்கும் மேற்பட்ட பெருங்கற் சின்னங்கள் உள்ளன.[10] அவை முறையாக ஆய்வு செய்யப்படவில்லை. ஒரு சிலவே அகழ்வாய்வு செய்யப்பட்டுள்ளன. அவற்றைக்கொண்டு பெருங்கற் சின்ன மக்களின் வாழ்வியல் பற்றி விரிவாக அறிய முடியவில்லை. மேலும் பெருங்கற் சின்னங்களை உருவாக்கிய மக்கள் வாழ்ந்த ஊர்களுக்கும், பெருவழிகளில் இருந்த வாணிகத் தலங்களுக்கும் இடையில் இருந்த தொடர்பினையும் அறியக்கூடவில்லை. பெருங்கற் சின்னங்கள் கி. மு. 3-ம் நூற்றாண்டிலிருந்து வைக்கப் பெற்றிருத்தல் வேண்டும் என்று கருதுவாரும் உளர்.[11] அதற்கான அகழ்வுச் சான்றுகள் கிடைத்துள்ளன. மேலே கூறப்பட்ட சங்க கால ஊர்களில் கூட பெருங்கற் சின்னங்கள் மிகுந்து காணப்படுகின்றன. கொடு மணலில் கிடைத்த ஓடு ஒன்றில் தமிழ்ப் பிராமி எழுத்துக்கள் பொறிக்கப்பட்டிருப்பதனைக் காணலாம். இது கி. மு. மூன்றாம் நூற்றாண்டினைச் சேர்ந்தது[12].

•

தொல்பழங்காலந்தொட்டு கொங்கு நாட்டில் பழங்குடி வழிபாட்டிடங்கள் பல இருந்தன. வெள்ளியங்கிரி, திருமூர்த்தி மலை, பழனிமலை போன்றவற்றைச் சான்றாகக் காட்டலாம்[13]. வேட்டக்காரன்மலை, மருதமலை போன்றவற்றையும் சேர்த்துக் கொள்ளலாம். இவை மட்டுமின்றி இயற்கையையும். மரஞ்செடி கொடிகளையும் வழிபடும் போக்கு இப்பகுதியில் காணப்படுகின்றது[14]. பழங்குடித் தெய்வங்களில் ஆண், பெண் தெய்வங்கள் என இரண்டு வகைத் தெய்வங்களும் அடங்கும். ஆண் தெய்வ வழிபாடு தொல்பழங் காலத்தில் வீரவழிபாட்டின் தொடர்ச்சியாகக்

கொள்ள முடியும். பெண் தெய்வ வழிபாடு 'பழையோள்' என்று அழைக்கப்பட்ட கொற்றவை வழிபாட்டின் எச்சமாகும்.

காடும் காவும், கவின்பெறு துருத்தியும்
யாறும் குறளும் வேறுபல் வைப்பும்
சதுக்கமும் சந்தியும், புதுப்பூங்கடம்பும்
மன்றமும் பொதியிலும், கந்துடை நிலையிலும்[15].

இத்தெய்வங்களின் உறைவிடம், சந்தியும், சதுக்கமும், ஆற்றிடைக் குறையும் மரமும், மலைமுகடும் ஆகும். கொற்றவை உறையும் மலை உச்சிகளை 'அணங்குடை' நெடுமுடி என்று கூறுவதைக் காணலாம்.

கொங்கு நாட்டில் சமண, பௌத்த சமயங்கள் தொடக்கத்தில் பரவின. ஆர்நாட்டார்மலை, அரச்சலூர் ஆகிய ஊர்களில் சமண முனிவர்களுக்கு வடிக்கப்பட்ட படுக்கைகள், தமிழ்ப் பிராமிக்கல் வெட்டுக்கள் ஆகியவை உள்ளன[16]. ஆர்நாட்டார் மலைச் சாசனம் சேர மன்னர்களால் படுக்கை அமைக்கப்பட்டதைச் சுட்டுகின்றது. அரச்சலூரில் இசைக்கல்வெட்டினை உருவாக்கியவன் படுக்கை வடிக்கப்பட்டிருப்பதைக் காணலாம்[17]. இவை மட்டுமின்றி செந்நாக்குன்று, திருச்செங்கோடு, ஆழியாறு, குமாரமங்கலம் பிள்ளைத்தின்னிமலை போன்ற இடங்களில் சமணப் படுக்கைகள் வடிக்கப்பட்டுள்ளன[18]. செந்நாக்குன்றில் காலத்தால் முற்பட்ட ஸ்வஸ்திக் சின்னம் உள்ளது. குளித்தலை அருகில் உள்ள ஐயர் மலையில் கி. மு. இரண்டாம் நூற்றாண்டு தமிழ்ப் பிராமிக் கல் வெட்டு உள்ளது[19].

சமண முனிவர்கள் தங்கித் தவம் செய்த இடத்தில் அவர்கள் உயிர் தரித்தபின் படுக்கை அமைத்துக் கொடுத்தனர்[20]. படுக்கைகள் ஒரு வகையில் நினைவுச் சின்னங்கள் என்று கொள்ளலாம். சமண முனிவர்கள் மலை முழைஞ்சுகளைத் தங்கள் தவப் பள்ளிகளாகத் தேர்ந்தெடுத்ததற்குக் காரணம் இருந்திருக்க வேண்டும். மக்கள் தொடர்பு அற்றிருக்க வேண்டும் என்ற கருத்து ஒரு காரணமாக இருந்தாலும் வேறொரு காரணத்தையும் கூறலாம். தவப் பள்ளிகள் தொல்பழங்கால வழிபாட்டிடங்களாக இருந்தது என்று கருத வாய்ப்பு உண்டு. ஆழியாற்றங்கரையிலிருந்து ஆதாழி அம்மன் கோயில் இதற்குச் சான்று. ஆதாழி அம்மன் கோயில் என்பது ஒரு குகை. அக்குகையில் கி. பி. 10-ம் நூற்றாண்டினைச் சேர்ந்த சமணத் தீர்த்தங்கரர் உருவம் ஒன்று உள்ளது. சமணர் படுக்கையும் உண்டு[21]. அத் தீர்த்தங்கரரின் முகப் பகுதி சிதைக்கப்

பட்டுள்ளது. முகம் சிதைவுற்ற அவ்வுருவத்தினை ஆதாழி அம்மன் என்று பெயரிட்டு வழிபாடு செய்கின்றனர். இவ்வம்மனுக்கு உயிர்ப் பலியும் (ஆடு, கோழி) தருகின்றனர். தவப்பள்ளி நிலை பெற்றிருந்த இடத்தில் உயிர்ப் பலி அளிப்பது முரண்பட்ட காட்சி அல்லவா. காலாகாலமாக வழிபாடு செய்யும் கிராம மக்கள் மட்டும் அன்றி லாரிகளை ஓட்டிச் செல்லும் ஓட்டுநர்களும் இவ்வம்மனுக்கு ஆடு, கோழி பலியிட்டு வழிபாடு செய்வதைப் பார்க்கலாம். தங்கள் வழிப் பயணம் துன்பமும், தொல்லையுமின்றி நடைபெற வேண்டும் என்பதே அவர்கள் வேண்டுதலை.

சமணம் தழைத்த பள்ளியில் உயிர்ப் பலி வாங்கும் தெய்வம் நிலைத்திருப்பது இந்தியச் சமய வரலாற்றில் புதுமையானதன்று. வடமேற்குத் தக்காணத்தில் கார்லே, கொண்டானே, நாசிக் போன்ற இடங்களில் உள்ள புத்தவிகாரங்களில் சிறு தெய்வ உருவங்கள் பொறிக்கப்பட்டுள்ளன[22]. அவற்றில் சில இன்னும் வழிபாட்டில் உள்ளன. கார்லே விகாரத்தில் ‘ யமி ’ என்ற பெண் உருவம் கந்திற் பாவையாகக் காட்சி அளிக்கின்றது[23]. அவ்வுருவத்தினை இன்னும் நூறு மைல் தொலைவில் வாழும் ‘ கோ ’ என்ற பம்பாய் மீனவர்கள் தங்கள் குல தெய்வமாக வழிபடுகின்றனர்[24]. அவ் உருவத்திற்குப் பலியும் இடுகின்றனர். ஆனால் யமி என்ற பெண் தெய்வம் புத்த விகாரங்கள் தோன்றுவதற்கு முன் காட்டுப் பழங்குடிகள் வழிபட்ட தெய்வம் என்றும், யமி தெய்வமாக உறைந்த இடம் புத்த விகாரங்கள் இருக்குமிடம் என்றும் புத்த மதம் செல்வாக்கிழந்த பின்னும் யமி என்ற பெண் தெய்வம் தொடர்ந்து காட்டுப் பழங்குடிகளால் வழிபடப்பட்டிருக்க வேண்டும் என்றும் வரலாற்றறிஞர் டி. டி. கோசம்பி அவர்கள் கருதுகிறார்[25]. வடமேற்கு தக்கணம் முழுவதும் கன ஆய்வு செய்து கிடைத்த சான்றுகளைக் கொண்டு இம்முடிவை அறிஞர் கோசம்பி கூறியுள்ளார்கள் ஆய்வின் மூலம் அவர் கண்டறிந்த உண்மைகளைக் கொங்கு நாட்டு வழிபாட்டிடங்களுக்கும், தவப்பள்ளிகளுக்கும் ஒப்பிட்டுப் பார்க்கலாம்.

ஆழியாற்று அணை, திருமூர்த்தி மலை, ஐவர் மலை ஆகிய இடங்களில் சமணத் தவப்பள்ளிகள் இருந்தமைக்கான சான்றுகள் உண்டு. ஐவர் மலை, ஆழியாற்று அணை ஆகிய இடங்களில் பெண் தெய்வங்கள் தொல்பழங்காலம் முதல் வழிபட்டிருக்க வேண்டும். ஐவர் மலையில் உள்ள கி. பி. ஒன்பதாம் நூற்றாண்டுக் கல்வெட்டு ஒன்று ‘திருவயிரைபடாரர்’ என்றும் படாரி என்றும்

கூறுவதைக் காணலாம்[26]. அது கொண்டு இம்மலையே பதிற்றுப் பத்தில் கட்டப்படும் அயிரை என்றும், அங்குச் சேரர்கள் கொற் றவைக்கு உயிர்ப் பலியிட்டு வழிபாடியற்றினர் என்றும் கூறுகின் றனர்[27]. இக் கொற்றவை வழிபாடு நடைபெற்ற குகைகளில் பின்னால் வந்த சமண முனிவர்கள் தவப்பள்ளி அமைத்திருத்தல் வேண்டும். ஆதாழி அம்மன் என்ற தெய்வம் கூட ஆற்று வழிபாட்டி லிருந்து தோன்றி இருக்கலாம். ஆத்தா ஆழி அம்மன் என்பதே ஆதாழி என்று மருவியிருக்கவேண்டும். அதனால் இவ்வழிபாடும் தொல் பழங்காலத்திலிருந்து வழக்கத்தில் வந்திருக்க வேண்டும். தவப் பள்ளிகள் ஏற்பட்ட பின்னும் இத் தொல் பழங்கால வழிபாடு தொடர்ந்திருக்க வேண்டும். பள்ளிகள் மூலம் பரவிய சமணம் இடையில் செல்வாக்கிழந்தது. ஆனால் மக்கள் வாழ்வில் இரண் டறக் கலந்த தொல் பழங்கால வழிபாடு இன்று வரை நிலை பெற்றுள்ளது. ப்ழங்குடித் தெய்வமாக விளங்கிய ஆதாழி பின்னா ளில் பெருவழித் தெய்வமாக மாறி வழிப் போக்கர் வழிபடும் தெய்வ மாகவும் மாறியது. இதைப் போலவே அயிரைத் தெய்வமும் பெரு வழித் தெய்வமாக மாறியிருத்தல் வேண்டும். கொழுமம் கல்வெட் டில் அசுரர் மலைப் பெருவழி என்றொரு பெருவழி சுட்டப்படுகின் றது. இது பெரும்பாலும் அயிரை மலைப் பெருவழி என்பதன் திரிபாகலாம்[28]. இச் சான்றுகளிலிருந்து நாம் அறிவது இதுதான். கொங்கு நாட்டில் தொல்பழங் காலந்தொட்டு வழிபடப்பட்ட பெண் தெய்வங்கள் பின்னாளில் வந்த சமண சமயத்துடன் கலந்து நின்றது. சமணம் அழிந்த பின்னும் இத் தெய்வங்கள் தொல்பழங் கால முறையுடன் வழிபாடு செய்யப்பட்டு வருகின்றது.

இந்தப் பின்னணியில் கொங்கு நாட்டுப் பள்ளிகளில் உறைந்த பெண் தெய்வங்களை வடமேற்குத் தக்கணத்துப் பௌத்த விகாரைப் பெண் தெய்வங்களுடன் ஒப்பிடுதல் வேண்டும். இவ்விரு பகுதிகளிலும் நிலைபெற்ற தொல்பழங்காலச் சிறு தெய் வங்கள் சமண பௌத்த சமயங்களுடன் இணைந்தன. சமண, பௌத்த சமயங்கள் இப்பகுதிகளில் செல்வாக்குப் பெற்றதற்குக் காரணம் பெருவழி வாணிபம் வளர்ந்ததாகும்[29]. பெருவழி வாணிகம் வீழ்ச்சியடைந்தமையால் சமண, பௌத்த சமயங் கள் செல்வாக்கு இழந்தன. ஆனால் தொல்பழங்காலத்திலிருந்து வழிபடப்பட்ட சிறு தெய்வ வழிபாடுகள் கால கதியில் அழிந்து விடாமல் தொடர்ந்து நிலைபெற்று வருகின்றன,

கொங்கு நாட்டில் சமண வீழ்ச்சி ஒரு நாளில் நிகழ்ந்து விட வில்லை, வாணிகத்தின் வீழ்ச்சி பெருவழி சமணத் தலங்கள்

செல்வாக்கு இழக்கக் காரணமாயின என்பது உண்மையே. ஆனால் கொங்கு நாட்டின் உள் பகுதியுள்ளும், உயர்ந்தோங்கிய மலைகளி லும் சமணம் செல்வாக்கிழக்கவில்லை. கொல்லி மலை, பருகூர் மலை, சேர்வராயன் மலை போன்ற மலைகளில் கி. பி. பதினைந் தாம் நூற்றாண்டு வரை சமணப் பள்ளிகள் பல இருந்துள்ளன[30]. அவை இன்னும் சமணாண்டிபாட்டம் என்ற பெயரில் வழிபடப்பட்டு வருகின்றன[31]. ஆனால் சமவெளிப் பகுதியிலும் பெருவழிகளின் அருகிலும் இருந்த சமணப் பள்ளிகள் செல்வாக்கிழந்தன. சமணம் செல்வாக்கு இழக்கத் தொடங்கிய போது சமயக் குரவர்கள் சைவத் தினை பரப்ப வந்தனர். மூவர் முதலிகளில் ஞானசம்பந்தன் சமணப் பள்ளிகள் இருந்த ஊர்களுக்குச் சென்று சைவ நெறியினைப் பரப் பினர். அந்த வகையில் அவர் திருச்செங்கோடு, கரூர், கொடுமுடி, நனா போன்ற தலங்களைப் பாடிச் சென்றார்[32]. இவற்றில் திருச்செங்கோடும், கரூரும் சமணம் செல்வாக்கு பெற்றிருந்த ஊர்கள்.

சமயக் குரவர்கள் பாடிச் சென்ற கொங்கு நாட்டுத் தலங் களைப் பற்றிப் பல விதக் கருத்துக்கள் நிலவுகின்றன. ''பாடல் பெற்ற தலங்கள்'' என்ற கருத்தினை உருவாக்கியவர் கொங்கு மண்டல சதக ஆசிரியர் கார்மேகக் கவிஞர்[33]. இந்நூற்றாண்டு வரலாற்றாசிரியர்கள் சதக ஆசிரியர் கருத்தினை ஏற்றுக்கொண்ட னர். அதுமட்டுமில்லாமல் சதக ஆசிரியர் கூறாத தலங்களையும் தேவாரப் பாடல் பெற்ற தலங்களாகக் காட்ட முற்படுகின்றனர். திங்களூர், அன்னூர் போன்ற ஊர்களைப் பாடல் பெற்ற தலங்க ளாகக் காட்டுவதை இதற்குச் சான்றாகக் கூறலாம்[34]. மேலும் சேவூர், துடியலூர் போன்ற ஊர்களை வைப்புத் தலங்களாகக் குறிப்பிடுகின்றனர். இம்முடிவுகளுக்குத் தெளிவான சான்றுகள் இல்லை. திங்களூர்க்கும், அன்னூர்க்கும் காட்டப்படும் பதிகப் பாடல்கள் சோழ நாட்டுத் தலங்களுக்குரியன. பதிகங்களில் அன்னியூர் என்றும், திங்களூர் என்றும் குறிக்கப்படுகின்ற தலங்கள் இன்றும் சோழ நாட்டில் புகழ் பெற்ற சிவத் தலங்கள்.

தற்கால வரலாற்றாசிரியர்கள் மட்டுமன்றி மத்திய காலத்தில் கல்வெட்டினை எழுதியவர்களிடையிலும் கொங்கு பாடல் பெற்ற தலங்களைப் பற்றி ஒருமித்த கருத்து இருக்கவில்லை. வட கொங்கு நாட்டு நாட்டார்க்கும், கோயில் தானத்தார்க்கும் அரசன் ' ஒட்டச்சு' நீக்கி ஆணை அளித்த கல்வெட்டு வடகொங்கு நாட்டுக் கோயில் களில் வெட்டிவைக்கப்பட்டுள்ளது. பாரியூர், கூகலூர், மொடக்கூர், திங்களூர், விஜய மங்கலம் ஆகிய ஊர்களில் இக் கல்வெட்டு வெட்டி

வைக்கப்பட்டுள்ளது[35]. இக் கல்வெட்டில் ஏழு கோயில் தானத்தார் பற்றிய குறிப்பு உண்டு. கரூர், கொடுமுடி, வெஞ்சமாங்கூடல், கூடல், திருமுருகன்பூண்டி, அவினாசி, மன்னியூர் ஆகிய ஊர்கள் முக்கிய தலங்களாக சுட்டப்படுகின்றன[36]. கல்வெட்டில் சதக ஆசிரியர் கட்டிய ஏழு ஆலயங்களில் திருச்செங்கோடு விடுபட்டுள்ளது. ஒட்டச்சு நீக்கிப் பிறப்பித்த ஆணையைக் கூறும் கல்வெட்டுக்களிலும் ஏழு சிவாலயங்கள் எவை என்பதில் கருத்து ஒற்றுமை இருக்கவில்லை. மொடக்கூர் கல்வெட்டு மன்னியூரை விட்டு வேறு ஊரைச் சுட்டுகின்றது. ஆகையால் மத்திய காலந்தொடங்கி இன்றைய வரலாற்றாசிரியர் வரை கொங்கேழ் சிவாலயங்கள் என என்பதில் ஒருமித்த கருத்து கொண்டிருக்கவில்லை என்பது புலப்படும்.

தேவாரப் பாடல் பெற்ற தலங்கள் மட்டுமன்றி பாண்டியர் செப்பேடுகளிலும் கல்வெட்டுக்களிலும் சுட்டப்படுகின்ற ஊர்கள் சில உள்ளன. ஆயினூர், அயிரவேல், புகழியூர், வஞ்சி, தேனூர், பேரூர், கொங்கு போன்ற ஊர்கள் சுட்டப்படுகின்றன[37]. கங்க மன்னன் ஸ்ரீபுருஷன் வெளியிட்ட சேலம் செப்பேட்டில் குமாரமங்கலம் என்ற ஊர் சுட்டப்படுகின்றது[38]. ஏமூர், தொமூர், கொல்லி அறப்பள்ளி, குறும்பு நாட்டுக்குரக்குத்தளி, பேரூர் போன்ற ஊர்கள் வைப்புத் தலங்களாகச் சுட்டப்படுகின்றன[39]. மாட்டூர், சேவூர், துடியலூர் போன்றவற்றை வைப்புத் தலங்களாகச் சுட்டுவதற்குத் தேவாரப் பாடல்களில் சான்றில்லை.

மேலே கூறப்பட்ட பாடல் பெற்ற தலங்களும், வைப்புத் தலங்களும் கொங்கு நாட்டுப் பெருவழிகளில் அருகிலேயே இருந்த வாணிகத் தலங்கள், முருகன்பூண்டியும், வெஞ்சமாங்கூடலும், 'மாநகர்' என்று சுந்தரர் கூறுகிறார்.[40] சர்க்கார் பெரியபாளையம் கல்வெட்டு ஒன்று மதிதொட்டோங்கு மாடவீதி ஒன்பது மாநகரங்கள் என்று சுட்டுவதைக் காணலாம்.[41] அதனால் கொங்கு நாட்டில் கி. பி. 5-ம் நூள்றாண்டிலிருந்து வாணிகத் தலங்கள் மறுமலர்ச்சி பெற்றன எனலாம். கொங்கு நாட்டின்ஊடே சென்ற பெருவழிகள் இந்திய தீபகற்பத்தின் கிழக்கு மேற்கு கடற்கரையை இணைக்கும் பெருவழிகள்.[42] இப் பெருவழிகளில் நிலைபெற்ற ஊர்களே தேவாரப் பாடல் பெற்ற தலங்களாகவும், வைப்புத் தலங்களாகவும் சுட்டப்படுகின்றன எனலாம். கரூர், வெஞ்சமாங்கூடல், அவினாசி, திருமுருகன்மூண்டி போன்ற ஊர்கள் பெருவழியில் அமைந்திருக்கும் தன்மை தெளிவாகவே புலப்படும். கொடுமுடி, திருநணா போன்ற ஊர்கள் காவிரிக் கரையோரமே

கர்நாடகத்திற்குச் சென்ற பெருவழியில் அமைந்திருந்தன என்று உறுதியாகக் கூறலாம்.[43] ஏழூர், தொழூர், திருச்செங்கோடு ஆகிய ஊர்கள் திருவரங்கத்திலிருந்து பிரிந்து வந்த பெருவழியில் அமைந்த ஊர்கள்.[44] மணிவாசகப் பெருமாள் பாடிய அவினாசி மொக்கனிசுரம் போன்ற ஊர்கள் கூட பெருவழியில் அமைந்த ஊர்களே.[45]

சமயக்குரவர்கள் பாடிய தலங்கள் அனைத்தும் பண்டைய கொங்கு நாட்டுப் பெருவழிகளில் நிலைபெற்ற ஊர்கள் என்பது மேலே காட்டிய சான்றுகளால் அறிய முடியும். தமிழகத்தின் கிழக்குப் பகுதியில் இருந்ததைப் போன்ற ஊர்ப் பெருக்கம் கொங்கு நாட்டில் இல்லையென்றே தோன்றுகிறது, பெருவழிகளில் இருந்த ஊர்கள் சிலவற்றில் மட்டும் சைவக் கோயில்கள் வழிபாட்டில் இருந்தன. கொங்கு நாட்டின் உள்பகுதிகளிலும் தூரப் பகுதிகளிலும் ஊர்கள் இருந்த நிலைபற்றியும், மக்கள் வாழ்க்கை பற்றியும் இலக்கியச் சான்றுகளோ, கல்வெட்டுச் சான்றுகளோ இல்லை. தேவாரப் பதிகங்களிலும், திருமுருகன் பூண்டி, வெஞ்சமாங்கூடல் போன்ற ஊர்ப் பதிகங்களில் மட்டுமே மக்கள் வாழ்க்கை ஓரளவு சுட்டப்படுகின்றன. அதனால் தேவாரக் காலத்திலும் மக்கள் வாழ்க்கை நிலையற்றதாகவும், நாடோடித் தன்மையுடையதாகவும் காட்சியளித்தது எனலாம்.

சமயக்குரவர்கள் வருகைக்குப்பின் கொங்குநாட்டில் சைவம் செல்வாக்குப் பெறத் தொடங்கியது. கி.பி. 10-ம் நூற்றாண்டில் இருந்து சோழர் ஆட்சி கொங்கு நாட்டில் நிலைபெற்றது.[46] பெறவும் கொங்கு சமுதாய வாழ்வில் பாரதூரமான மாற்றங்கள் நிகழ்ந்தன. சோழர் ஆட்சியில் ஊர்ப் பெருக்கம் மிகுதியாயிற்று. மக்கள் வாழ்க்கை நாடோடித் தன்மையிலிருந்து நிலைத்து வாழும் நிலைக்கு மாறியது, புத்தூர்கள் பல உருவாக்கப்பட்டன.[47] பண்டைகாலத்து மக்கள் இருப்பிடமான தொழுக்கள் மக்கள் வாழ்விடங்களாக மாற்றமடைந்தன. காரத்தொழு, முருங்கைத் தொழு, பெருந்தொழு போன்ற ஊர்கள் சோழகாலக் கல்வெட்டுக்கள் சுட்டும் ஊர்கள்.[48] பள்ளி என்று முடியும் ஊர்களும் கால்நடை வளர்ப்பிலிருந்து வேளாண்மை குடியிருப்புக்களாக மாற்றம் பெற்றன[49] சோழர் காலத்துக்குள் கொங்கு நாட்டில் நானூறுக்கும் அதிகமான ஊர்கள் சுட்டப்படுகின்றன.[50] தொடக்கத்தில் ஐம்பதுக்கும் குறைவான ஊர்களே சுட்டப்பட்டன.[51] இந்த வேறுபாட்டில் இருந்து சோழர்காலக் கொங்கில் ஊர்ப் பெருக்கம் ஏற்பட்டதையும் புரிந்து கொள்ள முடியும்.

பண்டைய சிறப்புடைய ஊர்களில் கோயில்கள் புதுப்பிக்கப்பட்டன.[52] புத்தூர்களில் புதுக்கோயில்கள் கட்டியெழுப்பப்பட்டன.[53] சமணசமயம் செல்வாக்கு இழந்த பின் பள்ளித்தலமனைத்தும் கோயில் ஆக்கப்பட்டன. ஆகையால் தென் கொங்கில் உள்ள சிவன் கோயில்களுக்குச் சமண லிங்கேசுவரர் அல்லது அமணலிங்கேசுவரர் என்ற பெயர் உண்டு.[54] இக்கோயில்கள் பண்டைநாளில் சமணர் பள்ளிகளாக இருந்தவை. சமணம் அழிந்த பின்பும் அச்சமயத்தில் 'ஒன்றன் உயிர் செகுத்துண்ணாமை' என்ற கோட்பாடு கொங்குச் சமய வாழ்வில் இடம் பெற்றது. கோயில்சட்டப்பட்ட போது அதன் புனிதத் தன்மை மிகுவதற்காகத் தலவரலாறுக்கும், மகாத்மியங்களும் படைக்கப்பட்டன.[55] அவ்வாறு எழுதப்பட்ட தலவரலாறுகளே தலபுராணங்கள் என்று அழைக்கப்பட்டன. (தலபுராணங்களை எழுதப் புகுந்தவர்கள் அத்தலத்திலுள்ள மரபு வழிக் கதைகள், நாடோடிக் கதைகள் போன்றவை தலபுராணத்தில் இடம் பெறலாயின) தேவாரப் பதிகங்கள் தலங்களுடன் சோழர் ஆட்சியில் கட்டப்பட்ட கோயில்களுக்கும் புனிதத் தன்மை கற்பிக்க எழுதப்பட்டதே சோழன் பூர்வ பட்டயம் என்ற நூலாகும்.

தமிழ் இலக்கிய மரபில் புராணங்களின் தோற்றம் பற்றிய ஆய்வு தொடக்க நிலையிலேயே உள்ளது. தமிழ்ப் புராண மரபு சங்க இலக்கியத்தில் தொடங்கப்பட்டது. சங்க இலக்கியங்கள் மனித வாழ்க்கையையும், இயற்கையையும் உள்ளது உள்ளவாறே குறிப்பிட்டாலும் பிற்சங்கப் பாடல்கள் புராண மரபினைத் தழுவியுள்ளன. கலி, பரி பாட்டுக்களில் மிகுந்து காணப்படுகின்றது. இந்நூல்களில் பயின்று வரும் கதைகள் வடமொழிப் புராண மரபினைக் கைக்கொண்டும் அமைந்திருக்கும் போக்கினைக் காணலாம். புறநானூற்றில் வெளிர் தோற்றம் பற்றி கபிலர் கூறும் புராதணக்கதை தென்னிந்தியாவிற்கே உரியது. தமிழ்க் காவியங்கள் வடமொழிக் கதைகளைத் தழுவியிருப்பினும் தமிழ்ப் புராணக் கதைகளும் அக்காவியங்களில் பயின்றுவரக் காணலாம்,

தமிழ்த்தல புராணங்கள் தமிழ்நாட்டிற்கே உரியவை. தலபுராணங்களுக்கு முன்னோடி தேவாரப் பதிகங்களே. தேவாரப் பதிகங்களில் பல நாடோடிக் கதைகளும், தல சரிதைகளும் பயின்று வரக் காணலாம். திருவானைக்காவில் யானைச் சிலந்தி கதை நாவுக்கரசர் பாடிய பதிகத்தில் குறிப்பிடப்படுகின்றது.[56] திருவெண்காட்டுப் பதிகத்தில் வெள்ளானை பூசித்த கதை பயின்று வருகின்றது.[57] இதுமட்டுமின்றி அட்டவீரட்ட கதைகளும் தமிழ்

நாட்டில் தலவரலாற்றின் அடிப்படையில் தோன்றியவை. தேவாரத்தில் பல வடமொழிக் கதைகள் பயன்படுத்தப்பட்டிருந் தாலும் தென்னிந்தியாவிற்கே உரிய நாடோடிக் கதைகளும், தலவரலாறுகளும் சுட்டப்படுகின்றன.[58] கி.பி. 13-ம் நூற்றாண் டிலிருந்து தலபுராணங்கள் தோன்றியதற்கே தேவாரப் பதிகங் களில் பயின்றுவரும் நாடோடிக் கதைகள், தலசரிதைகள், அவற்றைப் பற்றி ஆய்வு செய்வது தலபுராண ஆய்வுக்கு உதவியாக இருக்கும் என்பதில் ஐயமில்லை.

தமிழ்த் தலபுராணங்களைப் பற்றித் தமிழ் அறிஞர்களிடையில் வேறுபட்ட எண்ணமே மேலோங்கி நின்றது. புராணம் என்றாலே புளுகு என்ற கருத்து அறிவுலகில் நிலைத்து விட்டது. அதனால் புராணங்கள் பற்றிய ஆய்வு தொடங்கப்படவே இல்லை. தமிழ் இலக்கிய ஆய்வில் அறிவியல் பூர்வமான ஆய்வு நெறிகளைப் புகுத்திச் செழுமைப்படுத்திய பேராசிரியர் எஸ். வையாபுரிப் பிள்ளை அவர்கள் தமிழ்ப் புராணங்களைப் பற்றிக் கொண்டிருந்த கருத்து இது:

இக்கோயில்களிலே நித்திய நைமித்திய பூசைகளும், விழாக் களும் சிறப்பாக நடைபெற்றன. எனினும், இவற்றின் மகத்து வத்தை மிகுதிப்படுத்துவதற்கு இக் கோயில்கள் அமைந்துள்ள தலங்களைப் பற்றிப் புண்ணிய கதைகள் வேண்டும் அவசிய மிருந்தது. இதனால் ஸ்தல புராணங்கள் மிகுதியாய் தோன்றத் தொடங்கின. புராணங்களைக் கற்பார்க்கு இலக்கிய சுவை விளை யும்படி காவியங்களும் இவற்றில் இடம் பெற்றன. ஆனால் உண்மையான காவியவுணர்ச்சியை இவை அறவே நசித்து விட்டன, சிறிதும் நயமில்லாத கதைகள் இப்புராணங்களில் மீண்டும் மீண்டும் கூறப்பட்டன. பயனற்ற போலியலங்காரங்கள் இப்புராணங்களில் நிரம்பி அருவருப்பு மேலிடச் செய்தன. உண் மையான கவித்துவம் இருந்த இடம் தெரியாதபடி ஓடிவிட்டன. உயர்வரக் காவியங்களுக்கு முன்பு காரணமாயிருந்த சமயப்பற்று இப்பொழுது ஷீண தசையுற்று வெறுக்கத் தக்க போலிக் காவியங் களுக்கும் காரணமாகி விட்டது. இதனாலும் காவியம் ஒடுங்கு தசை அடைந்துவிட்டது''.[58]

பேராசிரியர் அவர்களின் கூற்றுக்கு மேலும் விளக்கம் தேவையில்லை. அவர் காலத்துத் தமிழ் ஆய்வுலகில் புராணங் களைப்பற்றி நிலவிவந்த கருத்தினை அவர் பிரதிபலிக்கிறார் எனலாம். ஆனால் அண்மைக் கால ஆய்வுகள் புராணங்களின்

முக்கியத்துவத்தை உணரச் செய்கின்றன[60]. புராணங்கள் சமூக வரலாற்றிற்குப் பயன்படும் விதமும், அவற்றில் தொல் பழங்கால வாழ்க்கை பொதிந்திருக்கும் தன்மையும் கண்டறியப்பட்டுள்ளன. அதனால் தமிழ்ப் புராணங்களைப் பற்றிய கருத்துக்களை மாற்றிக் கொள்ள வேண்டியவர்களாக இருக்கின்றோம்.

கொங்கு நாட்டுப் புராணங்களும், தலபுராணங்களும் தமிழ் மரபில் முகிழ்த்தவை. வடமொழிக் கதைகளையும், மரபுகளையும் பெரும்பாலும் பின்பற்றியிருப்பினும் உள்ளூர் வரலாற்றினை விளக்கவே அவை எழுதப்பட்டன என்பது வியந்து கூறத்தக்கது. தல மகாத்மியங்கள் தோன்றிய பின் கொங்கு நாட்டுத் தலங்கள் மீது புராணங்கள் யாக்கப்பட்டன.

கொங்குநாட்டுத் தலபுராணங்கள் முன்னூறுஆண்டு வரலாறு கொண்டன.[61] கி.பி. பதினேழாம் நூற்றாண்டிலிருந்து கொங்கு நாட்டுத் தல புராணங்கள் யாக்கப்பட்டன. பத்தொன்பதாம் நூற்றாண்டில் மிகுதியான தல புராணங்கள் எழுதிய போக்குக் காணப்பட்டது. இருப்பினும் தல புராணக் கூறுகள் ஞானசம் பந்தர், சுந்தர் தேவாரப் பதிகங்கள் பொதிந்து கிடப்பதைக் காணலாம். திருஞான சம்பந்தரின் பவானி பதிகத்தில் ஒரு புராணக்கதை சுட்டப்படுகிறது.

மன்னி ரிலங்கையர்தங் கோமான்
வலதொலைய விரலாலூ ன்றி
முந்நீர்க் கடல்நஞ்சை யுண்டார்க் கிடம்போ
லும் முனைசேர்சீயம்
அன்னீற்மை குன்றி யழலால் விழி
குறைய வழியுமுன்றிற்
செந்நீர்பரப்பச் சிறந்த கரி
யொளிக்குந் திருநணாவே[62],

இப்பாடலில் சிங்கத்திற்கும், யானைக்கும் இடையில் நடைபெற்ற சண்டையைப் பற்றிக் கூறப்படுவதைக் காணலாம். சிங்கம் யானைச் சண்டை பற்றி பின்னாளில் புராணக் கதைகள் எதுவும் கிடைக்கவில்லை. இதுபெரும்பாலும் தொல் பழங்காலத்திலிருந்து பவானியில் வழங்கப்பட்டு வந்த கதையாகலாம்.

அவினாசி என்றவுடன் நினைவுக்கு வருவது சுந்தரர் முதலையுண்ட பாலகனை மீட்ட கதை ஆகும். இந்தப் புராண வரலாறு பற்றிப் பதிகத்தில் அகச்சான்று ஏதுமில்லை என்று துரை அரங்கசாமி அவர்கள் கூறுவார்[63]. நூலில் அகச் சான்று ஏதுமில்லையானாலும் அவினாசியிலும், அவினாசியைச் சுற்றியுள்ள பண்டைய ஊர்களிலும் முதலைவாய்ப் பிள்ளை உருவங்கள் வடிக்கப்பட்டிருப்பதைக் காணலாம்[64]. ஆகையால் இக்கதை கொங்கு நாட்டில் செல்வாக்கு பெற்றிருந்தது என்று உறுதியாகக் கூறலாம்.

முதலைவாய்ப் பிள்ளைக் கதையை வேறொரு நோக்கில் பார்க்க வேண்டும். இக்கதை அவினாசிப் பகுதியில் வழங்கப்பட்ட கதையாகலாம் என்பர். தேவாரப் பதிகங்களில் தல வரலாறு பொதிந்து கிடக்கின்றது என்று கொள்ளலாம். கொங்கு நாட்டுத் தலங்கள் பற்றிய பதிகங்களிலும் அத்தகைய கதைகள் இருக்க வாய்ப்புண்டு. அவ்வாறு பதிகத்தில் கூறப்பட்ட முதலைவாய்ப் பிள்ளை கதையும் அவினாசிப் பகுதியில் வழங்கி வந்த கதையாகலாம். முதலை மனிதர்களைக் கவ்வும் புராணக் கதைகளைத் தொகுத்து அவினாசிக் கதையுடன் ஒப்பிட்டுப் பார்த்தால் உண்மை வரலாறு புலப்படும்[65].

கொங்கு நாட்டில் உள்ள தலங்கள் பற்றிய தல புராணங்கள் பல அச்சில் வரவில்லை. பல ஓலைச் சுவடியிலிருந்து பெயர்த்தெழுதப்படவில்லை. கொங்கேழ் சிவாலயங்களுக்குப் புராணங்கள் உள்ளன. அவை மட்டுமில்லாமல் பிற சிவாலயங்களுக்கும் தல புராணங்கள் எழுதப்பட்டுள்ளன. இவை மட்டுமின்றி சில சமூகத்தார் பற்றிய புராணங்களும் குறிப்பிடத்தக்கவை. குருகுல காவியம், பஞ்சவர்ண காவியம், வேளாளர் புராணம் போன்றவற்றைச் சான்றுக்குக் காட்டலாம்[66]. இவற்றில் வேளாளர் புராணம் மட்டும் பதிப்பிக்கப்பட்டுள்ளது. இவை மட்டுமில்லாமல் வீரதீரப் புருடர்களைப் பற்றிய கதைகளும் எழுதப்பட்டுள்ளன. கள்ளழகர் அம்மானை, அண்ணன்மார் சுவாமி கதை, அப்பச்சிமார் காவியம் போன்றவற்றைச் சான்று காட்டலாம். இவற்றில் அப்பச்சிமார் காவியம் பதிப்பிக்கப்பட வில்லை[67]. இக்காவியம் திங்களூர் அப்பச்சிமார் மடம் பற்றிய வரலாற்றினைக் கூறுகிறது. தனியொரு சமூகத்தினைப் பற்றியதாயினும், தலங்களைப் பற்றியதாயினும், ஊர்களைப் பற்றியும் அவற்றின் பண்டைய வரலாறு பற்றியும் பல செய்திகளைப் புராணங்கள் தம் முன் புதைத்து வைத்துள்ளன.

உண்மைக்குப் புறம்பான கற்பனைக் கதைகளும், கவிநய மற்ற பாடல்களும் நிறைந்து காணப்பட்டாலும் தல புராணங்களில் நாடோடி மரபுகளும், தல வரலாறுகளும் இடைக்கிடைக் கூறப்பட் டுள்ளன என்பது குறிப்பிடத்தக்கது. அவற்றைக் கண்டெடுப்பது கடினமான பணி. ஒரு வ்கையில் மலை கெல்லி எலி பிடித்த கதை மாதிரிதான். இருப்பினும் கொங்கு நாட்டு வரலாற்றினை ஆய்வு செய்ய முற்படும் ஒருவர் தல புராணங்களைப் பற்றிய போதிய ஞானம் இல்லையென்றால் இவ்வரலாற்றினை ஆய்ந்தறிவது கடினம். சான்றுக்கு தல புராணச் செய்திகளைப் பார்ப்போம்.

பேரூர் புராணத்தில் திருநீற்று மேட்டுப் படலம் என்றொரு படலம் பாடப்பட்டுள்ளது. இப்படலத்தில் திருநீற்று மேடு தோன் றியதற்குக் கூறப்படும் காரணம் எதுவாயினும் திருநீற்று மேடு புதிய கற்காலச் சாம்பல் மேடுகளை நினைவுறுத்துகிறது அல்லவா? வால சுந்தர கவிராயர் எழுதிய கொங்கு மண்டல சதகத்தில் சாம்பல் மேடு பற்றிய பாடல் ஒன்று வேள்வியால் இந்தச் சாம்பல் மேட்டுக் குவியல் தோன்றியதாகக் கூறுவர். சாம்பல் மேட்டிற்கு அவர் கூறும் காரணம் எதுவாக இருப்பினும் சாம்பல் மேடு பற்றி அவர் பாடுவ்தற்குக் காரணம் இருந்திருக்க வேண்டும். கொங்கு நாடு சங்க காலத்திற்கு முன்பிருந்து கால்நடை வளர்ப்பில் சிறப்புற்ற நாடு[68]. தக்கணத்தில் நடைபெற்ற சாம்பல் மேட்டு அகழ்வு புதிய கற்காலக் கால்நடை மேய்ப்பர்களைப் பற்றி அறிய உதவியது.[69] அத்தகைய அகழ்வாய்வு கொங்கு நாட்டில் நடை பெறவில்லை. ஆனாலும் தக்கணத்து சாம்பல் மேட்டு அகழ்வுச் சான்றுகளைக் கொங்கு நாட்டுச் சாம்பல் மேடுக்ளுக்கும் ஒப்பிட்டு பார்க்கலாம். கொங்கு நாட்டுச் சாம்பல் மேடுகள் கால்நடை மேய்ப்பர்கள் விட்டுச் சென்ற எச்சங்கள் ஆகலாம். சாம்பல் மேடு கள் கால்நடை மேய்ப்பர்கள் செய்த தீ மிதிச் சட்டங்களின் எச் சங்கள் என்று அகழ்வாய்வாளர்கள் சான்று காட்டி விளக்கியுள் ளனர்.[70] அந்த வகையில் கொங்கு நாட்டுச் சாம்பல் மேடுகளும் கால்நடை மேய்ப்பர்கள் விட்டுச் சென்ற எச்சங்கள் என்று யூகிக்க வாய்ப்புண்டு. கொங்கு மக்கள் வாழ்வில் தொல் பழங்காலம் வரலாற்றுக் காலம் முழுவதும் நீக்கமற நிறைந்து நின்ற சாம்பல் மேடு கொங்குத் தல புராணங்களில் முக்கிய இடத்தினைப் பெற் றுள்ளன. சாம்பல் மேட்டின் முக்கியதுவத்தினைப் புராண ஆசிரி யர்கள் அறிந்திருந்தனர் என்பது புராணங்களிலிருந்து அறியலாம்.

பேரூர்ப் புராணத்தில் பள்ளுப் படலம் என்றொரு படலம் இடம் பெற்றுள்ளது. இப்படலம் குறிப்பிடத்தக்க சிறப்புடையது.

இறைவனும், இறைவியும், பள்ளன், பள்ளியாகத் தோன்றி வேளாண்மை செய்தது பற்றிக் குறிப்பிடுகின்றது. வேளாண்மையில் பயின்று வரும் விதை விதைத்தல், நாற்று நடுதல், களை பறித்தல், அறுவடை செய்தல் போன்ற பல பணிகள் இப்படலத்தில் விரிவாகப் பேசப்படுகின்றது[71]. இப்படலம் கொங்கு நாட்டுச் சமுதாய வாழ்வில் பள்ளர்கள் பெற்றிருக்கும் பங்கினைச் சிறப்பித்துப் பேசுவதற்கு எழுதப்பட்டது என்று கருதலாம். மேலும் பள்ளர்கள் போற்றப்பட வேண்டும் என்ற மரபில் தோன்றியிருக்கலாம்.

அண்மைக்காலத்தில் தமிழ் ஆய்வுலகில் இடப் பெயராய்வு முக்கியத்துவம் பெறத் தொடங்கியுள்ளது. இடப் பெயர் ஆய்வு தமிழ் மொழி வரலாற்றிற்கு மட்டுமின்றி அரசியல், பொருளியல், சமூகவியல் வரலாற்றுக்குப் பல்லாற்றானும் பயன்படும் சிறப்புடையது. அந்த வகையில் தலங்களும், தலங்களைப் பற்றிய இலக்கியங்களும் முக்கியத்துவம் பெற்று வருகின்றன. இடப் பெயர்களுக்கு விளக்கம் கொடுக்க முற்பட்டவை தல புராணங்களே[72]. கொங்கு நாட்டுத் தலங்கள் பற்றிய செய்திகள் சங்க காலந் தொட்டுக் கிடைக்கின்றன. தலங்கள் பெரும்பாலும் சடங்கு செய்யும் இடங்களாக இருந்தன. கால கதியில் சமணர் தலங்களாகவும் சமணம் செல்வாக்கு இழந்தபின் சைவத் தலங்களாகவும் மாற்றம் பெற்றன. கொங்கில் வைணவத் தலங்கள் இருந்த போதிலும் அவை செல்வாக்குப் பெறவில்லை. சைவம் நாடோடி மரபுகளையும், பழங்குடி மரபுகளையும் தன்னுடன் இணைத்துக் கொள்வதில் மற்ற சமயங்களைக் காட்டிலும் முனைப்புக்காட்டியது. அதனால் சிவாலயங்களில் நாடோடிக் கதைகளைக் கூறும் சிற்பங்கள் இடம் பெற்றன. மேலும் அந்தந்த தலத்திற்கேயுரிய தல சரிதைகள் சிற்பத்திலும் கல்வெட்டுகளிலும் இடம் பெற வாய்ப்பேற்பட்டது. இதே கதைகள் பின்னாளில் எழுதப்பட்ட புராணக் கதைகளில் இடம் பெற்றன. கொங்கு நாட்டுத் தல புராணங்களைத் தொகுப்பதும், தொகுத்தவற்றைப் பெயர்த்தெழுதுவதும், பெயர்த்தெழுதியதை பதிப்பிப்பதும் அவசியம். அவை கொங்கு நாட்டுச் சமய வரலாற்றிற்கு மட்டுமின்றி சமுதாய வரலாற்றிற்கும் பயன்படும் சிறப்புடையவை.

**சான்றாதாரங்கள் :**

1. கோவைக்கிழார், கொங்கு நாட்டு வரலாறு,

M. Arokyaswami, The Kongu Country,
K. V. Subramaniya Iyar, Historical Sketches of Ancient Dekhar, Vol II

2. இரா. நாகசாமி, (பதிப்பாசிரியர்)
தருமபுரிக் கல்வெட்டுக்கள் முதல் தொகுதி முன்னுரை.

3. ஆறகழூர் (ஆத்தூர் வட்டம்) கல்வெட்டு, கோவை தொல்லியல் துறை கல்வெட்டுத் தொகுப்பு.

4. கார்மேகக் கவிஞர் எழுதிய கொங்கு மண்டல சதகம் என்ற நூலில், நாமக்கல் அதியேந்திர விஷ்ணுகிரகம், கொல்லிமலை அறப்பளீஸ்வரர் கோயில் போன்ற வற்றைப் பற்றிக் குறிப்பிடுகிறார்.

5. அகநானூறு, பாட்டு, 93,

வஞ்சி என்ற பெயர் 216, 226, .96 ஆகிய பாட்டுக்களில் பயன்று வரக் காணலாம்.

பதிற்றுப்பத்து பாட்டு, 67, 74.
அகநானூறு பாட்டு, 61.

6. கல்வெட்டியல்.

7. K. Rajan. A study of Megalithic types in Coimbatore Region. paper presented in the Seminar on "Archacology of Tamil Nadu and Kerala Accomplishments and prospects" held at Tamil University, Tanjore, June 10-12, 1984.

8 Ibid.

9. எ. சுப்பராயலு, தமிழ் நாட்டில் தொல்லியலின் எதிர் காலம், தொல்லியல் பேராசிரியர் கட்டில் சொற் பொழிவு, இக்கட்டுரையில் தேவ, லெஷ்னிக், நரசிம்மையா போன்றவர்கள் கருத்தினை மேற்கோள் காட்டியுள்ளார். ஆனால் பேராசிரியர் கருத்து வேறு.

10. கட்டுரை ஆசிரியர் ஆய்வில் கண்டுபிடித்தவை. இந்தியத் தொல்லியல் வருடாந்திர அறிக்கைகளிலிருந்து தொகுக்கப் பட்டவை.

11. எ. சுப்பராயலு முன் குறித்த சொற்பொழிவு.

12. மேலது.

13. கட்டுரை ஆசிரியர் நேரில் சென்று ஆய்வு செய்த இடங்கள்.

14. ஆவரஞ்செடி, பேய்க்கரும்பு, அரசமரம், மருதமரம் போன்றவற்றை வழிபடுவதை இன்றும் கொங்கு நாட்டில் காணலாம்.

15. திருமுருகாற்றுப்படை, வரிகள் : 263-66.

கொங்கு நாட்டுக் கிராமதேவதை வழிபாட்டில் தொல் பழங்காலத் தன்மை பொதிந்து நிற்பதைக் காண லாம். ஆண் தெய்வங்களின் கோயில்களுக்குப் பெண் கள் செல்ல அனுமதிக்கப் படுவதில்லை என்பது தொல் பழங்கால வழக்கம் ஆகும். இது வேட்டைச் சமூகத்தில் முகிழ்த்த வழிபாட்டு முறையாகும். வேட்டைச் சமூகத் திலும், கால்நடை வளர்ப்புச் சமூகத்திலும் ஆண்கள் ஆதிக்கம் மிக்கிருந்தது. அதனால் ஆண் தெய்வங்கள் அச்சமூகத்தில் செல்வாக்கு பெற்றன. பெண் தெய்வங் கள் அத்தகைய சிறப்பினைப் பெற்றிருக்கவில்லை. ஆனால் சில சடங்குகள் பெண்கள் மட்டும் பங்கு பெறும் நிலை உள்ளது. இது பெரும்பாலும் பெண் வழிச் சமுதாயத்தின் வழி வந்ததாகலாம். மலை உச்சி களிலும் பெருவழிகளிலும், ஆற்றங்கரைகளிலும் வழி பாட்டுச் சடங்குகள் செய்யப்பட்டன. பின்னாளில் பெருந்தெய்வ வழிபாடு இவ்விடங்களில் வேரூன்றிய போது சடங்குகள் பெருந்தெய்வ சமயத்துடன் இணைக் கப்பட்டன.

16. கல்வெட்டில்.

17. மேலது.

18. கட்டுரை ஆசிரியர் நேரில் சென்று கண்டறிந்தவை.

19. இக்கல்வெட்டு தமிழக அரசு தொல்லியல் துறையில் கண்டுபிடிக்கப்பட்டது. கல்வெட்டு வாசகம், 'பனைத் துறை வேசன் அதிட் அனம்' என்று உள்ளது.

20. செஞ்சிக்கருகில் உள்ள திருநாதர்குன்று என்ற இடத் தில் உள்ள கல்வெட்டில் ''ஐம்பத்தேழு அனசனம் நோற்ற சந்திரகந்தி நிசீதிகை'' என்று கூறப்படுகின் றது. இது முனிவர் இறந்தபின் வெட்டப்பட்ட கல் வெட்டு. படுக்கையும் உண்டு.

21. கட்டுரை ஆசிரியர் நேரில் சென்று ஆய்வு செய்தார்.

22. D. D. Kosambi, Myth and reality.
அந்நூலில் At Cross Road என்ற கட்டுரையைப் பார்க் கவும்.

23. மேலது.

24. மேலது.

25. மேலது.

26. தி. மனோன்மணி, கொழுமம் ஐவர்மலை ஆய்வேடு
தமிழ் நாடு தொல்பொருள் ஆய்வுத்துறை, 1977.

27. மு. இராகவையங்கார், சேரன் செங்குட்டுவன்.

28. கொழுமம் கோயில் கல்வெட்டு கட்டுரை ஆசிரியர் வசம் உள்ளது.

29. D. D. Kosombi, Op. cit. P.

30. கட்டுரை ஆசிரியர் கொல்லிமலை, பருகூர்மலை ஆகிய வற்றில் நேரில் சென்று ஆய்வு செய்து கண்டுபிடித்த இடங்கள்.

31. கட்டுரை ஆசிரியர் நேரில் சென்று பார்த்தார்.

32. திருஞானசம்பந்தர் இவ்வூர்கள் பற்றிய பதிகங்கள்.

33. இப்பாடலைக் கவிஞர் பாடினார் என்பது ஐயப்பாட் டிற்குரியது.

34. அன்னூர் ஸ்ரீ மன்னீஸ்வரர் கோயில் ஸ்ரீகசிவரதாாஜப் பெருமாள் கோயில் கும்பாபிஷேக விழா மலர், 1937,
Epiglaphia Indica, Vol XXX.

35. S. I. T. I, Vol I, No. 291.
திங்களூர், விஜயமங்கலம் ஆகிய ஊர்களில் உள்ள கல்வெட்டு கட்டுரையாசிரியர் வசம் உள்ளன.

36. S. I. T. I, Vol I, No. 291.

37. பாண்டியர் செப்பேடுகள், பக். 26, 52, 50, 126.

38. ஆர். பூங்குன்றன், சேலம், பக்கம் இல்லை.

39. மா. கணேசன் அவர்களுடன் நேர்முக உரையாடல்.

40. சுந்தரர் தேவாரம், திருமுருகன் பூண்டி, வெஞ்சமாங் கூடல் பதிகங்கள்.

41. சர்க்கார் பெரியபாளையம் கல்வெட்டு கட்டுரை ஆசிரியர் வசம் உள்ளது.

42.

43. கரூர், கொடுமுடி, ஈரோடு, பவானி, காவேரி புரம் வழியாகத் தலைக்காடு, மைசூர் ஆகிய ஊர்களுக்குச் சென்றடைந்தது.

44. திருவரங்கம் கல்வெட்டில் வஞ்சிப்பெருவழி என்றும், திருச்செங்கோடு செப்பேட்டில் தூசியூர்பெருவழி என்றும் சுட்டப்படுகின்றது.
S. I. I. Vol III.

45. மொக்னீஸ்வரம் சேவூர் அருகில் உள்ளது.

46. கொங்கு நாட்டில் அண்மைக் காலத்தில் கண்டுபிடிக் கப்பட்ட கல்வெட்டுக்கள் முதலில் ஆதித்தன் காலத்தில் பொறிக்கப்பட்ட இராசகேசரிப் பெருவழி கல்வெட்டு, ஆலத்தூரில் உள்ள கோநாட்டான் வீரசோழப் பெருமா னடிகள் என்று தொடங்கும் கல்வெட்டு போன்றவை சோழர் ஆட்சி கி. பி. 10-ம் நூற்றாண்டில் நிலை பெற்றதை வலியுறுத்துகிறது.

47. கோவன்புத்தூர், கவயன்புத்தூர், கண்ணாடிபுத்தூர், புத்தூர் ஆகிய பெயர்களைச் சோழர் காலக் கல்வெட்டுக் கள் சுட்டும். மேலும் பல புத்தூர்கள் தொகுக்கப்பட வேண்டும்.

48. காரத்தொழு, முருங்கைத் தொழு, ஆரத்தொழு ஆகிய ஊர்களில் உள்ள கல்வெட்டுக்கள் கட்டுரை ஆசிரியர் வசம் உள்ளது.

49. முத்துப் பழனியப்பன், வடபரிசாரநாட்டு தொல்லியல் பண்பாட்டுக்கழக கருத்தரங்கு, டிசம்பர், 1985.

50. K. S. Vaidynathan, The Ancient Geography of the Kongu Country.

51. Ibid.

52. பேரூர், அவினாசி, முருகன்பூண்டி, கரூர் போன்ற ஊர்களில் உள்ள கோயில்கள்.

53. இடிகரை, சேவூர், போன்ற ஊர்களில் உள்ள கோயில்கள்.

54. இந்து அறநிலையத்துறை கோயில் பட்டியில் (கோவை மாவட்டம்).

55. பேரூர், பவானி, பெருந்தலையூர், பாரியூர், கவயன் புத்தூர் போன்ற ஊர்களுக்குப் பாடப்பட்ட தல புராணங்கள்.

56. திருநாவுக்கரசர் தேவாரம், திருவானைக்கல் பதிகம்.

57. திருஞானசம்பந்தர் தேவாரம், திருவெங்காட்டுப் பதிகம்.

58. David Dean Shulman, Tamil Temple Myths, P.4

59. எஸ். வையாபுரிப் பிள்ளை, காவிய காலம், பக் 318-19.

60. David Dean Shulman, Op. cit.

61. கொங்கு நாட்டுத்தல புராணங்கள் முறையாகத் தொகுக்கப்பட்ட பின்னே தெளிவான கால வரையறை தரமுடியும்.

62. திருஞானசம்பந்தர் தேவாரம், திருநறை பதிகம்.

63. Durai Rangasami, Religon and philosophy Vol I, PP. 104 - 105.

64. சேவூர், அன்னூர், திருமுருகன்பூண்டி போன்ற ஊர்கள்.

65. அபிதான சிந்தாமணி, பக். 545.

66. வேளாளர்புராணம், வரலாற்றுச் செய்தி கொஞ்சமும் இல்லாத நூல். மற்றவை பதிப்பில்லை.

67. கட்டுரையாசிரியர் வசம் உள்ளது.

68. பதிற்றுப்பத்து, 66

69. F. R. Allchin. Neolithic Cattlekeepers of South India.

70. Ibid Appendix, Fire and Cattle Festivals in Europe.

71. பேரூர் புராணம், பள்ளுப்படலம்.

72. டாக்டர். கி. நாச்சிமுத்து, தமிழ்இடப்பெயராய்வு.

*எழுத்துரையாளர் முகவரி :*

ஆர். பூங்குன்றன், எம். ஏ, பதிவு அலுவலர்
தொல்பொருள் ஆய்வுத் துறை
17, சத்தியமூர்த்தி சாலை
ராம்நகர்
கோவை-9.



# 15. கொங்கு நாட்டு இதழ்கள்

வ. ஜெயா
பாரதியார் பல்கலைக் கழகம், கோயம்புத்தூர்

## 1. முன்னுரை

இன்றைய உலகில் நடக்கின்ற நிகழ்ச்சிகள் கண்டு பிடிப்புகள், அறிவியல் வளர்ச்சி, சமுதாய முன்னேற்றம் இவைகளை உடனுக்குடன் மக்களுக்கு எடுத்துச் சொல்பவை இதழ்களாகும். உலகின் எந்த மூலையில் ஒரு சிறு சம்பவம் நடந்தாலும் அதனை மக்களுக்கு அறிவிப்பவை இதழ்களாகும். நாளேடுகளிலும், சஞ்சிகைகளிலும் மனித சமூகத்தின் நடவடிக்கைகள் பற்றிய பலதரப்பட்ட அம்சங்கள் குறித்த கருத்துக்களும் செய்திகளும் வெளியிடுவது பத்திரிக்கைத் துறையாகும். கொங்கு நாட்டில் வெளியாகும் சில இதழ்களைப் பற்றி-குறிப்பாக அவற்றின் அமைப்பு, பண்பாடு ஆகியவற்றை ஆய்வதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

1. அறிவியல் (கலைக்கதிர், விஞ்ஞானச்சுடர்)
2. இலக்கியம் (வளரும் தமிழ், குறளியம்)
3. சமூகம்/பொது (மேம்பாலம், ஜனரஞ்சனி, சக்தி செய்தி மடல்)

என்ற மூன்று பிரிவுகளால் அமைந்து கொங்கு நாட்டுப் பகுதியிலிருந்து வெளிவரும் இதழ்கள் மட்டுமே ஈண்டு ஆய்விற்கு எடுத்துக் கொள்ளப்பட்டுள்ளன.

## 2. அறிவியல் இதழ்களின் தோற்றம்

1948 ஆம் ஆண்டு டிசம்பர் மாதம் திரு. ஜி. ஆர். தாமோதரன் அவர்களால் கலைக்கதிர் இதழ் தொடங்கப்பட்டது. அறிவியல் கருத்துக்களை மக்களிடையே பரவச் செய்ய வேண்டும் என்ற நோக்கத்திற்காக இவ்விதழ் தொடங்கப்பட்டுள்ளது குறிப்பிடத் தக்கது.

கலைக்கதிர் போன்றே விஞ்ஞானச் சுடரும் அறிவியலுக் கென்று தொடங்கப்பட்ட ஓர் இதழாகும். 1974-ஆம் ஆண்டு திரு. அவினாசிலிங்கம் மனையியற் கல்லூரி ஆசிரியர் குழுவினரால் இவ்விதழ் தொடங்கப்பட்டது. இதில் அக்கல்லூரியில் பணியாற் றும் ஆசிரியர்களும், மருத்துவர்களும் மக்கள் பயன் பெறும் வகையில் அறிவியல் கட்டுரைகளை எழுதி வருகின்றனர். கலைக் கதிர், விஞ்ஞானச்சுடர் இரண்டும் அறிவியல் கருத்துக்களை மக்க ளிடையே பரப்புவதற்குப் பெரிதும் பயன்பட்டு வருகின்றன என் றால் அது மிகையாகாது.

## 3. இதழ் வளர்ச்சி

கலைக்கதிர் முதன் முதலில் தொடங்கப்பட்டபோது அறி வியல் கருத்துக்கள் மட்டுமின்றி இலக்கியம் தொடர்பான சில கட்டுரைகளும் அதில் வெளி வந்தன. இலக்கியம், சிறுகதை, நாடகம், தொடர்கதை, கவிதை போன்றவையும் அறிவியல் செய்திகளுடன் வெளியிடப்பட்டன. முதன் முதலில் அறிவியல் துறையைச் சார்ந்தோரும், மு. வரதராசனார், தெ. பொ. மீனாட்சி சுந்தரனார், தா. ஏ. ஞானமூர்த்தி போன்ற மொழி மற்றும் இலக்கிய அறிஞர்களும் தங்கள் ஆய்வுகளையும் கருத்தோவியங் களையும் இவ்விதழில் எழுதி வந்துள்ளனர். இவ்விதழ் தொடங்கப் பட்ட போது படித்தவர்களிடையே இதற்கு நல்லவிதமாக வர வேற்பு இருந்தது. இலக்கியக் கட்டுரைகள் இதில் வெளி வந்த தினால் தமிழாசிரியர்களிடம் இதற்கு நல்ல வரவேற்பு இருந்தது. தமிழர் அதிக அளவில் வாழும் சிங்கப்பூர், மலேசியா, இலங்கை போன்ற வெளிநாடுகளுக்கும் இவ்விதழ் அனுப்பப்பட்டு வந்தது. தமிழ் நாடு அரசும் இவ்விதழை வாங்கி ஊக்குவித்தது. 1969 ஆம் ஆண்டுக்குப் பின் இலக்கியக்கட்டுரைகள் ஏதுமில்லாமல் அறிவியல் கருத்துக்களைத் தாங்கிய கட்டுரைகளும், செய்திகளும் கலைக்கதிரால் வெளியிடப்பட்டுள்ளன.

விஞ்ஞானச் சுடர் ஆரம்பித்த போது என்னென்ன செய்தி களை வெளியிட்டு வந்ததோ அது போலவே இன்றும் செய்திகள் வெளியிடப்பட்டு வருகின்றன. இதில் கவிதை, இலக்கியக் கட்டு ரைகள் எதுவும் இடம் பெறுவதில்லை. இலக்கியங்களில் காணப் படும் அறிவியல் செய்திகள் மட்டும் அவ்வப்போது தொகுத்து வெளியிடப்படுகின்றன.

## 4. பொருளமைப்பு

தொடக்க காலத்தில் கலைக்கதிரில் அறிவியல் கட்டுரைகள் துணுக்குகள், செய்திகள் போன்றவை ஒரு பெரும் பிரிவாகவும், இலக்கியக்கட்டுரைகள், கதைகள் போன்றவை சிறு பிரிவாகவும் வெளிடப்பட்டு வந்தன. இலக்கியக்கட்டுரைகள் தமிழ் மூதறிஞர் களால் எழுதப்பட்டன. வாழ்வு நெறிகளை மக்களுக்குப் புகட்டக் கூடிய இலக்கியக் கட்டுரைகள் தெளிந்த தமிழ் நடையில் எழுதப் பட்டன. அறிவியல் பகுதியில் பல்வேறு அறிவியல் துறைகள் தொடர்பான கட்டுரைகள் எளிதில் விளங்கிக் கொள்ளும் வகையில் படங்கள் வருணனை, அட்டவணை, குறிப்புகள் போன்றவற்று டன் வெளியிடப்பட்டு வந்தன. இருபது ஆண்டுகளுக்குப் பின் இதன் பொருளமைப்பில் ஓரளவு மாற்றம் ஏற்படுத்தப்பட்டது. அறிவியல் செய்திகளுக்கென்று வெளிவந்த இவ்விதழில் அச்செய்தி களோடு அறிவியல் அறிஞர்களின் வாழ்க்கை வரலாறுகள் போன்ற வையும் வெளியிடப்படலாயின.

### 4.1 அறிவியல் கட்டுரைகள்

மக்கள் யாவரும் அறிவியல் செய்திகளை எளிதில் அறிந்து கொள்வதற்காக ஏற்படுத்தப்பட்ட இவ்விதழில் அனைவரும் தெரிந்து கொள்ள வேண்டிய ஆராய்ச்சிக்குகந்த பல புதிய அறிவியல் செய்திகள் தொடர்ந்து வெளியிடப்படுகின்றன.

''செவ்வாய் மண்டலத்தில் ஹைட்ரஜனும், ஹீலியமும் கண்டிப்பாய் கிடையாது''என்றும், ''தாவரத்தின் பசுமையான பாகங்களில் காணப்படும் உயிரணுக்களிலெல்லாம் பச்சையம் (Chlorophyle) என்ற பொருள் காணப்படுகிறது. பச்சையம் சிறுசிறு உருண்டைகளாக அமைந்துள்ளது''என்றும் பல அறிவியல் செய்திகள் இக்கட்டுரைகளின் வாயிலாக வெளியிடப்பட்டுள்ளன.

ஒளிமின்கலம் எவ்வாறு செயல்படுகிறது என்ற விளக்கத் தினையும் இவ்விதழில் இடம்பெற்றுள்ள கட்டுரையொன்று விவரிக்கிறது.

(எ. கா.)

''ஒளியின் ஸெல் அல்லது ஒளியின் குழாயில் உற்பத்தி யாகும் எலக்ட்ரான்களைப் பெருக்குவதற்கு மற்றொரு ஸெல் அல்லது துணைக் குழாய் அமைக்கப்பட்டிருக்கும். இத்துணைக்

குழாய் பெருக்கி (amplifier) எனப்படும்''. இது போன்ற அறிவியல் செய்திகள் அறிவியலைப்படிக்கின்ற மாணவர்களுக்கு/மக்களுக்கு எளிதில் புரிந்து கொள்ளும் வகையில் அமைந்துள்ளதைப் பார்க்க லாம்.

## 4.2 அறிவியல் அறிஞர்களின் வரலாறு

அறிவியல் செய்திகளை / கருத்துக்களை / கண்டுபிடிப்புக் களை மட்டும் தருவதோடு நின்றுவிடாமல் அவற்றை எடுத்துச் சொன்ன அல்லது கண்டிபிடித்த அறிஞர்களின் வரலாறுகளையும் இவ்விதழ் வெளியிடுகிறது. இதனால் அறிவியல் அறிஞர்களின் பெயர்களை அறிந்து கொள்ள முடிவதோடு அவர்களின் இடை விடா முயற்சியும் ஆர்வமும் இதன்மூலம் வெளியாகி மற்றவரை ஊக்கப்படுத்தும் வகையில் அமைந்துவிடுவதைக் காண்கிறோம். அதாவது, இவற்றைப் படிக்கின்ற ஒவ்வொரு வாசகருக்கும் தானும் அப்படி ஏதாவது புதிதாக ஒன்றைக் கண்டுபிடிக்க வேண்டும் / செய்யவேண்டும் என்ற ஆர்வம் ஏற்படுமாறு செய் கிறது. மேலும், நம்மாலும் அத்தகைய செயலைச் செய்யமுடியும் என்ற தன்னம்பிக்கை அவர்களிடையே ஏற்பட வழி வகுக்கின்றது.

கலிலியோ. கிரகாம்பெல், சர். சி. வி. இராமன், மேரிக்யூரி போன்ற அறஞர்களின் வரலாற்றுச் செய்திகளும் இவ்விதழில் இடம் பெற்றுள்ளன. இளைஞர்களிடையே ஆர்வத்தைத் தூண்டி அவர் களது பயனுள்ள ஆற்றல் வெளிப்பட ஊக்கத்தினையும், ஆக்கத் தினையும் ஊட்டும் வகையில் இவை அமைந்திருக்கக் காண்கி றோம்.

### 4.2.1. அறிவியல் கண்டுபிடிப்புகள்

இன்று புதிதாக கண்டு பிடிக்கப்பட்ட செய்திகளையும் உடனுக்குடன் மக்கள் அறிந்துகொள்ளும் வகையில் இவ்விதழ் வெளியிடுகின்றது. வீட்டு வேலைகளை எளிதாகச் செய்யக்கூடிய இயந்திரமனிதன் (Robots) புதிதாகக் கண்டுபிடிக்கப்பட்டதாகும். இதன் பயனையும் அதன் தன்மையையும் கூறுவது அறிவியல் கண்டுபிடிப்புக்களாகும்.

எ. கா.

''குழந்தைகளுக்குப் பாடம் சொல்லிக் கொடுக்கவும், மொழி யைக் கற்றுக் கொடுக்கவும், இரவில் வீட்டைக் காக்கவும், காலை யில் நம்மை துயிலெழுப்பவும் இவை உதவும் ''

செயற்கை இதயம், செயற்கை கால், கை இவற்றின் பயன் அதனைப் பொருத்தும் முறை இவைகள் பற்றிய முழுமையான செய்திகள் அனைத்தும் இவ்விதழில் வருகின்றன.

விஞ்ஞானச் சுடர் இதழில் அன்றாட வாழ்வில் நமக்குத் தேவையான சில பொருட்களின் இன்றியமையாமை, அதனால் பெறும் பயன் போன்ற அறிவியல் கருத்துக்கள் மக்கள் பயனுறும் வகையில் எடுத்துச் சொல்லப்படுகின்றன.

எ. கா.

''நாள்தோறும் வாழை இலையில் சாப்பிட்டால் கண்பார்வை தெளிவுடன் இருக்கும்''.

'' கருவேப்பிலையை வதக்கித் துவையல் செய்து சாப்பிட்டால் கண்களுக்கு நல்லது. தேங்காயெண்ணையில் காய்த்து தலைக்குத் தேய்த்தால் முடி கருகருவென்று வளரும் ''.

மனிதனின் உடலில் செய்தியை உடனுக்குடன் தெரிவிப்பதற்கு ஹார்மோன்கள் உதவுவது போல் விலங்குகளின் செய்தியைத் தெரிவிப்பதற்கு வேதியில் பொருட்கள் நமக்கு மிகவும் பயன்படுகின்றன.''

அன்றாட வாழ்க்கைக்குத் தேவையான சில முக்கிய செய்திகளை விஞ்ஞானச்சுடர் இதழ் தருகின்றது. இவை தவிர இலக்கியங்களில் காணப்படும் சில அறிவியல் செய்திகளையும் திரட்டித் தருகின்றது.

எ. கா.

''முன் காலத்தில் வின்மீன்களைத் (நட்சத்திரங்களை) திசை காட்டும் கருவியாகப் பயன்படுத்தி தங்களது பயணங்களை மேற்கொண்டனர் அக்கால மக்கள். ஒவ்வொரு விண்மீனுக்கும் ஒவ்வொரு பெயர் உண்டு''. அதனைத் தெளிவாகவும், எளிமையாகவும் புரிந்துகொள்ளும் வகையிலும் இவ்விதழ் செய்திகளை வெளியிட்டுள்ளது குறிப்பிடத்தக்கது.

## 4.3 பிற செய்திகள்

பிற செய்திகள் என்பனவற்றுள்ளும் அறிவியல் செய்திகளே அதிகமாகக் காணப்படுகின்றன. அறிவியல் துணுக்குகள் வினா — விடை, சமையல் குறிப்புகள், மருத்துவ முறைகள், நோய் பற்றிய

செய்திகள், அறிவுப் புதிர்கள், உலகச் செய்திகள் போன்றவை யாவும் அறிவியல் கருத்துக்களை மையமாகக் கொண்டே வெளியிடப்பட்டுள்ளன — வெளியிடப்பட்டும் வருகின்றன.

## 4.3.1 உலகச் செய்திகள்

உலகில் நடைபெறும் செய்திகளையும், உலக விலங்குகள் பற்றியும், உலக அளவில் பிற செய்திகளையும் திரட்டித் தருவதில் இவ்விதழ்கள் சிறப்பிடம் பெறுகின்றன. இதன் மூலம் எந்தெந்த நாடுகளில் எந்தெந்த விலங்குகள் வாழ்கின்றன, என்னென்ன பொருட்கள் கிடைக்கின்றன, அவற்றின் சிறப்பியல்புகள் என்னென்ன? என்பனவற்றையெல்லாம் நம்மால் அறிந்து கொள்ள முடிகிறது.

எ. கா.

''நீர் மயில் ஓர் இயற்கையின் விந்தை. நிலத்தின்கண் காணப்படும் மயில் அல்ல. ஒரு வகைப் புளு இனத்தைச் சார்ந்தவை. தங்களுடைய தோகைகளை விரித்துக் கர்வத்துடன் நீருக்குள் செல்கின்றன. தோகைகள் பல அழகிய நிறங்களை உடையது.''

இதுபோன்ற விநோதமான விலங்குகளையும் இவ்விதழ்கள் நமக்கு அறிமுகப்படுத்துகின்றன. ஏனெனில் நீர் மயில் போன்ற விலங்கு இருக்கின்றது என்பது நமக்குத் தெரியாது. ஆனால் இவ்விதழ் மூலம் அப்படி ஒரு விலங்கு உள்ளது என்பதனை அறிந்து கொள்ள முடிகிறது. இச் செய்திகள் ஏதேனும் ஒரு வகையில் அறிவியல் கருத்துக்களைச் சமுசாயத்தின் நன்மைக்காக வெளியிடப்படுபவையேயாகும்.

## 4.3.2 அறிவுப்புதிர்கள்

அறிவுப்புதிர்கள் மூலம் மக்களைச் சிந்திக்க வைக்க முடியும். மக்களுக்குப் பழக்கமான பொருட்களும் நினைவிற்கு வருகின்றன. அதனால் அப்பொருளின் பயனை மக்கள் அறிந்துகொள்ள இவை உதவுகின்றன.

எ. கா.

''நாட்டு வைத்தியத்தில் வெகுவாகப் பயன்படும் மாசக்காய் (அ) ஓக் (ஆ) தேவதாரு (இ) செடர் எனும் குளிர்ப்பிரதேசத்தில் வளரும் மரக் காயாகும்''

இது மனிதனின் சிந்தனையைத் தூண்டும் பகுதியாகும். மேலும் நம் வாழ்க்கையில் அன்றாட நிகழ்ச்சிக்குத் தேவையான பொருட்களின் பயனை அறிந்து கொள்ள இது உதவுகின்றது இதன் மூலம் சமுதாயத்திற்குத் தேவையான சில நன்மைகள் ஏற்பட வாய்ப்பு ஏற்படுகிறது.

### *4.3.3 வினா - விடை*

அறிவுப் புதிர்கள் போலவே வினா-விடைப் பகுதியும் அமைந்துள்ளது.

(எ.கா.)

புற்று நோயைக் குணப்படுத்த உதவும் ஐசோடோப்பு.

விடை : (a) கோபால்ட்-60 (b) இருடியம்-192 (c) பெரிலியம்-9

வினா - இவற்றில் சுரப்பி எது?

விடை ; (a) சிறுநீரகம் (b) கல்லீரல் (c) கணையம்

என்பன போன்ற வினா-விடை அமைப்பு மக்களின் சிந்தனையைத் தூண்ட வல்லமையாகும்.

### *4.3.4 அறிவியல் துணுக்குகள் :*

அறிவியல் துணுக்குகள் சிறு சிறு துணுக்குகளாக வெளியிடப் படுகின்றன. இவை உண்மையினை அப்படியே எடுத்துச் சொல்லுபவை. மேலும் சுருங்கச் சொல்லி விளங்க வைக்கும் உத்தியின் அடிப்படையில் இத்துணுக்குகள் விளக்கப்பட்டுள்ளது குறிப்பிடத் தக்கதாகும்.

(எ.கா.)

''உடலில் இரத்த அணு, தோல்செல், கல்லீரல் திசு, இவற்றில் எது அழிந்தாலும் உடனே இன்னொன்று உருவாகி விடும். ஆனால் மூளையில் ஒரு செல் அல்லது நியுட்ரான் அழிந்தாலும் அவ்வளவுதான். வேறு ஒன்று ஒரு போதும் உருவாகாது.''

''ஒரே ஒரு பட்டுப் பூச்சியின் கூட்டிலிருந்து சுமார் 3000 கெஜ நீளமுள்ள பட்டு நூலை எடுக்கமுடியும்.''

என்பன போன்ற அறிவியல் துணுக்குகள் மக்கள் செய்திகளை மக்கள் ஓரளவு அறிந்து கொள்ளும் வகையில் அமைந்துள்ளன எனலாம்.

## 4.3.5 நோய்கள்-அவற்றிற்கான மருத்துவ முறைகள்

''நோயற்ற வாழ்வே குறைவற்ற செல்வம்'' என்ற முதுமொழிக்கு ஏற்ப மனிதன் நோயின்றி வாழ இவ்விதழ்கள் வழி காட்டுவனவாக அமைந்துள்ளன. நோய்கள் எவ்வாறு பரவுகின்றன அதற்கான நிவாரணம் என்ன என்பன போன்ற பயன் தரும் அறிவியல் கருத்துக்களை நன்கு விளக்கும் வகையில் செய்திகளும் கட்டுரைகளும் இவ்விதழ்களில் இடம் பெற்றுள்ளன. அறிவியல் முன்னேற்றத்தினால் இரத்தக் கொதிப்பு, நீரிழிவு நோய், புற்று நோய் போன்ற நோய்களுக்குத் தகுந்த மருத்துவ வசதிகள் தற்போது ஆங்காங்கே ஏற்பட்டு வருகின்றன. இவை பற்றிய கருத்துக்களை, செய்திகளை மக்கள் அறிந்து கொள்ள ஏதுவாக சில கட்டுரைகள், குறிப்புக்கள் இவ்விதழ்களில் எளிமைப்படுத்தி வெளியிடப்பட்டு வருகின்றன.

மார்பு வலி தோன்றும் போது ஏற்படும் மாற்றங்கள் பற்றிக் குறிப்பிடும் போது ''இதயத்திற்குச் செல்லக் கூடிய இரத்த ஓட்டத்தை தடை செய்யக் கூடிய நிலைகள் எல்லாம் மார்பு வலியை (Angina Pectouis) உண்டாக்கும். அதற்கு முக்கியக் காரணம் இதயத் தமனிகளின் ''தமனி நாளச் சுருக்கம்'' (Atherosclerosis) தான் என மருத்துவ உலகம் கண்டறிந்துள்ளது. இந்த நிலையில் தமனிகளால் கொலஸ்டிரால் என்ற கொழுப்புச் சத்து படிந்து முக்கியமாக இதயத் தமனியின் சுற்றளவினைக் குறைத்து இதய இரத்த ஓட்டத்தைத் தடை செய்கிறது. இதன் விளைவாக மார்பு வலி தோன்றுகிறது'' என்று விளக்கம் தரப்படுகிறது.

மது அருந்துவதினால் ஏற்படும் தொல்லைகள் பற்றிய கட்டுரைகளும் இடம் பெற்றுள்ளன. ''நாட்பட்ட நிலையில் குடிகாரர்களுக்கு கல்லீரல் வீங்கி அழற்சி ஏற்படும் 'சிரோசிஸ்' என்று கூறப்படும் கல்லீரல் நாரதல் நோய் உண்டாகும்'' என்று மதுவின் தீமையினை எடுத்துரைக்கின்றன இவ்விதழ்கள். இது ஒரு நல்ல சமுதாயப் பணியாகும்.

'எய்ட்ஸ் நோய்க்கு சித்த மருத்துவம்' என்ற கட்டுரையில் எய்ட்ஸ் நோய் பற்றியும். அதனால் உடல் எவ்வாறு பாதிக்கப் படுகின்றது என்பது பற்றியும், அதனைக் கட்டுப்படுத்த சித்த

மருந்துகள் எவ்வாறு உதவுகின்றன என்பன போன்ற மருத்துவக் குறிப்புகளையும் கொடுக்கிறது இவ்விதழ். அண்மைக்கால கண்டு பிடிப்புக்களோடு பாதிப்புக்களையும் இவ்விதழ் எடுத்துக் காட்டு வதன் மூலமும் இதன் சமுதாயப் பணி அமைந்துள்ளது குறிப் பிடத்தக்கதாகும்.

### 4.3.6 தொழில் துணுக்குகள்

இத் துணுக்குகள் மூலம் ஒவ்வொரு தனிமனிதனும், குழு வினரும் சிறு தொழில் செய்வதற்கு வழிவகைகள் எடுத்துச் சொல் லப்படுகின்றன. இவற்றை எப்படிச் செய்வது, எவ்வளவு சேர்த் தால் பயன் கிட்டும் என்பன போன்ற செயல் முறைகள் எல்லாம் இதில் விளக்கப்படுகின்றன

(எ.கா.)

விம் பவுடர் தயாரித்தல் பற்றி :

| | | |
|---|---|---|
| சோப் பவுடர் | 2 | இராத்தல் |
| சோடா ஆவி | 3 | இராத்தல் |
| ட்ரிசோடியம் பாஸ்போட் | 40 | இராத்தல் |
| சிலிகாபவுடர் | 55 | இராத்தல் |

இதனைச் சேர்க்கும் போது விம் பவுடர் கிடைக்கின்றது. இது வீடுகளில் பாத்திரங்கள், தரை ஆகியவற்றைச் சுத்தம் செய்ய மிகுதியாகப் பயன்படு மாவாகும். இதன் மூலம் சிறு தொழில் பெருக வாய்ப்பேற்படுகிறது. சிறு தொழில் வளர்ச்சிக்கும் அதன் மூலம் பெறப்படும் பொருள்களின் பயன்பாடு அனைவருக்கும் தெளிவாவதற்கும் இச் செய்திகள் உதவுகின்றன.

### 4.3.7 சமையல் குறிப்புகள் : பெண்கள் அறிந்து கொள்ள வேண்டியவை

இது போன்ற குறிப்புகளைப் பெண்கள் படிக்கும் போது அவர்கள் சமையல் பற்றிய சில புதுச் செய்திகளை அறிந்து கொள்ள வாய்ப்பேற்படுகிறது.

(எ.கா.)

நிலக்கடலைப் பருப்பை வறுக்கும் முறை

''மிதமான வெப்பத்தில் வறுப்பதுதான் சிறந்தது விரை வானதுமாகும். அதிக வெப்பத்தில் வறுக்கும் போது அதன் மேல்

தோல் கருகிவிடும். இதனால் அதன் சுவையும் கெட்டுவிடும் மிதமான வெப்பத்தில் வறுக்கும் போது கருகாது. அதன் உட்பகுதி விரைவில் வறுபடாது. ஆகையால் தான் நம்மூர் வணிகர்கள் மணலுடன் கலந்து வறுக்கிறார்கள் என்பன போன்ற செய்திகள் மக்கள் அறிந்து கொள்ளும் வகையில் வெளியிடப்பட்டுள்ளன.

### 4. 3. 8 குழந்தை வளர்ப்பு

பெண்களுக்குத் மிகத் தேவையான ஒரு பயிற்சி குழந்தை வளர்ப்பாகும். குழந்தைகளுக்கு என்னென்ன தேவை, அவற்றை எப்படிக் கொடுக்க வேண்டும், உடலை எப்படிப் பேண வேண்டும் என்பன போன்ற மருத்துவக் குறிப்புகளும் இதில் காணப் படுகின்றன.

(எ. கா.)

''குழந்தைகளிடம் அன்பாக இருக்க வேண்டும். குழந்தை அன்பை உணரும் வகையில் நடக்க வேண்டும். குழந்தைகளின் குறைகளை அவர்களுக்கு எது இயலும், எது இயலாது என்ற விவரத்தை நன்கு அறிய வேண்டும். குழந்தைகளின் உள்ள வளர்ச்சிக்கு அவர்கள் மனத்தில் தன்னம்பிக்கையை ஏற்படுத்து வது நலம்''. புதினாக்கீரை, கருவேப்பிலை இவற்றின் பயன் களையும் இவ்விதழ்கள் வெளியிடுகின்றன. பெண்கள் இவற்றை அறிந்து கொண்டு குறைந்த செலவில் சத்துள்ள உணவுப் பொருட் களைத் தயாரிக்கவும் குடும்ப நலம் பேணவும் முடியும்.

### 4.3.9 கலைக்கதிர், விஞ்ஞானச்சுடர் இதழ் கருத்துக்கள்: ஒற்றுமை - வேற்றுமை

அறிவியல் கருத்துக்களை மக்களுக்கு அறிவிக்க வேண்டும் என்ற நோக்கத்தில் எழுந்ததே கலைக்கதிர். ஆரம்பத்தில் கவிதை, கட்டுரை, நாடகம், தொடர்கதை, சிறுகதை போன்ற இலக்கியக் கட்டுரைகளும் அறிவியல் செய்திகளுடன் கலந்து இவ்விதழ் வெளி வந்தது. இருபது ஆண்டுகளுக்குப்பின் அறிவியல் செய்திகள் மட்டுமே இதில் இடம்பெற்று வெளிவருகின்றன. உலகில் நடை பெறும் அறிவியல் கண்டுபிடிப்புகள், அறிவியல் சாதனைகள், மருத்துவ முறைகள் யாவற்றையும் மக்களுக்கு உடனுக்குடன் இவ்விதழ் வெளியிடுகின்றது. புதிதாக எந்த அறிவியல் சாதனங் களைக் கண்டுபிடித்தாலும் அவை உடனே மக்கள் அறிந்து கொள் வதற்கு இவ்விதழ் துணை செய்கின்றது. அது தவிர உலகத்தில்

காணப்படும் வினோத விலங்குகள் பற்றியும் அறிய உதவுகின்றன. அறிவியல் அறிஞர்களின் வரலாறுகள், விண்வெளி ஆராய்ச்சி போன்ற பயன்தரக்கூடிய செய்திகள் இவ்விதழில் வெளிவரு கின்றன. மனிதர்களுக்கு ஏற்படும் நோய்கள் பற்றியும் அவை பரவுவதற்கான முறை பற்றியும், தீர்க்க வேண்டிய நிவாரண பயிற்சியையும் அறிவியல் கருத்துக்களாக இவ்விதழ் வெளியிடு கின்றது. மேலும் சிறு தொழில் பெருகக்கூடிய அளவில் தொழில் துணுக்குகளும் அவ்வப்போது இவ்விதழில் இடம் பெறுகின்றன. மனிதனின் அன்றாடத் தேவைகளுக்குப் பயன்படும் அறிவியல் கருத்துக்களையும் பெண்கள் அறிந்து கொள்ளக்கூடிய சமையல் குறிப்புகளையும் இவ்விதழ் தாங்கி வருகின்றது. இவ்விதழைப் படிக்கின்ற மக்களின் சிந்தனையைத் தூண்டும் வகையில் பல அறிவுப்புதிர்கள் இடம் பெற்று வருகின்றன.

விஞ்ஞானச்சுடர் என்ற இதழ் பெரும்பாலும் பெண்கள் முன்னேற்றத்திற்காக ஏற்படுத்தப்பட்டதே எனலாம். குடும்பங் களை நிர்வகிக்கும் பெண்களுக்குப் பயன்படக்கூடிய அறிவியல் கருத்துக்கள் அதிகமாக இடம்பெறுகின்றன. குழந்தை வளர்ப்பு. கோழி வளர்ப்பு, மீன்வளர்ப்பு போன்ற செய்திகளும் ஏராளமாக இவ்விதழில் வெளிவருகின்றன. நோய்பற்றிய செய்திகளும், அதனைத் தீர்க்கும் மருத்துவ முறைகளும் இதில் இடம்பெறு கின்றன. அன்றாட வாழ்க்கைக்கு உதவும் எளிய அறிவியல் கருத்துக்கள் அதிகம் காணப்படுகின்றன. மக்களைச் சிந்திக்கத் தூண்டும் வினா-விடை அமைப்பு காணப்படுகின்றது. சுருங்கச் சொல்லி விளங்க வைக்கும் அறிவியல் துணுக்குகள் படித்தவுடன் எளிதில் நினைவில் கொள்ளத்தக்கவகையில் வெளியிடப்படு கின்றன. இவ்விதழில் பெண்கள் முன்னேற்றத்தை மேம்படுத்தும் பல அறிவியல் செய்திகள் காணப்படுகின்றன என்று கூறலாம்.

## 5. இலக்கிய இதழ்களின் தோற்றம்

'வளரும் தமிழ்' என்ற இதழ் 1985 ஆம் ஆண்டு ஈரோட்டி லிருந்து வெளிவருகின்றது. இதன் ஆசிரியர் மு. சதாசிவம் என்ற தமிழாசிரியர். நூலின் முகவுரையில் தமிழின் வளர்ச்சிக்கும் தமிழ்ச்சமுதாயத்தின் முன்னேற்றத்திற்கும் உதவும் வகையில் இவ்விதழ் தோற்றுவிக்கப்படுகிறது என எழுதப்பட்டுள்ளது. இவ் விதழில் இலக்கியம் மற்றும் மொழி ஆய்வுக் கட்டுரைகள் மட்டுமே அதிக அளவில் இடம் பெறுகின்றன. புதிய சொல்லாக்கங்கள்

பரவலாகக் காணப்படுகின்றன. முடிந்தவரை தூயதமிழிலேயே படைப்புக்கள்யாவும் இடம்பெற்றுள்ளது தெரிகிறது.

'குறளியம்' என்ற இலக்கிய இதழ் 1979 ஆம் ஆண்டு ஈரோட்டிலிருந்து வெளிவருகின்றது. இதன் ஆசிரியர் வேலா என்பவராவார். பெயருக்கு ஏற்றவாறு குறளின் கருத்துக்களை மிக எளிமையாக யாவரும் புரிந்துக் கொள்ளும் வண்ணம் கட்டுரையாகவும், உரையாடல் வாயிலாகவும் எடுத்து விளக்கு கிறது இவ்விதழ். இதில் இடம்பெற்றுள்ள விளம்பரங்கள் கூட குறள் கூறும் செய்தியினை வெளிப்படுத்தும் முறையில் அமைந் திருக்கக் காண்கிறோம். கவிதைகள், விளம்பரங்கள், துணுக்கு கள் போன்றவைகூட குறள் கருத்துக்களைத் தாங்கியே இதில் வெளியிடப்பட்டு வருகின்றன.

## 5.1 பொருளமைப்பு

இவ்விரண்டு இதழ்களிலும் இலக்கியம் தொடர்பான செய்திகளே அதிகம் காணப்படுகின்றன. அகராதி, மொழி பற்றிய கட்டுரைகள், கவிதைகள், குறள் கருத்துக்கள், குறளிய உறுப்பினர்கள், மருத்துவக் குறிப்புக்கள் இவ்விதழின் அமைப்பு அமைந்துள்ளது.

### 5.1.1 அகராதி

வளரும் தமிழ் ஆசிரியர் அகராதி படைப்புகள் பல வற்றை வெளியிட்டுள்ளவராதலால் அகராதி பற்றிய செய்திகள் பலவும் முறையாக இவ்விதழில் வெளியிடப்படுகின்றன. இதில் சொற்களை அகர-முதல வரிசையில் தொகுப்பது பற்றியும், ஒரு பொருளுக்குப் பல சொற்கள் கொண்ட சொற்பட்டியல் தருவது பற்றியுமான கருத்துக்கள் இடம் பெற்றுள்ளன. அகராதியின் வளர்ச்சியினைச் சுட்டிக்காட்டும் வகையிலும் இவை கொடுக்கப் பட்டுள்ளன. சொற்பிறப்பியல் பற்றிய கருத்துக்களும் நன்கு இதில் விளக்கப்பட்டு வருகின்றன.

பொழுது என்ற ஒரு பொருளைக் குறிக்க பல சொற்கள் காணப்படுகின்றன. இது அகராதி முறையில் கீழ்க்கண்டவாறு தொகுத்துத் தரப்பட்டுள்ளது.

(எ.கா)

அந்தி - கதிர்மறையும் பொழுது

இரவு - இருட்பொழுது

எற்பாடு - கதிர் மறையும் பொழுது

கங்குல் - இரவுப் பொழுது

கணம் - கண்ணிமைப் பொழுது

கருக்கல் - இருண்டுள்ள காலைப் பொழுது

வைகல் - இருள் தங்கியுள்ள காலைப்பொழுது

விடியல் - இருள் விலகும் காலைப் பொழுது

## 5.1.2 மொழி பற்றிய கட்டுரைகள்

தமிழ் வளர்ச்சிக்காக இவ்விதழ் தோற்றுவிக்கப்பட்டுள்ளதால் மொழி (ஆய்வு) பற்றிய கட்டுரைகள் இதில் அதிகம் காணப் படுகின்றன. தமிழில் வழங்கும் பிறமொழிச் சொற்களைக் கண்டு பிடிப்பது எப்படி? சொற்களின் வரலாறு, தமிழும் பிறமொழித் தொடர்பும் போன்ற மொழி பற்றிய கட்டுரைகள் காணப்படு கின்றன.

எ. கா.

தமிழின் கண் வழங்கும் பிற மொழிச் சொற்களைப் பிரித்துக் கண்டறிவதற்கு முதற்படியாக ஒருவர் தமிழ் மொழியின் முழு வர லாற்றையும் அறிந்திருத்தல் இன்றியமையாததாகும். அஃதாவது தமிழின் மொழியமைப்பு (Structure of Tamil language) தமிழுக்கே உரிய ஒலிகள் (phonemes), ஒலியமைப்பு (phonetic structure) வேர்ச்சொல் (etyma) பகுதி, விகுதி, இடை நிலை (morphemes and semantemes) முதலியவற்றின் வரலாற்றை அறிந்திருத்தல் வேண்டும் என்பது போன்ற கருத்துக்கள் இம் மொழிக் கட்டுரை களில் இடம் பெற்றுள்ளன. இவ்வாறு எழுதுவதினால் பிறமொழிச் சொற்கள் கலவாது தூய தமிழிலே எழுதுவதற்குப் பயிற்சி ஏற்படும் என்றும் புதுச் சொல்லாக்கங்களை ஆக்குவதற்கு இது துணைபுரியும் என்ற நம்பிக்கையில் இக் கட்டுரைகள் வெளியிடப்பட்டுள்ளது தெரியவருகிறது.

## 5.1.3 கவிதைகள்

கவிதைகள் சிலவும் இவ்விதழில் இடம் பெறுகின்றன. இளம் கவிஞர்களை உருவாக்க இது உதவுகின்றது. கவிதைகள் மூலம் தமிழின் பெருமையைப் பறை சாற்றுவ்தாகவும் அமைந்துள்ளது.

எ. கா.

''பற்றற்றோரும் என்பாரும் பைந்தமிழே! உன்றன்பால்
பற்றுற்றே உன்னைத் தான் பாடுங்கால் — வெற்றிநலம்
நீளுமுயர் வாழ் வருளும் நித்திலமே! என் தமிழே !
நாளுமுனைப் பாடிடுவேன் நான்''

## 5.1.4 குறள் கருத்துக்கள்

'குறளியம்' என்ற இதழில் குறள் கருத்துக்களைக் கட்டுரை வடிவிலும் உரையாடல் வடிவிலும் காணப்படுகின்றன. உரையாடல் வடிவில் அமைந்துள்ள குறள் கருத்துக்கள் மிக எளிமையாக யாவராலும் புரிந்து கொள்ளும் வகையில் அமைந்துள்ளன. மேலும் குறளுக்கு ஏற்ற நல்ல விளக்கமாகக் கட்டுரைகள் அமைந்து காணப் படுகின்றன.

எ. கா.

'வரைவின் மகளிர்' அதிகாரம் ஒருமை மகளிரைக் கூறும் நோக்கோடு எழுதப்படவில்லை. அந்த அதிகாரத்தின் முதல் நோக்கம் மகளிர் நிறைகாவாமலிருந்த பரத்தையரை பற்றிக் கூறுவதாகும்.

விலை மகளிரின் பொய்ம்மை முயக்கத்தையும், புன்மை நலத்தையும் இன்ப நாட்டமின்மையும் பொருள் நோக்கையும் வெளிப்படுத்தி ஆண்மகனின் உணர்வார்வ நிலையைத் (sentiment) தொட்டு உளவியல் முறையில் அம்மகளிர்பால் தீரா அருவறுப்புக் கொள்ள வைத்து ''பரத்தமையை மெல்ல மெல்ல மாற்றியமைக்கும் நுட்பத் திறனுடன் திருவள்ளுவர் ஆண்பாலருக்கும் அவர் வழிச் சமுதாய அமைவுகளுக்கும் கடமையை உணர்த்துகிறார்''. இவ்வாறு புதுக் கருத்துக்களுடன் இக் கட்டுரைகள் விளங்குகின்றன.

## 5.1.5 உரையாடல் முறை - விளக்கம்

''ஒருமையுள் ஆமைபோல் ஐந்தடங்க லாற்றின்
எழுமையும் ஏமாப்புடைத்து''

என்ற குறளுக்கு உரையாடல் மூலம் எளிய நடையில் அதன் கருத்து கீழ் வருமாறு விளக்கப்படுகிறது:

செல்வி : ஆமை ஐந்துறுப்புகளையும் தம் ஓட்டுக்குள் ஒடுக்கிக் கொள்வது போல நாம் நம் ஐந்து உறுப்புகளையும் அடக்கிக் கொள்ள வேண்டுமா தாத்தா?

பெரு : மிக நன்றாக உரைத்தாய்.

செல்வம் : எப்படி தாத்தா அடக்குவது? நமக்கு ஓடு எதுவும் இல்லையே?

பெரு : ''பார்க்கத் தகாதவற்றைப் பாராமை கண்ணடக்கம்
பேசத் தகாதவற்றைப் பேசாமை வாயடக்கம்
கேட்கத் தகாதவற்றைக் கேளாமை காதடக்கம்
தொடத் தகாதவற்றைத் தொடாமை மெய்யடக்கம்
முகரத் தகாதவற்றை முகராமை மூக்கடக்கம்''

### 5.1.6 குறளிய உறுப்பினர்கள் வழி சமுதாயப் போக்கினை வெளிபடுத்துதல்

குறளிய உறுப்பினர்களின் பட்டியலும் அவர்கள் செய்ய வேண்டிய பணிகளும் இவ்விதழில் சுட்டிக் காட்டப்படுகின்றன. குறளாய இயக்கத்தின் நெறிமுறைகள் முதலியனவும் இதில் கொடுக்கப்படுகின்றன.

(எ.கா.)

செம் பொருள் நுகர்வு கொள்ளல் அதற்குரிய மன அடக்கச் சொற்களைக் கூறி விழிகள் மூடித் திளைத்தல்.

ஒருவர் குறளாயச் சூளுரை கூற வினைஞர்களும் கூடி சூள் கொள்ளுதல் போன்ற நெறி முறைகள் இவ்விதழில் காணப்படுகின்றன.

### 5 1.7 மருத்துவக் குறிப்புகள்

குறளியம் இதழில் குறள் கருத்துக்களுடன் மருத்துவக் குறிப்புகள் சிலவும் இடம் பெற்றுள்ளன. மனிதஉடலில் உண்டாகும் நோய்கள் பற்றிய செய்திகளும் அதற்கான மருத்துவக் குறிப்புகளும் இவ்விதழில் வெளியிடப்படுகின்றன. இக்கருத்துக்களால்

நோயினின்று தங்களைக் காத்துக் கொள்ளும் வகையில் முன்னெச்சரிக்கையாக மேற்கொள்ளவும், தேவையான மருத்துவ முறையை கடைபிடிக்கவும் முடிகின்றது.

(எ.கா.)

''அமீபியாசு பெருங்குடலில் இருக்கும் நுண் அணு (Entamoeba Hisorlytica) மிகச் சிறந்த உடல் பாதிப்பிலிருந்து கடுமையான மிகுந்த தீங்கிழைக்கும் நோய்கள் வரை உண்டாகும். இதுவும் தூய்மையற்ற பழக்க வழக்கங்களால் ஒருவரைத் தாக்கும் குடல் புண்ணிலிருந்து இரத்தக் குழாயைக் குடைந்து கல்லீரலையும் சில வேளைகளில் இது தாக்கும்'' என்பன போன்ற செய்திகள் நோயின் அறிகுறிகளையும் அதற்கு முதலுதவி செய்கின்ற முறையினையும் எடுத்து விளக்குகின்றன.

## 6. சமூக இதழ்கள் : தோற்றம்

சமுதாயத்திற்குப் பயன்படும் பல செய்திகளை உள்ளடக்கி வருவன இவ்வகையைச் சார்ந்த இதழ்களாகும். இதில் எல்லாச் செய்திகளும் கலந்து காணப்படும். இவ்வகை இதழ்களில் காணப்படும் செய்திகள் அனைத்தும் ஏனும் ஒருவகையில் மக்களுக்குப் பயன்தரக்கூடிய, அவர்களது சிந்தனையைத் தூண்டக்கூடிய வகையில் அமைந்துள்ளன எனலாம். ஜனரஞ்சனி என்ற வார இதழ் 1985-ஆம் ஆண்டு முதல் வெளிவருகிறது. பெயருக்குஏற்றாற் போல் ஜனரஞ்சகமான செய்திகளைத் தாங்கி இவ்விதழ் வெளிவருகின்றது. இதன் ஆசிரியர் திரு. எஸ்.எஸ். மணியன் என்பவர். எல்லோருடைய கவனத்தையும் கவரும் வண்ணம் அமைந்த அட்டைப் படத்துடன் இது வெளிவருகின்றது.

மேம்பாலம் என்ற இதழ் 1982-ஆம் ஆண்டு முதல் வெளிவருகின்றது. இதன் ஆசிரியர் திரு. பே. ச. நரசிம்மலு நாயுடு. இதில் பொதுவாக எல்லாச் செய்திகளும் கலந்து வெளியிடப்படுகின்றன. இவ்விதழில் ஆங்கிலக் கட்டுரைகளும் வெளியிடப்படுகின்றன. ஆகவே இது ஓர் இருமொழி (bilingual) இதழாகும்.

'சக்தி செய்தி மடல்' என்ற இதழ் 1984-ஆம் ஆண்டு சக்தி சர்க்கரை ஆலை நிறுவனத்தின் சார்பாக திரு. எஸ். வி. பாலசுப்ரமணியன் என்பவரால் வெளியிடப்பட்டு வருகிறது. இதன் ஆசிரியர் திரு. ப. சிதம்பரநாதன். இதில் எல்லா வகையான செய்திகளும் வெளியிடப்படுகின்றன. கட்டுரைகள் போன்றவை

மிக எளிய வாக்கியங்களைக் கொண்டு அமைந்துள்ளன. மேலும் எளிதில் யாவரும் புரிந்துக் கொள்ளக்கூடிய வகையில் அமைந் துள்ளது. சக்தி மலர், சக்தி செய்தி மடல் என்றஇருவகையாக இவ்விதழ்கள் வெளியிடப்படுகின்றன.

1. அறிவியல் செய்திகள்
2. துணுக்குகள்
3. வாழ்வியல் பக்கம் (சமூக அநீதிகள்)
4. தலங்களின் பெருமை
5. வேளாண்மை பற்றிய செய்திகள்
6. சமுதாயச் செய்திகள்

என்ற வகையில் கருத்துக்கள் இவ்விதழ்களில் எடுத்துக் கூறப்பட் டுள்ளன.

## 6.1 அறிவியல் செய்திகள்

அறிவியல் பற்றிய செய்திகளை எல்லா இதழ்களும் வெளி யிடுகின்றன. இன்றைய அறிவியல் முன்னேற்றத்தினை இவ்விதழ் கள் நமக்கு எடுத்துக் காட்டுகின்றன. அறிவியல் செய்திகள் வராத இதழ்களே இல்லை எனலாம். அத்தகைய ஒரு முக்கிய இடத் தினைப் பெற்றுள்ளது இன்றைய அறிவியல். உலகில் எந்த இடத் தில் புதிதாக ஒன்று கண்டுபிடிக்கப்பட்டாலும் அது பற்றிய விவரம் இதழ்கள் மூலம் ஏதேனும் ஒரு முறையில் வெளியாகின்றது. நவீன கருவிகளின் பயன்பாடு அதன் விலை போன்ற செய்திகளையும் இதழ்கள் வெளியிடுகின்றன.

(எ. கா.)

வெள்ளை உடலில் நீலக் கோடுகள் அணிந்த ALV எனும் வாகனம் சாலையின் மத்தியில் நகர ஆரம்பித்தது. ஒற்றைக் கண் அரக்கன் மாதிரி தட்டை முகத்தில் ஒரு ஜன்னல். எட்டுச் சக்கரங் கள். முற்றிலும் மூடப்பட்ட ஃபைபர் கிளாஸ் அமைப்பு. தலையில் ஒரு டி. வி. காமெரா. ALV என்பது தானியங்கி தரை ஊர்தி (Autonomous Land Vehicle)'' (ஜனரஞ்சனி, 1987 : 38).

## 6.2 வாழ்வியல் பக்கம்

பொதுவாக சமுதாயத்தில் நடைபெறுகின்ற சீர்கேடுகளை, குறிப்பாகப் பெண்களுக்கு இழைக்கப்படுகின்ற கொடுமைகளை இவ்விதழ் (ஜனரஞ்சனி) அணுகுகிறது. எடுத்துக்காட்டாக, காதலித்துத் தாலிகட்டிய கணவன் மனைவியை மறந்து வேறொருப் பெண்ணை திருமணம் செய்துகொண்டு வாழ, அதனால் மனைவி படுகின்ற துன்பங்களை இவ்விதழ் படம் பிடித்துக் காட்டுகிறது. இதனைப் படித்த பிறகாவது பெண்கள் தங்களைக் காத்துக்கொள்ள சீரிய முயற்சி செய்ய வேண்டும் என்ற தூண்டுதல் இதன் மூலம் கிடைக்கின்றது என்றால் அது மிகையன்று.

## 6.3 தலங்களின் பெருமை

பல அடியார்களின் வாயிலாகப் பல தலங்கள் பாடப்பட்டுள்ளன. அவை இலக்கியங்களாகப் பரிணமித்துள்ளன. இன்று வரை அவ்விலக்கியங்கள் தங்களின் பெருமைகளைப் பறை சாற்றி வெளிவந்தன. அது போலவே ஜனரஞ்சனியும் பழைய திருத்தலங்களின் பெருமையினை எல்லா மக்களும் அறிந்து கொள்ளும் வகையில் வெளியிட்டு வருகிறது.

எ. கா.

"கோவையிலிருந்து வடக்கே பதினொரு மைல் தூரத்திலுள்ள கிராமத்துக்கு அருகில் மலைப்பகுதியில் அனுவாவி சுப்பிரமணியர் கோவில் அமைந்துள்ளது"

இந்த கோயிலின் தனிச் சிறப்பும், அதில் அமைந்திருக்கும் பொய்கை, அக் கோயிலில் வீற்றிருக்கும் இறைவனின் பெருமை இவற்றை மிகத் தெளிவாக இவ்விதழ் எடுத்துக்காட்டுகிறது. இது போன்ற கட்டுரைகள் தொடர்ந்து வெளியிடப்பட்டும் வருகின்றன.

## 6.4 வேளாண்மைச் செய்திகள்

வேளாண்மை நம் நாட்டு மக்களுக்கு ஓர் அடிப்படையான தொழிலாகும். ஆகவே வேளாண்மை குறித்த பல்வேறு செய்திகள் மக்களுக்கு உரிய முறையில் கிடைப்பது நல்லது—தேவையானதும் கூட. ஆகவேதான் வேளாண்மைச் செய்திகளும் இவ்விதழ்களில் இடம் பெறுகின்றன, புதுரக உரங்கள், மருந்துகள் பற்றிய செய்திகளை வெளிப்படுத்தி வேளாண்மைத் தொழில் மேலும் மேலும் வளர இவ்விதழ்கள் துணைபுரிகின்றன.

எ. கா,

வாடல் நோயுற்ற தென்னை மரங்களில் 'கள்' இறக்குவதால் ஏற்படும் மாற்றங்கள்.

''இந்நோய் ஆரம்பத்தில் மரத்தின் அடிப்பாகத்தில் சிறு சிறு வட்ட வடிவப் புள்ளிகளாகத் தோன்றி பின்பு கருஞ்சிவப்பு நிறத் திரவமாக வடிய ஆரம்பிக்கும். நோயின் தீவிரம் அதிகமாகும்போது புள்ளிகள் திட்டுக்களாக மாறி மேல் நோக்கிப் பரவ ஆரம்பிக்கும்''.

## 6.5 துணுக்குகள்

துணுக்குகள் மக்கள் மனதில் எளிதாகப் பதியக் கூடியவை. இதனால் செய்திகளைச் சிறு சிறு துணுக்குகளாக வெளியிட்டு வருகின்றன இவ்விதழ்கள். இதில் வெளிவரும் துணுக்குகள் பெரும்பாலும் சமுதாயச் செய்திகளையே தாங்கி நிற்கின்றன.

(எ. கா.)

''இங்கிலாந்து நாட்டின் தலைநகரான லண்டனில் பூச்சி யியல் பற்றிய ஆராய்ச்சிக் கழகம் உள்ளது''.

''உடலில் கொழுப்புச் சத்து அதிகம் படிவதால் பலதொல்லை கள் ஏற்படுகின்றன. கை, கால், தொடை போன்ற பகுதிகளில் கொழுப்பு படிவதால் பிரச்சினை இல்லை''.

என்பன போன்ற துணுக்குகள் மக்களுக்குப் பயன் தரக் கூடியவையாகும்.

## 6.6 சமுதாயச் செய்திகள்

சமுதாயத்தில் நடக்கின்ற எல்லா நிகழ்ச்சிகளும் இதனுள் அடங்கும். எடுத்துக்காட்டாக, போபாலில் வெளியேறிய விஷ வாயுவினால் எத்தனை மக்கள் துன்பம் அடைந்தனர், எவ்வாறு அவ்வாயு வெளியேறியது, அதனால் மக்கள் அடைந்த இன்னல் கள் யாவை, இதன் வாயிலாக ஏற்பட்ட சமுதாயக்கேடு பற்றியும் இவ்விதழ்கள் செய்திகளையும் கட்டுரைகளையும் வெளியிட்டுள்ளன.

## 6.7 போட்டி / வினா - விடை

இதழ்களில் வினா-விடைப் போட்டிகள் இடம் பெறு வதால் இவற்றைப் படிப்போர் சிந்திக்கும் திறன் பெறுகிறார் கள். புதிய புதிய செய்திகளும் அவர்களுக்குக் கிடைக்கின்றன.

படித்த மக்களுக்கு இது பல வழிகளில் உதவி புரிகின்றது என லாம். மேலும் பலதரப்பட்ட செய்திகளையும் தரும் வகையில் இது அமைகிறது. இவ்வினா - விடைப் போட்டியில் வெற்றி பெற்றவர்களுக்கு மேலும் மேலும் சிந்தித்து அடுத்த போட்டியிலும் வெற்றி பெறவேண்டும் என்ற ஆர்வம் தோன்றுகிறது. இதனால் பல இதழ்களைப் படித்துத் தங்கள் அறிவைப் பெருக்கிக் கொள்ள வும் வழிவகுப்பதாக அமைகிறது.

## 6.8 கீரைகளின் பயன்கள்

இவ்விதழ்களில் கீரைகளின் பயன்களை மக்கள் புரிந்து கொள்ளும் வகையில் கட்டுரைகளும் செய்திக் குறிப்புகளும் வெளி யிடப்படுகின்றன. இதனைப் படிக்கும் மக்கள் அதன் பயனை நன்கு அறிந்து கொண்டு தமக்குத் தேவையான பொருட்களைத் தேர்ந்தெடுத்து நுகர்வதற்கு உதவி செய்கின்றது.

(எ. கா.) பசலைக் கீரை

இச் செடி தரையில் படரும். இதன் இலைகள் தட்டை யாகவும், கரும்பசுவை / இளம்பச்சை நிறமாக கொண்டவையாக வும் இருக்கும். இதன் இளம் தண்டுகளும், இலைகளும் சிறந்த உணவாகக் கருதப்படுகிறது. துவரம் பருப்பு, பாசி பருப்பு ஆகிய வைகளுடன் சேர்த்துக் கடைந்தும், குழம்பாகவும் உணவோடு சேர்த்தும் உண்ணலாம்''.

இது போன்ற பயனுடைய செய்திகளை இவ்விதழ்கள் வழங்குகின்றன.

## 7. இதழ்களும் சமுதாயமும்

இதழ்களின் வலிமையைப் பற்றியும் அவை மக்களிடையே பெற்றுள்ள செல்வாக்கினைப் பற்றியும் கூறவந்த மணி (1964:129) ''I have no doubt in my mind that the future of the Democracy in India lies in the hands of the press of the country.'' என்று குறிப்பிடுவர். ஏனெனில் பரவல் செய்தித் தொடர்புக்கான சக்தி வாய்ந்த சாதனங்களில் இதழ்களும் குறிப்பிடத்தக்க இடத் தைப் பெற்றுள்ளதுதான் ''பத்திரிகைகளின் முக்கிய குறிக்கோள் சமுதாயச் சேவையேயாகும். பத்திரிகைத் துறை மிகவும் சக்திவாய்ந் தது. கட்டுப்படுத்தப்படாத வெள்ளமானது எவ்வாறு பயிர்களை யும் ஊர்களையும் மூழ்கடித்து நாசம் செய்கிறதோ அது போன்று

கட்டுப்படுத்தப்படாத பேனாக்கள் நாட்டையே அழித்துவிடும் என்று மகாத்மா காந்தி கூறியுள்ளதை எடுத்துச் சொல்லி பத்திரிகை மொழி, திறன் போன்றவை பற்றி விளக்குகிறார் மணியன் (1972:27). மக்களிடம் நெருங்கிய தொடர்பு கொண்ட இதழ்களால் சமுதாய மாற்றங்கள் ஓரளவு நிகழ்ந்துள்ளன என்பதை நம்மால் மறுக்கவியலாது. ஓரளவு படித்த மக்களுக்குத் தொடர்ந்து படிக்கும் வழக்கத்தை ஏற்படுத்தித் தந்ததே இவ்விதழ்களாகும். ஒரு குறிப்பிட்ட வர்க்கத்தினர் மட்டுமே எழுதுதல், மற்றவர்கள் எழுதினாலும் அச்சிடப்பட முடியாத நிலை போன்றவை எல்லாம் இதுபோன்ற இதழ்களால் நொறுங்கின. இவ்விதழ்கள் எழுத்தாற்றல் உடையவர் எல்லார்க்கும் வாய்ப்பளித்தன. குறையாற்றல் உடையாரும் தமது ஆற்றலை முழு ஆற்றலாக்க இதழ்கள் உதவி புரிந்தன. இதனால் எழுத்தாற்றல் மட்டுமின்றி எழுத்தாளர் பெருக்கமும் உண்டாயிற்று. பாமர மக்களும் அரசியல் அறிவு, உலகியல் அறிவு, விஞ்ஞான அறிவு போன்ற பல்துறைப் பொது அறிவு பெற இதழ்கள் பல்லாற்றானும் பயன்பட்டன. சிந்திக்கும் திறனையும் முன்னையோர் கருத்தாயினும் ஆய்வுக் குட்படுத்தும் ஆராய்ச்சி மனப்பான்மையினையும் இவ்விதழ்கள் வளர்க்கின்றன. புதுச் சொற்களை வழக்குச் சொற்களாக மாற்றப் பயன்படுவன பத்திரிகைகளேயாகும். கலைக்கதிர், விஞ்ஞானச் சுடர் என்ற இரண்டு இதழ்களும் அறிவியல் கருத்துக்களை மக்களுக்குத் தெரிவிக்கின்றன. உலகிலுள்ள எந்த இடத்தில் எவ்விதப் புதிய கருவிகள் கண்டுபிடிக்கப்பட்டாலும் அதை உடனே மக்களுக்குத் தெரியப்படுத்துவது இத்தகைய இதழ்களே. அறிவியல் அறிஞர்களின் வரலாற்றுக் குறிப்புகளையும், அறிவியல் கண்டுபிடிப்புகளையும் இவ்விதழ்கள் வெளியிடுகின்றன. அறிவியல் துணுக்குகள், அறிவுப் புதிர்கள், வினா - விடை போன்ற பல பகுதிகள் சிந்தனையைத் தூண்டும் விதமாக இவ்விதழில் இடம் பெறுகின்றன. மேலும் ஆங்கிலச் சொற்களுக்கு இணையான தமிழ்ச் சொற்களையும் மொழி பெயர்த்து வெளியிடுகின்றன. புதிய கலைச் சொற்கள் பலவற்றை மக்கள் எளிதில் புரிந்து கொள்ளும் அளவிற்கு எளிமைப்படுத்தியும் வெளியிடுகின்றன. நோய்பற்றிய செய்திகள், அதனைத் தீர்க்கும் முறை மருந்துகளின் பயன்பாடு போன்றவற்றையெல்லாம் மக்களுக்குத் தெரிவிக்கின்றன. மேலும் அன்றாட வாழ்க்கைக்குத் தேவையான சமையல் குறிப்புக்கனையும், உணவுப் பொருட்களைப் பற்றியும் இவை வெளியிடுகின்றன. இவ்விதழ்களில் இலக்கியம் சம்பந்தப்பட்ட கட்டுரைகள் மக்களின் பயனுக்கேற்ப வெளியிடப்படுகின்றன. கட்டுரைகளைப் பிற சொல் கலவாமல் எழுதுவது எப்படி?

என்றும், அகராதி பற்றிய செய்திகளையும் இவை தந்து வருகின்றன. குறள் பாடலுக்குப் புதிய கருத்துக்களை எளிமையான முறையில் தெரிவிக்கின்றன. புதிய ஆராய்ச்சிக் கட்டுரைகள் எழுதுவதை ஊக்கப்படுத்தி இவ்விதழ்கள் வெளியிடுகின்றன. மக்கள் பயன் பெறக் கூடிய வகையில் சமுதாயத்தில் நடக்கின்ற சீர்கேடுகளையும் நாட்டு நடப்புகளையும் எடுத்துக்காட்டும் வகையில் சில கட்டுரைகள் அமைந்துள்ளன. கதைகள் மூலமாக சமுதாயத்தில் அன்றாடம் நடைபெற்றுவரும் நிகழ்ச்சிகளைப் படம் பிடித்துக் காட்டுகின்றன. உலகில் நடக்கும் நிகழ்ச்சிகளை உடனுக்குடன் மக்களுக்கு அறிவிக்கும் இதழ்களினால் பெரும் பயனை அடைகின்றோம் என்பது இதன் மூலம் தெளிவாகின்றது என அறியமுடிகிறது.

## 8. முடிவுரை

கொங்கு நாட்டிலிருந்து எத்தனையோ இதழ்கள் வெளிவந்தாலும் அதில் சிலவற்றை மட்டுமே ஈண்டு எடுத்துக்கொண்டு அவற்றின் அமைப்பு, பயன்பாடு பற்றியே இக்கட்டுரையின் கருத்துக்கள் அமைந்துள்ளன. அறிவியல், இலக்கியம், சமூகம் என்ற மூன்று பெரும் பிரிவுகளில் இந்த இதழ்களைப் பற்றிய ஆய்வு அமைந்துள்ளது. மக்கள் யாவரும் செய்திகளைப் புரிந்து கொள்ளும் வகையில் இவ்விதழ்களின் மொழி மற்றும் பொருள் அமைப்பு அமைந்துள்ளன. இதழ்கள் ஏதேனும் ஒரு நோக்கத்தைக் கொண்டுதான் முதன் முதலில் வெளியிடப்படுகின்றன. அந்த நோக்கம் நிறைவேற வேண்டுமானால் மக்களை அதன் பால் ஈர்த்தாகவேண்டும். அத்தகைய முயற்சியில் கலைக்கதிர், ஜனரஞ்சனி, விஞ்ஞானச்சுடர் இவை மூன்றும் சிறப்பிடம் பெற்று விளங்குகின்றன. அவற்றிற்கென தனிப்பட்ட வாசகர் வட்டத்தைக் கொண்டு அமைந்துள்ளன. பல நவீன அறிவியல் முயற்சிகளை / முன்னேற்றங்களைத் தம்முள் அடக்கி வெளியிட்டு வருகின்றன. ஆனால் இவை மட்டும் போதா. எல்லா மக்களும் அறிந்து கொள்ளும் வகையில் மொழியையும், பொருளையும் எளிமைப் படுத்திக் கொடுக்கும் போதே அவர்கள் பயனடைய நல்வாய்ப்பு ஏற்படுகிறது. மக்களின் பொழுது போக்கிற்கு ஏற்ப ஜனரஞ்சனி என்ற மாத இதழ் விளங்குகின்றது. பெரும்பாலும் சிறுகதை, தொடர்கதை போன்ற பொழுது போக்கு அம்சங்கள் மட்டுமே இதில் காணப்படுகின்றன. ஆனால் அந்தப் பொழுது போக்குக் கதைகளிலும் பல நல்ல கருத்துக்கள் மக்களின் மனதில் சென்றடைய வேண்டும் என்ற எண்ணத்தில் அமைக்கப்பட்டுள்ளதைக்

காணமுடிகின்றது. அதற்கேற்ற முறையில் கதைகளைத் தெரிந் தெடுத்து இவ்விதழில் வெளியிடுகின்றனர் என்பது உற்று நோக்கத்தக்கது.

சில குறைகளும் இருக்கத்தான் செய்கின்றன. ஏனெனில் சில இதழ்கள் ஏதேனும் ஒரு நோக்கத்தைக் கொண்டிராமல் எல்லாச் செய்திகளையும் வெளியிடும் வகையில் அமைந்திருக்கின்றன. அவற்றின் நோக்கம் என்னவென்று நம்மால் தெளிவாக அறிந்து கொள்ள முடிவதில்லை. தமிழின் பெருமைக்கும், தமிழரின் முன் னேற்றத்திற்கும் எழுந்த இதழ் வளரும் தமிழ் என்று முகவுரையில் குறிப்பிட்டிருந்தாலும் அதன் நோக்கம் முழுமையாக நிறைவேறும் வகையில் இன்னும் சில கருத்துக்கள் — செய்திகள் இடம் பெற்றால் சிறப்பாக அமையும். ஒரு வகையில் நல்ல இலக்கியம் மற்றும் மொழி வளர்ச்சிக் கட்டுரைகள் இவ்விதழில் வெளிவந்தால் எல்லோருக் கும் பயனுள்ளதாக இருக்கும். சில இதழ்களின் மொழி அமைப்பில் புணர்ச்சி விதிகள் சரிவரப் பின்பற்றப்படுவதில்லை. இத்தகைய மொழியமைப்பு முறை தமிழின் தொடர், பொருள் வளத்தைக் காலப் போக்கில் குறைத்து விடக்கூடும். இவற்றைத் திருத்தி அமைத்துக் கொள்வது நல்லது.

## துணை நூல்கள்

### இதழ்கள்

1. அவினாசிலிங்கம் மனையியற் கல்லூரி ஆசிரியர் குழுவினர் (1974—87). விஞ்ஞானச் சுடர், கோயம்புத்தூர்.

2. சதாசிவம். மு. (1985—87). வளரும் தமிழ், ஈரோடு.

3. சிதம்பரநாதன் (1984—87). சக்தி செய்தி மடல், கோயம்புத்தூர்.

4. நரசிம்மலு நாயுடு, பே. ச. (1982—87). மேம்பாலம், கோயம்புத்தூர்.

5. பத்மநாபன், த. (1948—87). கலைக்கதிர், கோயம்புத்தூர்.

6. மணியன், எஸ். எஸ். (1985—87). ஜனரஞ்சனி, கோயம்புத்தூர்.

7. வேலா (1979—87). குறளியம், ஈரோடு.

8. மணியன், தங்க. (1978). பத்திரிகைத் தமிழ், மாணிக்கப் பதிப்பகம், திருச்சி.

9. Roland E, Wolsely. (1964). Journalism in Modern India (Introduction by A. D. Mani)

# 16. கொங்கு நாட்டில் கட்டபொம்மக்கூத்து

*சி. மா. இரவிச்சந்திரன்*
விரிவுரையாளர் - தமிழ்த்துறை

கொங்கு நாட்டில், சேலம் மாவட்டத்தில் உள்ள கிராமங்களில் வாழ்ந்து வரும் நாட்டுப்புறக்கலைகளில் சிறப்பானது பொம்மலாட்டமாகும். பொம்மலாட்டத்தைச் சேலம் மக்கள் 'கட்ட பொம்மக் கூத்து' என்றழைக்கின்றனர். மரக் கட்டைகளால் செய்யப்பட்ட பொம்மைகளைக் கொண்டு நடத்தப்படும் கூத்து என்பதால் 'கட்ட பொம்மக் கூத்து' என்றழைக்கின்றனர். சேலத்தில் மட்டும் ஏறத்தாழப் பத்துக்கும் மேற்பட்ட பொம்மலாட்டக் குழுவினர் தற்போதும் நிகழ்ச்சிகளை நடத்திவருகின்றனர். இவற்றில் ஐந்துக்கும் மேற்பட்ட குழுவினர் ஓமலூர் அருகிலுள்ள காரவள்ளி என்ற ஒரு சிறு கிராமத்தில் குடியிருப்பது குறிப்பிடத்தக்கதாகும். அந்த ஊர் மக்களில் பெரும்பாலானோர் பொம்மலாட்டக் கலைஞர்களாக இருக்கின்றனர். அயோத்தியா பட்டணம் அருகிலுள்ள ஜலகண்டாபுரம், கொங்கணாபுரத்திற்குப் பக்கத்திலுள்ள கரட்டூர் மற்றும் பெரிய சீரகாபாடி ஆகிய ஊர்களில் பொம்மலாட்டக் குழுவினர் உள்ளனர். இப்பொம்மலாட்டக் குழுவினர் தைப் பொங்கல் தொடங்கி ஆடிமாதம் வரை பல ஊர்களுக்கும் தொடர்ச்சியாகச் சென்று கூடாரம் போட்டுக் கட்டணம் வசூலித்து நிகழ்ச்சிகளை நடத்துகின்றனர். பெரிய சீரகாபாடியில் வசித்து வரும் திரு. செம்மலை என்ற பொம்மலாட்டக் கலைஞர் சில வருடங்களுக்கு முன்புவரை ஊர் ஊராகச் சென்று நிகழ்ச்சிகளை நடத்தி வந்திருக்கின்றார். தற்போது தன் கிராமத்தைச் சுற்றியுள்ள கோயில் நிகழ்ச்சிகளுக்கும், திருமணம், பிறந்தநாள் விழா போன்ற வீட்டு நிகழ்ச்சிகளுக்கு மட்டும் சென்று நிகழ்ச்சிகளை நடத்தி வருகிறார்.

பொம்மலாட்டக் கூத்தினை நிகழ்த்த, பொம்மைகளை ஆட்டுவதற்கு நால்வர், முகவீணை ஊத ஒருவர், மிருதங்கத்திற்கு ஒருவர், ஜால்ராவிற்கு இருவர், பொம்மைகளை எடுத்துத் தர ஒருவர் என ஒன்பது நபர்கள் குறைந்த அளவில் தேவைப்

படுகின்றனர். கிராமங்களில் கூடாரம் போட்டு நிகழ்ச்சிகளை நடத்தும் பொம்மலாட்டச் சபாக்களில் பத்திலிருந்து பதினைந்து பேர் வரை பணியாற்றுகின்றனர். இச் சபாக்களில் பெண்கள் வேலைக்கு அமர்த்தப்படுவதில்லை. கரட்டூரில் மட்டும் பங்கசம் என்ற பெண், தன் கணவன் இறந்து விட்டதால், அவர் நடத்திய பொம்மலாட்டக் குழுவைத் தானே நடத்தி வருகிறார். கள ஆய்வின் போது காரவள்ளியைச் சேர்ந்த டி. முத்தையன் குழுவில் பதினான்கு பேர்கள் பணியாற்றிக் கொண்டிருந்ததை அறிய முடிந்தது. அவர்களின் பெயர், வயது, பணி ஆகியவை கீழே பட்டியலில் தரப்பட்டுள்ளது.

| | | | | |
|---|---|---|---|---|
| 1. | திரு டி. முத்தையன் | வயது 44 | — | முதலாளி |
| 2. | திரு சாமி என்றழைக்கப் படும் சின்னு | வயது 41 | — | பொம்மை யாட்டுபவர் |
| 3. | திரு பி. பெருமாள் | வயது 39 | — | பெண் பொம்மைக்காரர் |
| 4. | திரு மாதவருசாமி | வயது 45 | — | ராஜ்பார்ட் பொம்மைக்காரர் |
| 5. | திரு செட்டி | வயது 36 | — | சின்ன பொம்மைக்காரர் |
| 6. | திரு இராசு | வயது 47 | — | முகவீணை |
| 7. | திரு பெருமாள் | வயது 34 | — | மிருதங்கம் |
| 8. | திரு முத்து | வயது 15 | — | ஜால்ரா |
| 9. | அருமையன் (முதலாளியின் மகன்) | வயது 14 | — | ஜால்ரா |
| 10. | மல்லி (சின்ன பொம்மைக்காரர் மகன்) | வயது 11 | — | சுதிப்பெட்டி |
| 11. | திரு சுப்பிரமணி | வயது 16 | — | ஒலிபெருக்கி |
| 12. | திரு செல்வன் | வயது 21 | — | டிக்கட் தருபவர் |
| 13. | திரு சின்னண்ணன் | வயது 19 | — | டிக்கட் வாங்குபவர் |
| 14. | திரு கோவிந்தன் | வயது 26 | — | சமையல்காரர் |

குழுவில் உள்ள சிறுவர்கள் அனைவரும் காலையும் மாலையும் கிராமங்களில் விளம்பரம் செய்யப் போவதற்கும், நிகழ்ச்சிக்கு முன்பும் பின்பும் சுற்றுப்படுதா இறக்கி ஏற்றிக் கட்டுவதற்கும், நாடகத்தின்போது ஜால்ரா போடவும், அவ்வப்போது தமாஷ்

பொம்மை பிடித்து ஆட்டவும் பயன்படுத்துகின்றனர். மொத்தத்தில் சிறுவர்களுக்கு ஒவ்வொரு வேலையாகத் தந்து, 'அனைத்து வேலை களுக்கும் பயிற்றுவிக்கப்பமகின்றனர்.

கலைஞர்கள் வன்னியர், வண்ணார், பள்ளர், பறையர், சக்கி லியர் போன்ற பல சாதியினைச் சேர்ந்தவர்களாக இருக்கின்றனர். பொம்மை ஆட்டுகின்றவர்களில் வன்னியக்கவுண்டர் மிகுதியாக வும், முகவீணை, மிருதங்கம் வாசிப்பவர்கள் பெரும்பாலும் தாழ்ந்த சாதியைச் சேர்ந்தவராகவும் உள்ளனர்.

பொம்மலாட்டக் குழுவில் பெண் பொம்மைக்காரர், ராஜ் பார்ட் பொம்மைக்காரர், சின்னபொம்மைக்காரர் ஆகியோர் மிக முக்கியமானவர்களாகக் கருதப்படுகின்றனர். இவர்கள் ஒவ்வொரு வருடமும் வெளியூர் நிகழ்ச்சிகளுக்குக் கிளம்பும் போது சபா முதலாளியிடமிருந்து ரூபாய் 50-லிருந்து ரூபாய் 500 வரை முன் பணம் வாங்கிக் கொள்கின்றனர். இவர்களுக்கு மாதச் சம்பளம் ரூ. 250-ம் நாட்படி ரூபாய் மூன்றும் தரப்படுகிறது. பிற கலை ஞர்களுக்கு மாத ஊதியம் ரூ. 100-ம் நாட்படி ரூபாய் ஒன்றும் தரப்படுகிறது. அனைவருக்கும் இருவேளை உணவும், 60 நாட் களுக்கு ஒரு முறை ஊருக்குச் சென்றுவரப் பயணப்படியும் முத லாளி அளிக்கிறார். திரைப்படம் கிராமங்களில் பரவலாகச் சென் றடைவதற்கு முன்பு பொம்மலாட்டம் நல்ல வருவாய் தரும் தொழிலாக இருந்திருக்கின்றது. திரு. செம்மலைக்குச்சொந்த வீடு, சொந்த நிலம் உண்டு. ஆனால் தற்போது பொம்மலாட்டத்தின் மூலம் கிடைக்கும் வருவாய் குறைந்து விட்டதால், கலைஞர்களின் ஊதியமும் குறைந்து வருகிறது.

### *கிராமங்களில் பொம்மலாட்ட நிகழ்ச்சி*

திரு செம்மலை கோயில் நிகழ்ச்சிக்கு செல்வதன் காரணமாக இரவு 9 மணிக்கு நிகழ்ச்சியினைத் தொடங்கி விடியும் வரை நடத்துவார். இவ் முழு இரவும் நடத்துவதனால் ஒருநாள் விட்டு ஒரு நாள் நாடகம் நடத்துவார். கூடாரம் போட்டு நிகழ்ச்சி நடத்துபவர்கள் தொடர்ந்து ஒவ்வொரு இரவும் நிகழ்ச்சி நடத்து வதன் காரணமாக இரவு 9 மணிக்குத் தொடங்கி ஏறத்தாழ ஒரு மணி வரை நாடகத்தை நடத்துகின்றனர். மாலை 6 மணிக்கே ஒலிபெருக்கியில் திரைப்படப் பாடல்கள் ஒலிபரப்பப்படுகின்றன. இது, அன்று இரவு நிகழ்ச்சி உண்டு என்பதனைப் பக்கத்துக் கிராம மக்கள் உறுதி செய்து கொள்ள ஏதுவாக இருக்கிறது.

கலைஞர்கள் இரவு 7 மணியளவில் அன்றைய நாடகத்திற்குத் தேவையான பொம்மைகளுக்கு உடையலங்காரம் செய்யத் தொடங்கி விடுவார்கள். ஒவ்வொரு நாளும் பெண் பொம்மைக்கு எண்ணெய் தடவி, தலைமுடி சீவி விடப்படுகிறது. 8 மணிக்கு மேடையைச் சுற்றியுள்ள சுத்துப்படுதா இறக்கி விடப்பட்டு டிக்கட் தரத் தொடங்குகிறார்கள். டிக்கட் ஒன்றுக்கு 50 காசுகள் வாங்கப்படுகின்றன. ஒவ்வொரு நாளும் ரூ. 250 லிருந்து ரூ. 500 வரை வசூலாகின்றது. அன்றைய நிகழ்ச்சி முடியும் தருவாயில், அன்று வந்துள்ள கூட்டத்தை வைத்து அடுத்த நாள் நடத்தப்போகும் நாடகத்தை முடிவு செய்து அறிவிக்கிறார்கள். நல்லதங்காள், லவகுசா, வன்னியப்புராணம், ஒட்ட நாடகம் ஆகியன நல்ல வசூலைத் தரும் நாடகங்கள் என்கின்றனர். பெரும்பாலும் இந்த நாடகங்கள் மட்டும் சந்தை நடக்கும் நாட்களை அனுசரித்துப் போடப்படுகின்றன.

ஒவ்வொரு நாள் நாடகமும் பிள்ளையபர் வழிபாட்டுடன் தொடங்குகிறது. பிள்ளையார் வருகைக்கு முன் நாடகத்தின் முதல் பாடலில் கண்ணனை வணங்குகின்றனர். அப்பாடல் வருமாறு:

ஆரணப் பொருளே போற்றி
அகிலாண்ட நாயகனே போற்றி
பாண்டவர்க்குத் தூதாய் போற்றி
பார் அளந்த மாயா போற்றி
காரண வஸ்துவா
ஸ்ரீகண்ணனே போற்றி போற்றி

என்ற விருதத்தைப் பாடிய பின்னர்,

வலம்புரிக் கைலவாசன்
உலக மெங்கும் மனம் மகிழ்ந்து
ஒரு கொம்பு துதிகள் ஆட
இக்கதை புரிய வேண்டி
விளங்கும் சக்ரவினாயகர் வருகின்றாரே

என்ற பிள்ளையார் விருத்தத்துடன், பிள்ளையார் பொம்மையினை மேடையில் ஏற்றுகின்றனர். பிள்ளையார் வழிபாட்டிற்குப்பின் நேராகக் கதைப் பகுதிக்குச் சென்று விடுகின்றனர். ஒவ்வொரு கதையின் காட்சியமைப்பிலும், கதை நடத்தும் பாணியிலும் குழுவிற்கு குழு வேறுபாடு இல்லை.

ஒவ்வொருநாளும், அன்றைய நாடகத்தின் முதன்மைப்பெண் பாத்திரம் மடிப்பிச்சை ஏந்துவது போன்ற காட்சியினைப் புகுத்தி மக்களிடம் காசு வாங்குவார்கள். உதாரணமாக நல்லதங்கையை அலங்காரி அரண்மனையை விட்டு விரட்டும்போது தெருவில் நின்று நல்லதங்கை தன் குழந்தைகளுக்காக மடிப்பிச்சை ஏந்துவது போலக் காட்சியினைப் புகுத்தி - பொம்மையின் முந்தானையில் மடிப்பிச்சை போடும்படிப் பாடுவார்கள். மக்களும் இதனை ஒரு சடங்காகவும், பொம்மையைப் பக்கத்தில் பார்ப்பதற்கு வாய்ப்பாகவும் எண்ணிக்கொண்டு - பொம்மையிடம் வந்து அதன் மடியில் காசு போடுவார்கள். நாடகத்தின் இடையே பார்வையாளர்கள் பெண் பொம்மைக்குப் பூ வைப்பதும், குட்டையனுக்கு முறுக்கு மாலை, காசுமாலை போடுவதும் உண்டு. இதுபோலவே மார்க்கண்டேயன் நாடகத்தில் மார்க்கண்டேயன் தனது உயிரைக் காக்கச் சிவனுக்குப் பூசை செய்யும் போது பார்வையாளர்கள் பலர் மேடையில் விளக்கு ஏற்றி வைப்பார்கள். இவ்வாறு பல வகையில் பார்வையாளர்களோடு நேரடியான தொடர்பும் பொம்மைகள் வைத்துக் கொள்கின்றன.

*பாத்திரங்கள்:*

பொம்மலாட்டத்தில் இடம்பெறும் அனைத்துப் பாத்திரங்களும் புராண இதிகாசப் பாத்திரங்களேயாவார்கள். பொம்மலாட்டத்தில் முதன்மை பாத்திரங்கள் அறிமுகப்படுத்தப்படும் இடங்கள் விறுவிறுப்புடனும் எடுப்பாகவும் அமைந்திருக்கும். அப்போது பாத்திரத்தின் கம்பீரத்தைக் காட்டுவதற்காகப் பொம்மை சுழற்றிச் சுழற்றி ஆட்டப்படும், பாடல்களும் அரசனின் கம்பீரத்தைக் கூறுவதாகவே இருக்கும். உதாரணத்திற்கு நல்லண்ணராசன் அறிமுகத்தின் போது பாடப்படும் பாடலைக் காண்போம்.

தில்லை நடராச சிருங்கார ஒய்யார
தீராத வினைகள் தீர்த்த கம்பீரம்
சுந்தர மாணிக்க வாசன் ஆணைக்குத்
திருநேசன்
திரிலோகம் புகழும் சுந்தர சூரன் நானே
நல்லண்ணராசன் இதோ வந்தேன்
சபைநாடி நல்லண்ணராசன் இதோ வந்தேன்

முதன்மைப் பாத்திர அறிமுகத்தின்போது குட்டையனும் (விதூஷகன்) பின் தொடர்ந்து வருவான். பொம்மலாட்டத்தில்

இப்பாத்திரம் எடுத்துக்கொள்ளும் சுதந்திரம் மிகவும் அதிகமானது. எல்லாக் குழுவினருமே குட்டையன் பாத்திரத்திற்கு மட்டும் குரல் மாற்றிக் கீச்சுக் குரலில் பேசுவார்கள். இவன் புராண இதிகாசப் பாத்திரங்களை நிகழ்காலத்திற்கு இழுத்து வருபவன். (ந. முத்துசாமி) சேலத்தில் ஆரம்ப காலங்களில் கோமாளியே விதூஷகனாக இருந்ததாகவும், சமீப காலத்தில்தான் குட்டையன் எனும் பாத்திரத்தை விதூஷகனாக பொம்மலாட்டத்தில் அறிமுகம் செய்ததாகவும் கலைஞர்கள் கூறுகின்றனர்.

கிராமங்களில் இப்பாத்திரம் மிகவும் விரசமான வசனங்களை சாதாரணமாகப் பேசும். ஆனால் அவைகளை நீக்கிவிட்டால் பொம்மலாட்டத்திற்குக் கிராமங்களில் உள்ள வரவேற்பு குறைந்து விடுமோ என்றும், நினைத்துப்பார்க்கவும் வேண்டியுள்ளது. ''கூத்து அதன் பாலுணர்ச்சித் தூண்டலுடனான, நமக்கு விரசமெனத் தோன்றுவதான குணத்தை எடுத்துவிட்டால் அது அதன் இன்றையப் பராமரிப்பாளர்களான கீழ்மட்ட மக்களின் ஆதரவை இழந்து விடும். அந்த ஆதரவு போன பின்னே அது முற்றிலும் இறந்து விடும்'' என்ற ந. முத்துசாமியின் கருத்து இங்கு எண்ணிப்பார்க்கத் தக்கது.

## ஆட்டம் - பாட்டு - வசனம் :

பொம்மை ஆட்டுபவர்களே அப்பாத்திரத்திற்குரிய பாடல்களையும் உரையாடல்களையும் பேசுவது சேலம் கலைஞர்களிடம் உள்ள சிறப்பான கூறாகும். இதுபோலவே கும்பகோணத்தில் சாமிநாத குருக்கள் காலத்தில் பாடல்களையும் உரையாடல்களையும் பொம்மையாட்டுபவர்களே பேசிக்கொண்டிருந்த நிலை மாறிப் பாடலுக்கும் வசனங்களுக்கும் தனியான கலைஞர்களை அமர்த்தத் தொடங்கி இருக்கிறார்கள். இதனால் தஞ்சைப் பகுதியில் பொம்மலாட்டம் கலையம்சத்தை மெதுவாக இழந்து வருகிறது.

பாட்டின் தாளத்திற்கேற்ற ஆட்டமுறை சேலம் பகுதியில் உண்டு. ஆட்டம் பற்றிய விபரங்களைக் கேட்டபோது ஒண்ணாங் காலத்திற்குரிய ஆட்டம், இரண்டாங்காலத்திற்குரிய ஆட்டம் என்பது போலப் பாகுபாடு வைத்திருப்பதாகத் தெரிகிறது. பாடல்கள் 4½ கட்டைச் சுதியில் பாடப்படுகிறது. பாடலின் ஒவ்வொரு அடி முடிந்ததும் முகவீணை ஊதப்படும். பொம்மை ஆட்டுபவர் பாடிய பாடல் அடியை அப்படியே பின்பற்றி முகவீணைய ஊதாமல், பாடலின் இராக தாளத்திற்கேற்ப வித்தாரமாக்கி ஊதுவர்.

பெரிய பொம்மைகளுக்குக் கால் இல்லையாதலால், பொம்மைகள் நடந்து செல்லும்போது மிகக் கவனமாக மிருதங்கமும், சலங்கை யொலியும் எழுப்பப் பெற்று நடப்பது போன்ற மாயை உருவாக்கப் படுகிறது.

பொம்மலாட்டப் பாடல்கள் மிக எளிமையான நாட்டுப்புறப் பாடல்கள். நல்லதங்கை குழந்தைகளை அழைத்துக் கொண்டு மாமன் வீட்டுக்குச் செல்லும் போது பாடும் பாடல் ஒன்றைக் காண்போம்.

கண்ணே போவோம் எழுந்திரடா
பொன்னான மாமன் வீடு
கண்ணே காசிமா நகரம் விட்டு
மதுரைக்குப் போவோமப்பா
கண்ணே காசிமா நகரம் விட்டு
நாம் காட்டுக்கு வந்தோமப்பா
கண்ணே நாம் வனமா வனம் கடந்து
நாம் போவோமடா பாலர்களே
கண்ணே நாம் காடுமலை தாண்டிக்
காடு ஆறுமலை கடந்து
கண்ணே நாம் செடிமலை தாண்டிப்
போவமடா செல்வங்களே
கண்ணே காரை படர்ந்த வனம்
கரும்பலா காய்க்கும் வனம்
கண்ணே சூரை படர்ந்த வனம்
சொத்த பிலா காய்க்கும் வனம்
கண்ணே சிங்கம் உறங்கும் வனம்
சிறுபுலி தூங்கும் வனம்
கண்ணே காசிமா நகரம்விட்டுக்
கானகம் வந்தமப்பா
கண்ணே காரை கனி தாரேன்
கருத்தோடு நடந்துவாரும் - அட எம்மக்களா!

இந்தப் பாடல்கள் பாடப்படும்போது, சொற்கள் இனம் கண்டு கொள்ள முடியாத அளவு சிதைந்து வெளிவருகின்றன.

பாடலைத் தொடர்ந்து வரும் வசனங்களில், பாடலின் அடிகளே பெரும்பாலும் இடம்பெறும். பாடல்கள் எளிமையாக இருப்ப தால் அதனை அப்படியே வசனமாக மாற்றிக் கொள்ளவும் ஏது வாக இருக்கிறது.

தோற்பாவை நிழற் கூத்தில் உள்ளது போலவோ அல்லது இந்த நாடகத்திலேயே குட்டையன் கீச்சுக்குரலில் பேசுவது போலவோ மற்ற பாத்திரங்களின் உரையாடல்கள் பொம்மைக் குரிய மொழியாக இல்லை. கலைஞர்கள் தெருக்கூத்தில் பார்வை யாளர்களின் நேர் பார்வையில் எப்படிப் பேசி ஆடுவார்களோ அவ்வாறே பொம்மைகளைக் கையில் பிடித்துக் கொண்டு பேசி நடிக்கின்றார்கள்.

### சேலம் பொம்மலாட்டத்தில் சமய அழுத்தம் :

பெரும்பாலான நாட்டுப்புறக் கலைகள் வலுவான சமயச் சார்புடைய கலைகளாகவே இருக்கின்றன. சேலம் பொம்மலாட் டத்தின் அழுத்தமான சமயச் சார்பினைச் சபாக்களின் பெயர் மூல மாகவே விளங்கிக் கொள்ள முடியும். சேலத்திலுள்ள அனைத்துப் பொம்மலாட்டக் குழுவினரும் ''ஸ்ரீஇராம விலாச கட்டபொம்ம நாடகசபா,'' ''ஸ்ரீஇலட்சுமி விலாச கட்டபொம்ம நாடகசபா'' என்ற இரு பெயர்களில் ஏதேனும் ஒன்றினையே தங்கள் குழு வின் பெயராகக் கொண்டுள்ளனர். கலைஞர்கள் வைணவ சமயம் சார்ந்தவர்களாக இருப்பதால் சபாவிற்கும் இராமன் அல்லது இலட்சுமி பெயர் வைப்பதுடன் பொம்மைகளில் இராமர், சீதை ஆகிய இரு பொம்மைகளையும் புனிதமானதாகவும் கருது கின்றனர். நல்ல நாளில் நல்ல முகூர்த்தத்தில் அவ்விரு பொம்மைகளுக்கும் விமரிசையாகத் திருமணம் செய்விக்கப்படுகி றது. அன்று சீதைக்குக் கட்டப்படும் தாலியினை எப்போதும் எந்தக் காரணம் கொண்டும் அவிழ்க்கப்படுவது இல்லை. பொம்ம லாட்ட மேடையில் இராமர் சீதை பொம்மைகள் அடுக்கப்பட் டுள்ள பெட்டி இருப்பதால், செருப்புப் போட்டுக்கொண்டு மேடை மேல் ஏறவும் அப்பெட்டி மேல் உட்காரவும் அனுமதிக்கப்படுவது இல்லை. அத்துடன் ஒவ்வொரு ஊரிலும் கூடாரம் போட்டு நிகழ்ச்சிகளைத் தொடங்கும்போது முதல் நாள் நிகழ்ச்சியாக லவகுசா நாடகத்தை நடத்திய பின்னர்தான் பிற கதைகளை நடத்துகின்றனர்.

பொம்மைகளைப் புராண இதிகாசப் பாத்திரங்களாக உயிரூட்டிக் கதையுணர்வோடு கலையுணர்வினை ஒன்றச்செய்து மக்களை மகிழ வைக்கும் ஒரு வடிவம் பொம்மலாட்டக்கலை. கிராம மக்களிடையே இன்றும் இரசனையைத் தூண்டும் குணநலம் கொண்டது இக்கலை. உழைத்துக் களைக்கும் மக்களுக்கு உற்ற பொழுதுபோக்காகத் திகழ்கிறது. எனினும் தகுந்த பேணுதல் இல்லாது வலுவிழந்துபோய் பல இடங்களில் ஓரளவு மறைந்தும், மறந்தும் போய்விட்டது. சில இடங்களில் திரைப்படத் தாக்கத்திற்கு ஈடுகொடுக்க வேண்டி உட்படுத்தப்பட்ட உத்திகள்-அதன் நிஜமான தன்மையை மாற்றியுள்ளது. எனவே பொம்மலாட்டக் கலை அதன் உரிய உயரிய தன்மையுடன் வாழப் பாமரர், படித்தவர், அரசு அனைவரின் ஆதரவும் தேவை.



# 17. கொங்கு நாட்டுத் தாலாட்டு

க. இந்திரசித்து,
தமிழ்த்துறை ஆய்வாளர்
பாரதியார் பல்கலைக்கழகம்.

*முன்னுரை*

பண்டைத் தமிழகத்தில் சேரநாடு, சோழ நாடு, பாண்டிய நாடு இருந்ததைப் போலவே கொங்கு நாடு என்ற பிரிவும் இருந்தது. 'கொங்கு நாடு' அல்லது 'கொங்கு மண்டலம்' என்று அழைக்கப்படும் இப்பகுதியை பற்பல சிற்றரசர்கள் மாறி மாறி ஆட்சி செய்தனர் என்பதையும் பிறகு அது சோழ மண்டலத்தின்

ஒருபகுதியாக இணைக்கப்பட்டு, சோழர்களால் ஆட்சி செய்யப் பட்டது என்பதையும் வரலாறு சுட்டிக்காட்டுகிறது. கோயம்புத்தூர் மாவட்டம், சேலம் மாவட்டம், தருமபுரி மாவட்டத்தின் ஒருபகுதி ஆகியவைகள் சேர்ந்தவையே இன்று 'கொங்கு நாடு' என்னும் பகுதியாக அழைத்து வருகிறோம். கொங்கு நாட்டுப்புற இயலின் ஒரு கூறாக விளங்கும் 'தாலாட்டுப் பாடல்களை' ஒரு பொதுப் பார்வையில் பகுப்பாய்வு செய்து பார்ப்பதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

## நாட்டுப்புற இயல்

நாட்டுப்புற மக்களைப் பற்றியும் அவர்களின் இலக்கியங் களைப் பற்றியும் ஆய்வதற்கு 'நாட்டுப்புற இயல்' என்று பெயர். ஆங்கிலத்தில் இதனை Folklroe என்று அழைப்பர். நாட்டுப்புற இயலைப் பற்றி ச. வே. சுப்பிரமணியன் அவர்கள்,

> "நாட்டுப்புற இயல் என்பது பரந்துபட்ட கூறுகளை உள்ள டக்கியதாகும். அது நாட்டுப்புறக் கலைகள், கைவினைத் திறன்கள், கருவிகள், ஆடை அணிவகைகள், பழக்க வழக் கங்கள், நம்பிக்கைகள், மருத்துவ முறைகள், இசைகள், நடனங்கள், விளையாட்டுக்கள், கேளிக்கைகள், பேச்சு வழக்குகள் மற்றும் வாய்மொழியால் உணர்த்தப் பெறும் நாட்டுப்புற இலக்கியங்களை உள்ளடக்கிய ஒன்றாகும்"

என்று குறிப்பிடுகிறார். நாட்டுப்புற இயலில் பெரும் பங்கு வகிப்பது நாட்டுப்புற இலக்கியங்களாகும். நாட்டுப்புற இலக்கி யங்களை 'நாடோடி இலக்கியம்' 'வாய்மொழி இலக்கியம்' 'எழுதா இலக்கியம்' என்று பலபெயரிட்டு அழைப்பர். நாட்டுப் புற இலக்கியங்களைப் பற்றி தொல்காப்பியரும் குறிப்பிட்டுள்ளார்.

> "பாட்டுரை நூலே வாய்மொழி பசியே
> அங்கதம் முதுசொல் அவ்வேழ் நிலத்தும்
> வண்புகழ் மூவர் தண்பொழில் வரைப்பின்
> நாற்பே ரெல்லை அகத்தவர் வழங்கும்
> யாப்பின் வழிய தென்மனார் புலவர்"[2]

---

1. சுப்பிரமணியன், ச. வே., தமிழில் விடுகதைகள், ப.3

2. தொல். பொருள். 384

என்ற தொல்காப்பிய நூற்பா நாட்டுப்புற இலக்கியத்தைக் குறிப் பிடுகின்றது. சு. சண்முக சுந்தரம் அவர்களும்,

> ''தொல்காப்பியர் கூறும் பண்ணத்தி இன்றைய நாட்டுப் புறப் பாடல்களைக் குறிக்கிறது எனலாம். 'பண்ணத்தி' (பண் + நத்தி) என்ற சொல்லுக்குப் பண்ணை விரும்புவது என்று பொருள். இசைப்பாட்டிலும் இன்னோசை இருப் பினும் இசைப்பாட்டிற்குரிய வரையறை இல்லை''[3]

என்று குறிப்பிடுகின்றார். தொல்காப்பியம் வாய்மொழி இலக்கி யத்தை குறிப்பிடுகின்றது என்ற கருத்தை அ. மு. பரமசிவானந்தம் அவர்களும் வலியுறுத்திக் கூறுகிறார்.[4]

## நாட்டுப்புற இலக்கியம்

நாட்டுப்புற இயலில் முதன்மையாகத் திகழுவது நாட்டுப் புற இலக்கியமாகும். நாட்டுப்புற இலக்கியத்தை ஐந்து பெரும் பிரிவுகளாகப் பிரிக்கலாம்.

1. நாட்டுப்புறப் பாடல்கள்
2. நாட்டுப்புறக் கவிதைகள்
3. நாட்டுப்புற கதைப் பாடல்கள்
4. பழமொழிகள்
5. விடுகதைகள்

இவ்வைந்து பெரும் பிரிவுகளுக்குள் தலையாயதாகத் திகழுவது நாட்டுப்புற பாடல்களாகும். நாட்டுப்புறப் பாடல்களை, தாலாட்டுப் பாடல், குழந்தைப் பாடல், விளையாட்டுப் பாடல், தொழிற் பாடல், காதற் பாடல், திருமணப்பாடல், பக்திப்பாடல், ஆட்டப் பாடல், ஒப்பாரிபாடல், என்று பலவகையாகப் பிரிக்கலாம். நாட்டுப்புறப் பாடல்கள் இடத்திற்கு இடம் உள்ளடக்கத்திலும், உருவத்திலும் மாறுபடும். ஆங்காங்கு வாழும் மக்களின் பழக்கங் களுக்கு ஏற்ப பாடல்களின் கருத்தும் மொழியும் மாறுபடும் தன்மை நிறைந்தது. நாட்டுப்புறப் பாடல்களின் ஒருபிரிவான தாலாட்டுப் பாடல் கொங்கு நாட்டில் எவ்வாறு வழங்கிவருகிறது என்பதையும், அதன் உள்ளடக்கக் கூறுகளையும் இனிபார்ப்போம்.

---

3. சண்முகசுந்தரம், சு., நாட்டுப்புற இலக்கியத்தின் செல் வாக்கு, பக். 2 - 3

4. பரமசிவானந்தம், அ.மு., வாய்மொழி இலக்கியம், ப. 11

## கொங்குநாட்டுத் தாலாட்டு

கொங்கு நாட்டில் வழங்கி வரும் தாலாட்டுப் பாடல்கள் கொங்கு நாட்டிற்கே உரிய தனித்தன்மையோடும், மண்ணின் இயல்போடும் காணப்படுகின்றன. தாலாட்டைப் பற்றி சு. சண்முக சுந்தரம் அவர்கள்,

> ''தாலாட்டின் பொருள் அடக்கம் பொதுவாக குழந்தையைத் தூங்கச் செய்வதுதான் என்றாலும் கூட அவ்வாறு தூங்கச் செய்வதற்கு முன் பிள்ளையாரைப் போன்று பிள்ளையைச் சுற்றி வந்தே உலகைச் சுற்றி விடுகிறார்கள். தாலாட்டில் இல்லாத பொருளே இல்லை என்று சொல்லும் வகையில் அனைத்தும் அடக்கமாகியுள்ளன''[5]

என்று கூறுகிறார். தாலாட்டு தமிழ் இலக்கியங்களில் பெரும் தாக்கத்தை ஏற்படுத்தி இருக்கின்றன. சங்க இலக்கியங்களில் 'தாலாட்டுப் பாடலின் தாக்கம் குறைவாக இருந்தபோதும் பிற்கால இலக்கியங்களில் தாலாட்டுப் பாடல்கள் பெரும் அளவில் இடம்பெற்றன. பிள்ளைத் தமிழ் போன்ற சிற்றிலக்கியங்களில் ''தாலப்பருவம்'' என்ற ஒரு பகுதி முழுவதும் தாலாட்டுப் பாடல்களாகவே அமைக்கப்பட்டன. அப்பாடல்களின் இறுதியில் ''தாலே தாலேலோ'' போன்ற தாலாட்டுச் சொற்கள் இடம் பெற்றன. தாலாட்டுச் சொற்களைப் பற்றி,

> ''தாலாட்டு என்ற சொல் தால்+ஆட்டு என்ற சொற்சேர்க்கையால் பிறந்து இருக்கலாம். தால் என்றால் 'நாக்கு' என்றும் பொருள் உண்டு. நாவை ஆட்டிப் பாடுவதால் 'தாலாட்டு' என்ற பெயர் பெற்று இருக்க வேண்டும். தால் என்பதற்கு தொட்டில் என்றும் பொருளுண்டு. தொட்டிலை ஆட்டிப்பாடும் தொட்டில் பாட்டு தாலாட்டு என்று பெயர் பெற்றிருக்க வேண்டும். தாலாட்டு, தாராட்டு, தாலேலோ, ஓராட்டு. ரோராட்டு, ராராட்டு, தொட்டில் பாட்டு, ஓலாட்டு, திருத்தாலாட்டு என்று பலவாறு தமிழில் இலக்கிய வழக்கிலும் உலக வழக்கிலும் வழங்கி வருகின்றன''[6]

---

5. சண்முக சுந்தரம், சு., தாலாட்டுப்பாடல்கள், ப. 10

6. சண்முக சுந்தரம், சு., தாலாட்டுப் பாடல்கள், ப. 4

என்று விளக்கி கூறப்படுகின்றன. கொங்கு நாட்டில் வழங்கிவரும் தாலாட்டுப் பாடல்கள், 'தாலாட்டு' என்றும், சில இடங்களில் 'தாராட்டு' என்றும் அழைக்கப்படுகின்றன. கூட்டுக் குடும்ப சமுதாய அமைப்பில் குழந்தைப் பேறு மிகவும் வேண்டப்படுவது ஒன்றாகும். அப்போது வாய்க்கப்படாத பெண்டிர் மிகவும் இழிவாக கருதப்பட்டனர். அதனால் பெண்கள் தங்களுக்கு ஒரு குழந்தை வேண்டும் என்பதில் அதிக ஈடுபாடு காட்டி இறைவனிடம் நோன்பு நோற்றனர். மக்கள்பேறு தேவை என்பதற்கு கீழ்க்கண்ட காரணங்கள் சுட்டிக்காட்டப் படுகின்றன.

> ''1. இனம் அழியாமல் பாதுகாப்பதற்கும், 2. விட்டுச் செல்லும் சொத்துக்களுக்கு வாரிசாக இருப்பதற்கும், 3. பெற்றோர்களின் இறுதி காலத்தில் அவர்களுக்கு உணவளித்துப் பாதுகாப்பதற்கும், 4. ஈமச் சடங்குகளைச் செய்வதற்கும் குழந்தைப் பேறு விரும்பப்படுகிறது''[7]

கொங்கு நாட்டில் வழங்கி வரும் தாலாட்டுப் பாடல்களை ஆராய்ந்தால் அதில் தமிழகத்திற்குரிய பொதுக் கூறுகளும், கொங்கு மண்ணுக்குரிய சிறப்புக்கூறுகளும் காணப்படும்.

*புராணக் கூறுகள்*

இராமாயணம், மகாபாரதம் போன்ற புராண இதிகாசக் கூறுகளும், கதைக்குறிப்புகளும் கொங்கு நாட்டில் வழங்கிவரும் தாலாட்டுப் பாடலில் காணப்படுகின்றன. அயோத்தி மாநகரத்தை ஆண்ட தசரதன், அவனுக்கு மகனாகப் பிறந்த இராமன் இவர்களைப் போன்று பிறந்த குழந்தை இது என்று தாலாட்டுப் பாடல்கள் சுட்டுகின்றன. இக்கருத்தை,

> ''சீரான அயோத்தி வாழ்
> தசரதனார் பேரன் என
> பேரான ராமனிடம் பிரபலத்தால்
> வந்தபிள்ளை கண்ணே!''
> கரணம் தொலைக்க வென்று

---

7. இராமநாதன், ஆறு., நாட்டுப்புறப்பாடல் காட்டும் தமிழர் வாழ்வியல், பக். 90-91

கனமாபதியை விட்டு
பூரணமாம் வால்மீகர்
புண்ணியத்தில் வந்த கண்ணே!''[8]

என்று தாலாட்டுப் பாட்டு குறிப்பிடுகிறது.

அயோத்தி நகரை விட்டு வனத்தில் வந்து தங்கி வாழ்ந்த இராமபிரானின் கதையை

''சீரான அயோத்தி
சீமை விட்டு காடுவந்தோம்
கரடி புலி ஆறு சிங்கம்
கூடிவாழுமிந்த
கொடுவனத்தே நித்திரையோ
அச்சமில்லை என்று சொல்லி
அரசாண்டு வீற்றிருந்தோம்
நச்சரவு போலவந்த
நச்சிரயா கண்ணுறங்கு''[9]

என்ற தாலாட்டுப் பாடல் தெரிவிக்கிறது. இப்பாடல் கொங்கு நாட்டின் ஒருபகுதியாகிய சேலம் வட்டத்தில் வழங்கிவருகிறது.

*வருணனைகள் :*

தாலாட்டுப் பாடல் பல்வேறு சூழ்நிலைகளில் பாடப் பெறும். வீடுகளில், வேலைக்குச் சென்ற பெண்கள் அங்கேயே மரத்தில் தொட்டில் கட்டி ஆட்டும் போதும் பாடல் தோன்றும். அப்போது சூழ்நிலையைப் பற்றியும் குழந்தைகளைப் பற்றியும் தாய் வருணித்துப் பாடுவாள்.

> ''குழந்தையைத் தன்மனம் எண்ணியவாறெல்லாம் உருவகித்துத் தாய் வருணித்தல் தாலாட்டின் முக்கியமான பகுதி. வருணனைகள் தாய்மாரின் செல்வ நிலை. ஜாதி, கற்பனை, சூழல், தொழில், மனமுதிர்ச்சி, ஆகியவற்றைப் பொறுத்து வேறுபடும்''.[10]

---

8. களஆய்வில் சேகரித்தது (உதவியவர் : பெருமாள்செட்டியார், பேளூர் வயது-80)
9. வானமாலை, நா., தமிழர் நாட்டுப்பாடல்கள், ப. 136
10. சரசுவதி வேணுகோபால், தமிழக நாட்டுப்புறவியல், ப. 23

என்று நாட்டுப்புற இயல் ஆய்வாளர் சரசுவதி வேணுகோபால் குறிப்பிடுகிறார். தாலாட்டுப் பாடல் குழந்தைகளை, 'கண்ணே'[11] ''துரையே'',[12] ''மயிலே''[13], போன்ற பல்வேறு சொற்களில் வருணிக்கிறது.

*கற்பனைகள்:*

தாய் தன் குழந்தை மீது கொண்ட அன்பு அளவிடற்கரியதாகும். அதனால் தாலாட்டுப் பாட்டில் அளவிறந்த மிகைக் கற்பனைகளையும் நம்மால் காணமுடிகின்றது.

''ஆரோரோ ஆரிரரோ
ஆரிரரோ ஆராரோ
கண்ணான கண்ணுறங்கு
கான மயிலுறங்கு - உன்ன
அத்தை அடிச்சாளோ
அலறிப்பூ செண்டாலே
மாமன் அடிச்சானோ
மல்லிப்பூ செண்டாலே''[14]

என்ற பாடலில் அலரிப்பூச் செண்டாலும், மல்லிகைப் பூ செண்டாலும் தன் குழந்தை அடிக்கப்படுவதாகத் தாய் கற்பனை செய்கிறாள்.

''பச்சை வளையலிட்டு
பவளக்கால் தொட்டிலிட்டு
தொட்டிலிட்ட அம்மானும் இப்ப
பட்டினியா போனாரே
நெல்லுக்குத்தி சோறாக்க
நேரப்படுமின்னு சொல்லி
முத்து குத்தி சோறாக்கி
முளைப்பாலால் கறிசமைச்சி''[15]

---

11. களஆய்வில் சேகரித்தது (உதவியவர்: பெருமாள் செட்டியார், பேளூர், வயது : 80)
12. கள ஆய்வியல் சேகரித்தது (உதவியவர் : சு. கலாவதி, திருச்செங்கோடு, வயது : 30)
13. களஆய்வில் சேகரித்தது (உதவியவர் : சு. கலாவதி, திருச்செங்கோடு, வயது :30)
14. கள ஆய்வில் சேகரித்தது (உதவியவர் : செ. சி. இளந்திரையன், செல்லியம்பாளையம், வயது : 35)
15. கள ஆய்வில் சேகரித்தது (உதவியவர் : செ.சி. இளந்திரையன், செல்லியம்பாளையம், வயது : 35)

என்ற தாலாட்டுப் பாடலீல் பவளத்தால் தொட்டில் அமைப்ப தாகவும், முத்துக்களையே உரலில் இட்டு குத்தி அரிசியாக மாற்றி சமைப்பதாகவும் கற்பனை செய்யப்பட்டுள்ளது. இவ்வாறு மிகையாக தாய் கற்பனை செய்வது தன் குழந்தை மீது அவர் கொண்டுள்ள அன்பையே வெளிப்படுத்துகின்றது.

***உறவு முறைகள்:***

தாலாட்டுப் பாடல்கள் குடும்பத்தில் நிலவும் உறவு முறை களையும், உறவு முறைகளின் நெருக்கத்தையும் எடுத்துக்காட்டு கின்றன.

> "தாலாட்டு மூலம் குடும்ப உறவு முறைகளையும் சடங்கு முறைகளையும் அறிந்துக் கொள்ளலாம். சமுதாயத்தில் குடும்பத்தின் நிலையும் குடும்பத்தில் பிள்ளையின் நிலையும் முக்கியமானது; முதன்மையானது. குடும்பத்தின் உறவுகள் பல உள் வட்டங்களையும் வெளி வட்டங்களையும் கொண் டுள்ளன.
>
> பிள்ளை குடும்பத்துக்கு முக்கியமான உறுப்பு. தாய், தந்தை பிள்ளை மூன்றும் சேர்ந்ததை மானிடவியலார் நடுவனுக் குடும்பம் (Nuclear family) என்றும் முதல் நிலைக் குடும்பம் (Primary family) என்றும் உடனடிக் குடும்பம் (Immediate family) என்றும் அழைப்பர்."[16]

என குடும்பங்களை வகைப்படுத்திக் காட்டுவர். தாலாட்டுப் பாடலில், தாய்மாமன், அத்தை, பாட்டன், தாய், தந்தை போன்ற உறவுகள் மிகுதியாகப் பேசப்படுகின்றன.

"கண்ணான கண்ணுறங்கு
கானமயிலுறங்கு - உன்ன
அத்தை அடிச்சாளோ
அலரிப்பூ செண்டாலே
மாமன் அடிச்சானோ
மல்லிப்பூ செண்டாலே"

---

16. சண்முகசுந்தரம், சு., தாலாட்டுப்பாடல்கள், ப. 21 - 22
17. கள ஆய்வில் சேகரித்தது
(உதவியவர்: செ. சி. இளந்திரையன், செல்லியம்பாளையம் வயது; 35)

என்ற தாலாட்டுப் பாடலில் அத்தை, மாமன் ஆகியோர் குறிப் பிடப்படுகின்றனர்.

... ... ...
பாட்டனார் எல்லையிலே
பட்டுவிலை மதிக்க - உனக்கு
பத்துப்பேர் தாய் மாமன்
முப்பாட்டன் எல்லையிலே - உனக்கு
முத்து வந்துவிக்குதய்யா''[18]

என்ற பாடலில் பாட்டன், முப்பாட்டன், தாய்மாமன் போன்ற உறவுகளில் நெருக்கம் சுட்டிக்காட்டப்படுகின்றன.

''ஆராரோ ஆரிரரோ
ஆரிரரோ ஆராரோ
பச்சை வளையலிட்டு
பவளக்கால் தொட்டிலிட்டு
தொட்டிலிட்ட அம்மானும் இப்ப
பட்டினியா போவாரே!''[19]

என்ற பாடலில் தாய்மாமன் உறவை 'அம்மான்' என்று பெயரிட்டு அழைப்பதைக் காணலாம்.

**கடவுள் சிந்தனை :**

கொங்கு நாட்டுத் தாலாட்டுப் பாடல்களில் கடவுளைப்பற்றிய செய்திகள் மிகுதியும் வருகின்றன. குழந்தைப் பேறு வேண்டி தாய்மார்கள், தவம் இருந்ததைப் பற்றியும், விரதம் பூண்டதைப் பற்றியும் பல பாடல்கள் எடுத்துக் கூறுகின்றன.

''கண்ணுமல பொண்ணுமல
கந்தருள வேலுமல - வேலுமல
இல்லையென வேண்டி தவனம்
செய்தோமமா

18. களஆய்வில் சேகரித்தது (உதவியவர்: பெருமாள் செட்டியார், பேளூர், வயது: 80)

19. களஆய்வில் சேகரித்தது (உதவியவர்: செ.சி. இளந்திரையன் செல்லியம்பாளையம், வயது: 35)

வாசலிலே வன்னிமரம் உங்கவம்சமே
ராஜகுலம் -
ராஜகுலம் பெற்றெடுத்தரத்தினமே நீ
கண்வளராய்''[20]

என்ற பாடலில் குழந்தைப்பேறு வேண்டி முருகப் பெருமானை நோக்கி தவம் இருந்த ஒரு தாயின் மனநிலையை புலப்படுத்துகின்றது. முருகப்பெருமானோடும், இராமபிரானோடும் தன் குழந்தையை ஒப்பிட்டுப்பாடும் பாடல்கள் காணப்படுகின்றன. தன்னை யசோதையாகவும், தன் குழந்தையை கண்ணபிரானாகவும் உருவகித்து தாய்மார்கள் பாடும் தாலாட்டுப்பாடல்களும் உண்டு.

*சமுதாயநிலை*

கொங்கு நாட்டில் பாடப்பட்டு வரும் தாலாட்டுப் பாடல் சமுதாய நிலைமைகளையும் பழக்க வழக்கங்களையும் படம்பிடித்துக் காட்டுகின்றன. இவ்வகைத் தாலாட்டுப் பாடல்களைப் பற்றி,

''நாட்டுப் புறப் பாடல்களில் சிறந்த முறையில் களிச்சுவை நிரம்பியதும், கற்பனை நிறைந்ததும், அலங்காரம் அழகு செய்வதும் தாலாட்டுப்பாடலே எனலாம். பணக்காரத் தாய் மரத்தொட்டிலில் குழந்தையைக் கிடத்தித் தாலாட்டுப்பாடுகிறாள். அதுபோலவே ஏழைத்தாய் மரக்கிளையில் கிழிந்த துணியினால் தூலிகட்டி அதில் குழந்தையைக் கிடத்தி தாலாட்டுப்பாடுகிறாள். ஏழையும் பணக்காரரும் பாடும் பாடல் தாலாட்டுப்பாடலே''.[21]

என்று குறிப்பிடப்படுகிறது. எனவே தாலாட்டுப்பாடல்களில் செல்வநிலையும் ஏழ்மைநிலையும் எடுத்துக்காட்டப்படுகின்றன.

''அம்புஜ நயனனே இன்பமாய் உடன் - நீ
தூங்கவே
கொப்பரை வெந்நீரும் பக்குவமாய்
காய்ச்சியே

---

20. களஆய்வில் சேகரித்தது (உதவியவர் : சு. கலாவதி, திருச்செங்கோடு, வயது: 30)
21. பெரியண்ணன், கோ., கிராமியப்பாடல்கள், ப. 99

துரையே நீர் உனக்கு ஸ்தானம்
பண்ணியே,
கண்ணுக்கு கஞ்சமிட்டு கஸ்தூ ரிபொட்டும்
இட்டே - கண்ணே
தங்கரணாபட்டை, சிலம்புத்தண்டை,
மிஞ்சியுடனே
கலகலவென நீ தூங்கவே - கண்ணே
கண்ணுறங்கு !''[22]

என்ற தாலாட்டுப் பாடல் தாயின் குடும்பத்தில் நிலவும் செல்வ நிலையைக் குறிப்பிட்டு கூறுகிறது. ஆடை, அணிகலன் போன்றவைகள் குடும்பத்தின் செல்வநிலையைச் சுட்டிக்காட்டுகின்றன.

''பச்சை வளையலிட்டு
பவளக்கால் தொட்டிலிட்டு
தொட்டிலிட்ட அம்மானும் - இப்ப
பட்டினியா போனாரே;
நெல்லுகுத்தி சோறாக்க
நேரப்படுமின்றி சொல்லி
முத்து குத்தி சோறாக்கி
முளைப்பாலால் கறி சமைச்சி''[23]

என்ற பாடல் மிகை கற்பனையாயினும் இதன் அடிப்படையில் தன் வீட்டுக்குச் செல்வ வளமையினை சுட்டிக்காட்டும் தாயின் மனப்பாங்கை நம்மால் புரிந்துகொள்ள முடிகின்றது. குழந்தை வேண்டி தவம் இருக்கும் தாய்மார்களைப் பற்றி பல பாடல்கள் குறிப்பிட, ஒரு பாடல் குழந்தைப் பிறந்ததை வெறுத்துப் பேசுகின்றது. இதற்குக் காரணம் அவ்வீட்டின் ஏழ்மையாக அல்லது ஆதரவற்ற நிலையாக இருக்கலாம்.

''சீரான அயோத்தி
சீமைவிட்டு காடுவந்தோம்
காடு மலைகளிலே
கரடிபுலி ஆளி சிங்கம்
கூடிவாழுமிந்த

---

22. களஆய்வில் சேகரித்தது (உதவியவர்: சு. கலாவதி, திருச்செங்கோடு, வயது: 30)
23. களஆய்வில் சேகரித்தது (உதவியவர்: செ,சி, இளந்திரையன் செல்லியம்பாளையம், வயது: 35)

கொடுவனத்தே நித்திரையோ
அச்சமில்லை என்று சொல்லி
அரசாண்டு வீற்றிருந்தோம்
நச்சரவு போல வந்த
நச்சிரைய பண்ணுறங்கு''[24]

என்ற பாடலில் தாய் தன் குழந்தையின் வரவை ''நச்சரவு'' என்று குறிப்பிடுவதன் மூலம் தன் குடும்பத்தின் ஏழ்மையை அல்லது துன்பத்தை எடுத்துக் கூறுகின்றாள். கொங்கு நாட்டு தாலாட்டுப் பாடல்கள் ஓரளவு சாதி அமைப்பையும் பெருமளவு தொழில் அமைப்பையும் குறிப்பாகவும் வெளிப்படையாகவும் சுட்டிக்காட்டு கின்றன. பார்ப்பன சமுதாயத்தைச் சார்ந்தவரிடம் இருந்து சேக ரிக்கப்பட்ட தாலாட்டுப் பாட்டில் காணப்படும் ''அம்புஜ நயனம்'' ''ஸ்தானம்'' போன்ற சொற்கள் அவர்களுடைய சாதி அமைப்பை ஓரளவு சுட்டிக்காட்டுகிறது எனலாம். விவசாயக் குடும்பத்தை சேர்ந்தவர்களிடம் சேகரித்த பாடல்களில் காணப்படும் ''நெல்லு குத்துதல்'' ''உரலில் இட்டு அரிசியாக்குதல்'' போன்ற சொல் அமைப்புக்கள் அவர்கள் விவசாயத் தொழிலில் ஈடுபட்டிருப்பதை உணர்த்தி நிற்கிறது எனலாம்.

கொங்கு நாட்டு தாலாட்டுப் பாடல்கள் மொழியியல், உளவியல், சமூகவியல், மானிடவியல் போன்ற பல துறை நோக்கில் ஆய்வதற்குரிய செய்திகளை உள்ளடக்கிக் கொண்டிருக்கின்றன.

*முடிவுரை :*

இவ்வாறு கொங்கு நாட்டுத் தாலாட்டுப் பாடல்களை ஒரு பொதுப் பார்வையில் பகுப்பாய்வு செய்து பார்க்கும்போது அதில் காணப்படும், புராணக்கூறுகள், வருணனைகள், கற்பனைகள், உறவுமுறைகள், கடவுள் சிந்தனைகள், சமுதாய நிலைகள், பழக்க வழக்கங்கள் போன்றவைகளை நம்மால் அறிந்துகொள்ள முடிகின் றது. கொங்கு நாட்டு தாலாட்டுப் பாடல்கள் கொங்கு நாட்டு தாலாட்டுப் பாடல்கள் கொங்கு நாட்டு மக்களுடைய சமுதாய வாழ்க்கையையே படம் பிடித்துக் காட்டுகிறது என்றால் அது மிகை அல்ல.



24. வானமாமலை, நா., தமிழர் நாட்டுப்பாடல்கள், ப, 136.

# 18. KONGU LANGUAGES AND LINGUISTICS

*K. KARUNAKARAN, M. JAYAKUMAR & C. SIVASHANMUGAM*
Bharathiar University, Coimbatore.

## Introduction

The objective of this study is to present a brief outline of (i) the use of languages, (ii) the various types of linguistic studies that have been made so far with reference to these lauguages and (iii) some of the problems pertaining to the existing bi or multilingual situation in some of the areas of the Konguland from the point of view of modern linguistics (structural and social). As this study is the first of its kind which deals with Kongu languages and linguistics at one place, an attempt has been made here to present a brief review of the early studies that have been made by some of the scholars in the past. There are three dimensions viz. i) description of Tamil speech in use in Kongu region, ii) the practice of majority vs minority languages in the area concerned and iii) the patterns and problems of the existing bi / multilingualism. Based on some of the observations and findings of some of the studies that have been made by various scholars at different periods an attempt has been made here to suggest certain strategies for undertaking more systematic research studies on Kongu languages and linguistics in the future which will be of immense use for making a more adequate and authentic history of the Konguland. History of a land as we all know, is a coherent presentation of all those relevant facts and figures of various events, works, etc. pertaining to the people of that particular land, chronologically in a more systematic and well formalised way.

So, a study of this type will be supplementing certain facts, figures as well as new thoughts relating to the structure and use of the languages of the area and their linguistics.

## Kongu Languages

The majority language of the Konguland is Tamil. There are a number of minority languages both tribal and non - tribal which are in use in various parts of the Kongu region. Languages like Toda, Kota, Paniya, Kasaba, Kattunaicka, Irula, Lambadi, Kurumba, Kadar are the significant tribal - languages of the area. However, there are certain dialects of Tamil as well as Kannada spoken by the tribal groups such as Malasar, Pulaiyar, Muduvar, Solagar, etc. Languages like Telugu, Kannada, Malayalam, Urdu, Tulu, Konkani, Gujarathi, Marathi, Hindi, etc. are the non - tribal and literary languages which are in use in some of the areas of the Konguland. There are certain distinct Tamil as well as Kannada dialects spoken by the scheduled tribes living in the hill areas viz. Kollimalai, Paccaimalai, Kalvarayanmalai, Servarayanmalai, Javadhumalai, Anaimalai, Dimbam, etc. These languages belong to two different language families viz. Dravidian and Indo-Aryan. Among the Dravidian languages of the area, many of them are tribal languages spoken in the present day Nilgiris district. Most of these languages have now been described linguistically and grammars (linguistic descriptions) are available for these languages. However, significant and adequate attempts have not been made so far to make writing systems for these Dravidian tribal languages, though there is a language policy according to which, wherever a new writing system is made for a minority / tribal language of a region, it is advisable to make the new script system based on the script system of the majority language of the region or state language. For example, when we try to make a writing system for the Toda or Kota language of Nilgiris most of the scripts will be based on the Tamil scripts, and only some of the distinctive sounds exclusively found in these languages

(like the centralised vowels, fricatives, etc.) have to be given new symbols as additions to the Tamil script system.

The common language of interaction for inter and intra group communication and interaction in majority of cases is Tamil. However, there are certain dominant minority linguistic groups which make use of their languages for the intragroup interaction as well. This in no way minimizes the use of the regional language in formal or informal situations, because for all practical purposes Tamil (the majority language) is used.

The earliest extant grammar of Tamil, namely, Tolkappiam speaks of dialect variation found in Tamil, by classifying the Tamil land into various sub-regions. So, the study of Tamil speech and its variations is not a new area of study for Tamil grammarians and linguistics. However, after the advent of the modern structural linguistics we are able to describe Tamil dialects more adequately, explicitly and in a well formalized manner. Though, some references and sporadic research papers on Tamil dialects with particular reference to the classification appeared at different times, the first fullfledged description of a Tamil dialect of Kongu region was published by the Annamalai University in the year of 1971 under the title of *"The Kollimalai Tamil Dialect"* written by K. Karunakaran. This was based on the research conducted by the author from 1964– 68, to describe the speech behaviour of the Kollimalai tribes, linguistically. The people of Kolli hills area popularly known as *Kongu Malaiyalis* (here the term *malaiyali* refers to a person who lives in the hills) are also known as Konge Gounders, but classified under the ST group. The naming itself brings out the regional identity which they possess. The practice of giving names such as *Kongan, Konga gounder*, etc. for males and *Kongayi, Kongalayi, Kongi* for women folk are quite commonly found. Also it is quite interesting to note that the names of some of their local deities are Kongan, Kongalayi, Kongi, etc. which very well bring to light that they belong

to Kongu land and speak a dialect of Tamil with lot of deviations from the so-called standard spoken variety.

As far as the non-tribal minority languages of this region are concerned most of them are used only for oral communicative purpose, for intra group interaction and as home language for several centuries. However, after the independence, as per the constitutional safeguard measure for the minorities and SC / ST population of our nation, some of these languages were gradually introduced in formal use. For example, languages like Telugu, Kannada, Malayalam, Urdu, etc. are being taught as second languages in some of the bi / multilingual areas (like the border areas of neighbouring linguistic states). Also some of these languages have been given the status of medium of instruction in the school level, in the above said areas.

So, we find that the languages of the area - both majority and minority (including the tribal languages) have been linguistically described but for some of the tribal dialects like Solaga, Paliya, etc. The Centre of Advanced Study in Linguistics at the Annamalai University has bought out the phonclogy, vocabulary and grammars of some of these Dravidian Tribal languages of the Kongu land during the last 20 years. A study of the Lambadi language spoken in the Mettur area of the Kongu region has been carried out by Radhakrishnan (1983) which presents a fullfledged grammar for that Indo-Aryan language. Yet another study on Lambadi has been made by Boopathy (1980). This dialect of Lambadi is being spoken by the tribals living in the Dharmapuri forest area. For the first time the so-called Dravidian dialects have been adequatly analysed and given the status of independent languages based on the studies conducted by the Annamalai University. It is worth mentioning, that pioneering research has been made by Emeneau and Burrow, as early as in the 1930s with reference to the description of Nilgiris languages and dialects. Their monumental work namely Dravidian Etymological Dictionary was a milestone. Preparation of a

systamatic language planning model for a nation largely depends on the reflection of bi / multilingual nature of different regions of the nation and its national goal. India is a multi - lingual, multi - ethnic, multi - religious socio-linguistic giant like USSR. Study of languages and their regional and social variations, relationship of majority vs minority languages in terms of linguistic features and social relationship, attitudes of the minority linguistic group towards the existing language policies of different regions are some of the areas that need to be studied before proposing any language policy.

## Language Use

Identification and study of bi / multilingualism in a region can be carried out by applying domain cluster analysis. The habitual language use in different domains such as family (among different groups), friendship, neighbour - hood, traditional social institutions, mass-media, religions, etc. can be grouped under primary domain cluster. Language use in this cluster is evolved in response to the needs of the speech community. There is no external or governmental direction to use a particular language in a particular domain of this cluster. Language use in the secondary domain cluster includes languages in practice in judicial system, police, modern education, mass media, economic institution, democratic institutions and other modern institutions of the present day democracy, centralized economic system, modernization and industrialization. The communication net - work due to necessity expanded from the village level (in this region a single speech community) to higher level multilingual situation. An empirical study (Jayakumar, 1985) conducted among the minority linguistic groups in the Dharmapuri district, a true representative of bi / multilingual region of Konguland, revealed the peripheral normative diglossia. That is, the minorities are found to use their mother tongue in congruent situations in family and in in - group than in the domains of village,

education and employment regardless of whether the component selected was a person, place or topic.

A study pertaining to multilingualism in the Nilgiris district has been started by the Department of Linguistics, Bharathiar University sponsored by the UGC, New Delhi. This study which is in progress now aims at the description of bi / multilingualism among the south Dravidian tribal and non-tribal languages and the functional importance of these languages in such a multilingual context. This study includes factors such as language maintenance, language shift, language loss, linguistic convergence, language attitudes, etc.

## Language Attitudes

A successful language planning should always reflect the attitudes of the speech community concerned. The study of language attitudes in sociolinguistic works can be classified under three heads viz.

i) those dealing with language oriented or language directed attitudes.

ii) those dealing with community (wide stereotyped impressions toward particular language or language varieties).

iii) those concerned with the implementation of different types of language attitudes.

Empirical studies regarding the attitudes of the minorities toward the present day language practices are yet to be conducted. Since Kongu region has several linguistic border areas the study of language attitudes of minorities is considered as quite significant. A study conducted (ibid) in the Dharmapuri district reveals that the linguistic minority groups in the border areas prefer mother tongue education at the primary level. However, a progressive

assimilation with the majority is accepted at higher levels of education. A matched technique was conducted to establish whether different varieties of Tamil evoke distinguishable stereotypes for different types of bi / multilinguals. Competence, integrity and social attractiveness were measured and found that the standared Tamil was given higher score for all characteristics. Tamil speech by Telugu-Tamil bilinguals was placed next in the order. Tamil speech by Urdu - Tamil bilinguals who live predominantly in the Denkanikotta and Krishnagiri taluks was given a low score.

## Language Maintenance and Identity

Since different language groups in the Kongu border areas live in multi-lingual multi-cultural environment the genesis of clear social categories for each social group is unavoidable. The social group membership in this context is well defined and the primary and secondary socialization introduce social norms to the members. Members in this border area (Dharmapuri) recognized caste, language, orientation towards future employment, membership in a social group and majority - minority status as the bases for social categorization. The attribute viz., caste is a clear social category. The term Tamil language group is primarily considered as mother tongue speakers of Tamil. But in the interior areas majority of the linguistic groups perceived that speakers of any language may also be considered as members of Tamil if they possess native-like mastery of Tamil. The identification of various dialects, knowledge of casual and careful speech styles and ability to write Tamil in different contexts were considered as native like control. To our observation minorities who live in border areas maintained bilingual identity.

## Levels of Features and Perception by Telegu - Tamil Bilingual Group

The following table shows the percentage - wise distribution of subject who perceive the features.

| Features | Minimum required for membership (perceived by the group) | Minimum required for membership (perceived by other groups) |
|---|---|---|
| **I Tamil** | | |
| i) Dialect (of the area) acquisition and its use | 57 | 69 |
| ii) Casual speech | 63 | 72 |
| iii) Careful speech | 93 | 78 |
| iv) Reading ability in all contexts | 12 | 17 |
| v) Writing ability in all contexts | 12 | 2 |
| **II Telugu** | | |
| i) Dialect (of the area) acquisition and its use | 62 | 43 |
| ii) Casual Speech | 79 | 52 |
| iii) Careful Speech | 92 | 93 |
| iv) Reading ability in all contexts | 10 | 13 |
| v) Writing ability in all contexts | 18 | 7 |
| III Membership in a caste which belongs to Telugu mother tongue group | | |
| IV Orientation towards Government Employment | | |
| V Perception of majority - minority (Tamil-Telugu) Status in the Community | | |
| VI Acceptance of social norms of the group. | | |

Table showing the percentage of subjects who are proficient (native like control) in different languages.

| Varieties | Under-standing | Speaking | Reading | Writing |
|---|---|---|---|---|
| I TAMIL | | | | |
| 1) Dialect in near region | 85 | 78 | 75 | 79 |
| 2) Careful speech | 92 | 93 | 87 | 82 |
| 3) Casual speech | 97 | 95 | 98 | 78 |
| 4) Standard variety | 99 | 94 | 97 | 97 |
| 5) Register (in offices, etc.) | 94 | 78 | 73 | 75 |
| 6) Formal letters (Register) | 82 | 72 | 70 | 82 |
| II TELUGU | | | | |
| 1) Dialect (in near region) | 82 | 75 | 82 | 79 |
| 2) Careful speech | 91 | 83 | 87 | 83 |

## References


Annadurai, K. 1982. A Descriptive Grammer of Tamil Spoken in Kalrayan Hills, (Unpublished Ph. D. dissertation submitted to Annamalai University : Annamalainagar).

Emeneau, M. B. 1978. Toda : The Oral Poets of South India. New York.

Emeneau, M. B. and Burrow, T. 1983. Dravidian Etymological Dictionary, Oxford University Press: London.

Boopathy, S. 1980. Lambadi Language, Language Division, Census of India : Calcutta.

Jayakumar, M. 1985. A Study of Multilingualism in in the Dharmapuri District of Tamilnadu (Unpublished Ph.D. dissertation submitted to Annamalai University : Annamalainagar).

Karunakaran, K. 1971. The Kollimalai Tamil Dialect, Annamalai University : Annamalainagar.

Perialwar, R. 1976. Irular Valviyal, Tamil Noolagam : Madras.

Radhakrishnan, S. 1983. A Descriptive Grammar of The Lambadi Language Spoken in the Mettur Area, (Unpublished Ph.D. dissertation submitted to Annamalai University : Annamalainagar).

Sivashanmugam, C. 1981. Social Differentiation of Tamil in Coimbatore, (Unpublished Ph.D. dissertation submitted to Annamalai University : Annamalainagar).




# 19. SOME ANTIQUATED CUSTOMS AND THEIR REMNANT SURVIVALS AS REFLECTED IN KONKU PROVERBS

*Tmt. MEENAKSHISUNDARAM*
Gnanamani Farm
Vellakkinar, Cbe-20

The topic of proverbs is so wide, rich and vast, that no book however extensive and compressed can do full justice. An article of this size can hardly touch the fringe, let alone evaluate it. I have chosen for today a mere microscopic molecule of this vast expanse, earnestly hoping, my efforts to elucidate a few salient paints will be both fruitful and successful.

In this paper "PROVERBS" are studied and discussed not for their linguistic content or for their literary exuberance but predominantly for their anthoropological and social importance. As such only the authentic, antique, appropriate unalloyed ones are chosen.

I affirm and reiterate that no single proverb is a carbon or otherwise respect form any compiled collection other than the author's own done over a span of nearly 30 years or more. The proverbs cited in this article are all in their origional colloquial form and pronunciation.

Let me start with an appopriate definition or two, a sure pre-requisite for the topic. In my book "Kongu provers - A study" I have enumerated, apart from my own quite a few outstanding ones. To quote " Proverbs are realistic collective judgements arrived by the community resulting from

25. Purananuru : 95

26. Ibid : 158; Sirupan - 84 to 113

27. He is praised in Padirruppathu VIII ten by Arisilkilar.

28. There is no reason to suppose that the poem was not contemporary to the events mentioned in it; for the same Arisilkilar who was co-author of Tagadur yattirai was the author of Padirruppattu VIII ten on Peruncheral Irumporai, the victors of Tagadur.

29. Tagadur yathirai : The journey to Tagadur; if this work had survivived in full, it would form the most unusual but welcome historical piece in Tamil literature. It is, however, clear that the whole work was available to Nachchinarkkiniyar, the 14th century commentator on the Tolkappiyam. He quotes some verses from this work to explain certain Purathinai rules in that grammer.

30. Tolkappiyam : Purathinai Iyal Sutram - 7. Nachchinarkkiniyar's quotation.

31. Purananuru - 231, 232, 235. Puram 231 suggests that Anji's body was cremated; and 232 says that a hero stone (Nadukal) was put up for him, for he died the death of a hero.

32. The colophon to Puram 230 is illwritten or damaged by scribes so that the meaning is not clear; it perhaps means Elini fell when Tagadur of Adigaiman was besieged; if it is Elini here refers to Anji especially because it is associated with Tagadur and with Arisilkilar. Further contiquity of Puram 230, 231 and 232 also indicats that Puram 230 refers to Anji.

33. Near Potur, North Arcot Dt.

34. A Kerala ruler, ie Chera ruler

35. K. A. Nilakanta Sastri : The cholas, PP - 406, 407



# 22. கொங்கு வட பரிசார நாடு ஓர் அறிமுகம்

இரா. சந்திரசேகரன்
பாரதியார் பல்கலைக் கழகம்

கொங்குநாடு கி. பி. பத்தாம் நூற்றாண்டுக்குப் பின் சோழர்களினுடைய ஆட்சிச் செல்வாக்கிற்கு உட்படலாயிற்று. சோழர்கள் நேரடியாகவோ, தத்தம் பிரதிநிதிகள் வழியாகவோ கொங்குநாட்டு சமூக அரசியல் வரலாற்றில் மாற்றங்களை ஏற்படுத்தத் தொடங்கினர். காடுகளாகக் கிடந்த பகுதிகள் மக்கள் வாழும் ஊர்களாகத் தொடங்கின. அலைந்து திரிந்த குடிபெயர் சமூகங்கள் குடி நிலைப்புக் சமூகங்களாக நிலைக்கத் தொடங்கின. சோழ அரசர்களின் அரசியல் நிர்வாகத்திற்காக கொங்குநாடு பல்வகை உட்பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டன. நாடு, கூற்றம், வளநாடு, மண்டலம், போன்ற பிரிவுகள் அமைக்கப்பட்டன. அவற்றுள் நாடு என்பது அடிப்படை உட்பிரிவு ஆகும். நாடு வகை செய்வோர், நாடு கூறு செய்தார் போன்ற பெயர்கள் கல்வெட்டுக்களில் காணப்படுகின்றன. நாடு என்ற சொல் இரண்டு நிலைகளில் ஆளப்பட்டதைக் கல்வெட்டுக்கள் உணர்த்துகின்றன. நிலப்பரப்பை அடிப்படையாகவும், நிர்வாக அமைப்பை நிலைப்படுத்தும் நோக்கத்துடனும் வளநாடு, மண்டலம் ஆகிய பெரும் பிரிவுகளுள் அடங்கிய ஒரு சிறு பிரிவாக நாடு என்பது கருதப்பட்டது ஒரு நிலை. அருகிலுள்ள பல ஊர்கள் சேர்ந்த ஒரு தொகுதியாகவும் இது அமையலாம். சான்றாக சேவூர்நாடு என்பது சேவூர் மற்றும் அதன் அருகிலுள்ள ஊர்களைக் குறிப்பதாக அமையும்.

இதைத் தவிர ஒரு குறிப்பிட்ட சமூகத்தின் ஒழுங்கையும் அச்சமூகத்தின் தொழில் வணிகம் இன்ன பிற இயக்கங்களையும் கட்டுப்படுத்துவதற்காக அச்சமூக மக்கள் தாமே ஓர் அமைப்பை ஏற்படுத்திக் கொள்ளுவது இன்னொரு நிலை. இதையும் நாடு என்ற சொல்லாலேயே குறித்தனர். சான்றாக பூலுவ நாடு என்பது

பூலுவர்கள் தமக்குள் ஏற்படுத்திக்கொண்ட அமைப்பு ஆகும். இதற்கு நிலப்பரப்பாகிய எல்லை இல்லை. பூலுவர்கள் எங்கு வாழ்ந்தாலும் இந்த பூலுவ நாட்டின் கட்டுப்பாட்டுக்குள் வருவர். வெள்ளா நாடு எனப்படுவதும் இத்தகையதே.

கொங்கு நாட்டைப் பொறுத்தவரை பத்தாம் நூற்றாண்டுக்குப் பின் சோழர்கால ஆட்சியில் நாடு என்ற சொல்லால் பல பெயர்கள் காணப்படுகின்றன. சோழன் பூர்வபட்டயம், கொங்கு மண்டல சதகம், இருபத்துநாலு பட்டயம் ஆகிய மூன்றும் இருபத்து நான்கு நாடுகளைப் பட்டியலிட்டுக் காட்டுகின்றன. இருபத்து நான்கு நாடுகளை அவை குறிப்பிட்டாலும் மூன்றுக்கும் பொதுவாக இருபத்தியொரு நாடுகளே காணப்படுகின்றன. சேலநாடு, பருத்திப் பள்ளிநாடு, தலையநாடு, வைகாவூர்நாடு, நரையனூர்நாடு, போன்றவை ஒவ்வொன்றில் விடுபட்டுள்ளன. திரிபுவனச் சக்கரவர்த்தி, கோனேரின்மை கொண்டான் மற்றும் விஸ்வநாத நாயக்கர் ஆகியோர் கல்வெட்டுக்களும் இந்த இருபத்தி நான்கு நாடுகளை உறுதிப்படுத்துகின்றன. [3 : 46] இவ்வாறு இருபத்தி நான்கு நான்கு நாடுகளை இவை வகைப்படுத்திக் கூறினாலும், இவற்றுக்கும் கொங்குநாட்டில் காணப்படும் கல்வெட்டுக்களில் இடம் பெற்றுள்ள நாடுகளுக்கும் மிகுந்த வேறுபாடுகள் காணப்படுகின்றன. ஒரு ''நாடு'' என்பதன் உட்பிரிவுகளாக வேறு சில பகுதிகளும் காட்டப்படுவது உண்டு. சான்றாக ஆறைநாடு என்னும் பகுதிக்குள் சேவூர்நாடு, வடபரிசார நாடு, பழன நாடு, பேரூர் நாடு, வெள்ளாநாடு, வலயலூர் நாடு என்று பல பிரிவுகள் காணப்படுகின்றன. கி. பி. பத்து, பதினொன்று நூற்றாண்டுகளில் கொங்கு நாட்டின் மிக முக்கிய பெரிய பிரிவுகளாகக் கல்வெட்டுக்களில் காணப்படும் விக்கிரம சோழ வளநாடு, நாடாள்வான் நாடு, வீர கேரள வளநாடு, வடகரை நாடு போன்றவற்றுள் ஒன்று வடபரிசார நாடு ஆகும். ஆனால் பிற்காலத்தில் எழுந்த சோழன் பூர்வ பட்டயம் போன்றவற்றில் ஆறைநாட்டின் ஒரு பகுதியாக இது குறிக்கப்படுவது ஆய்விற்கு உரியது. சோழர் ஆட்சியில் நாட்டின் ஆட்சி அமைப்பு எல்லைகள் நிர்வாகக் காரணங்களுக்காக அடிக்கடி மாற்றம் பெற்றதையே இது குறிக்கிறது. ஆறை நாடு என்பது கல்வெட்டுக்களில் காணப்படாததும் கவனிக்கத்தக்கதாகும். வடபரிசார நாடு என்பது வடபரிசை ஆறுநாடு என்றும் ஒரு பட்டயத்தில் குறிக்கப்பட்டுள்ளது. [3:58] பொதுவாகத் திசைகளின் அடிப்படையில் தென்கரை நாடு, வடகரை நாடு, தென் பூவானிய நாடு, வட பூவானிய நாடு, வட பொங்கலருக்கா நாடு. தென் பொங்கலருக்கா நாடு என்று நாடுகள் குறிக்கப்படுவது

இயல்பு என்றாலும் வடபரிசார நாட்டுக்கு இணையாக தென் பரிசாரநாடு ஒன்று காணப்படாததும் இங்கு கவனிக்கத்தக்கதாகும். கி. பி. பத்தாம் நூற்றாண்டுகருப் பின் சோழர் காலத்தில் செல்வாக் கோடு இருந்த வடபரிசார நாடு என்பது இன்றைய அவிநாசி, சத்தியமங்கலம், சேவூர், அன்னூர் போன்ற பகுதிகளை உள்ளடக் கியதாகும். வடபரிசார நாட்டைப் பற்றிய ஆராய்ச்சியானது மத்திய கொங்கின் வரலாற்றையும் பிற்காலத்தில் கங்கர்கள் மற்றும் ஒய்சார்கள் தமிழ் நாட்டுக்கு வந்து ஆட்சிப் பொறுப்பேற்ற வரலாற் றையும் விளக்குவ்தாக அமையும். அத்துடன் கொங்குச் சோழர்கள் காலத்தில் பூலுவர்கள், வேளாளர்கள், தொழுவர் போன்ற குடிமக்களின் சமூக குடிப்பெயர்ச்சி மற்றும் குடிபேறு நிலைகளை யும் வெளிப்படுத்தும்.

பண்டைய கொங்குநாட்டின் நில அமைப்பு மற்றும் எல்லைப் பிரிவுகளைப் பற்றிய மிகச் சிறந்த ஆய்வு ஒன்றினை திரு கே. எஸ். வைத்தியநாதன் வெளியிட்டுள்ளார் [3 : 1983]. வடபரிசாரி நாட்டில் இருந்ததாகக் கல்வெட்டுக்களால் அறியப்படும் நாற்பது ஊர்களை அவர் சுட்டிக்காட்டியுள்ளார். வடபரிசார நாட்டு ஊர் களும் அவற்றின் இன்றைய பெயர்களும் பின்வருமாறு; வடக்கைப் பள்ளி (நடுவச்சேரி), கூடலூர் (பெரியநாய்க்கன்பாளையம் கூடலூர்), கவையம்புதூர் (கோவில்பாளையம்) துடியலூர் (துடியலூர்), இடிகரை (இடிகரை), கள்ளிமுலை (கள்ளிப்பள்ளி), மன்னியூர் (அன்னூர்), கருவலூர் (கருவலூர்), கங்கைப்பள்ளி (கஞ்சம்பள்ளி), நிலமை அழகிய சோழநல்லூர் (ஆலத்தூர்), வீர சங்கநாத பெரும்பள்ளி (அக்கரை செங்கப்பள்ளி - ஆலத்தூர்), முதுதுறை (முதுதுறை), யாழ்வள சோழநல்லூர் (ராசாதி பாளையம்), குடக்கோட்டூர் (குட்டகம், புஞ்சைப்புளியம்பட்டி), திருமுருகன்பூண்டி (திருமுருகன்பூண்டி), திருப்புக் கொளியூர் (அவினாசி), புத்தூர் (அவினாசி - புத்தூர்), குலதீபநல்லூர் (அரசூர்), பெரும்பிலிநல்லூர் (பெரியநாய்க்கன்பாளையம்), வீர சோழநல்லூர் (வெள்ளைப்பாடி), பெரும்பழனம் (மதுக்கரை), நம்பி பேரூர் (நம்பியூர்), கரையபாடி (காரப்பாடி), வீரராஜேந்திர நல்லூர் பாப்பார்பூண்டி (அவினாசி கனியம்பூண்டி), தென்கரை நியமமான வீரராஜேந்திரநல்லூர் (சத்யமங்கலம் தென் கரை நெகமம்), தென்கரை பாராசந்திரநல்லூர் (பாரியூர்), தாடப்பள்ளி (தாடப்பள்ளி கிராமம்). இவற்றைத் தவிர கள்ளிமடை, அய்ய பொழில், கரையநிலம், வெள்ளானூர், தென்னூர் போன்ற ஊர் களும் காணப்படுகின்றன. ஆனால் அவற்றின் இன்றைய பெயர்கள் ஆய்வுக்குரியது.

கொங்கு நாட்டுக் கல் வெட்டுக்களில் எந்த ஓர் இடத்திலும் கொங்குச் சோழர் (அல்லது) கொங்குப் பாண்டியர் என்ற பெயர் காணப்படவில்லை. பிற்கால வரலாற்றாசிரியர்கள் கொங்கு நாட்டு வரலாற்றினை ஆராயும் போது, பிற்காலச் சோழர்கள் மற்றும் பிற்காலப் பாண்டியர்களின் பெயர்களைப் போலவே அமைத்துக் கொண்டு ஆண்ட அரசர்களின் பெயர்களை, சோழ மற்றும் பாண்டிய அரசர்களுடன் இணைக்காமல் வேறுபடுத்திச் சுட்டுவதற் காக கொங்குச் சோழர்கள் மற்றும் கொங்குப் பாண்டியர்கள் என்று சுட்டினர். இவர்கள் மரபு பற்றி வேறு வேறு கருத்துக்கள் நிலவு கின்றன. சோழர்கள் (அல்லது) பாண்டியர்களின் பிரதிநிதிகளாக இப்பகுதியை ஆண்ட அரச மரபினர் எனவும், பிரதிநிதிகளாக வந்தவர்கள் தலையெடுத்துத் தனி ஆட்சி மரபை உருவாக்கிக் கொண்டனர் எனவும், கொங்கு நாட்டில் தலையுயர்த்திய குறுநில அரசர்கள் அவ்வக் காலத்தில் செல்வாக்குப் பெற்றிருந்த பெரிய அரசர்களின் பெயர்களைப் போலவே தாமும் பெயர்களைச் சூடிக் கொண்டனர் எனவும் பலவிதக் கருத்துக்கள் நிலவினாலும், இம் மரபினர் தனித்த ஆட்சிப் பொறுப்பினை கொங்கு நாட்டில் பெற் றிருந்தனர் என்பது மட்டும் உறிதியாகத் தெரிகிறது.

கொங்கு நாட்டை அரசாண்ட அரசர்களின் காலவரையறை யைத் தற்காலிகமாகப் பின்வருமாறு ஒத்துக்கொள்ளலாம். இது உறுதியானதல்ல; புதிய கல்வெட்டுச் சான்றுகள் கிடைக்கும் போது கால எல்லைகளில் மாற்றங்கள் அறியப்படலாம். வடபரிசார நாட்டுக் கல்வெட்டுக்களை அறிமுகப்படுத்திக் கொள்வதற்கு, அக் கால அரசியல் வரலாற்றின் காலப் பரப்பினை ஓரளவு அறிந்து கொள்ள, பின் வரும் கால வரைவு துணை செய்யும் :

| | |
|---|---|
| அபிமான சோழ ராஜாதிராஜன் | 1080 — 1110 |
| ராஜாதிராஜ உத்தமன் | 1110 — 1117 |
| உத்தம சோழன் (வீரநாராயணன்) | 1135 — 1148 |
| குலோத்துங்கன் | 1148 — 1183 |
| வீரசோழன் | 1183 — 1206 |

| | |
|---|---|
| வீரராஜேந்திரன் | 1207 — 1255 |
| விக்கிரமன் (இரண்டாம்) | 1255 — 1263 |
| விக்கிரமசோழன் | 1273 — 1303 |
| வீரபாண்டியன் | 1265 — 1285 |
| சுந்தரபாண்டியன் | 1285 — 1300 |
| இரண்டாம் வல்லாளன் | 1173 — 1220 |
| மூன்றாம் வல்லாளன் | 1292 — 1341 |

இவர்களைத் தவிர கோனேரின்மை கொண்டான் என்ற பெயர் பல கல்வெட்டுக்களில் காணப்படுகிறது. கோனேரின்மை கொண்டான் என்பதற்கு அரசர்களில் நிகரில்லாதவன் என்று பொருள், இது பல இடங்களில் பட்டப்பெயராக குலோத்துங்கன், வீரராஜேந்திரன், விக்கிரமன் ஆகிய அரசர்களின் பெயர்களுக்கு முன்பு குறிப்பிடப்பட்டுள்ளது. எந்த அரசருடைய பெயரையும் இணைக்காமல், கோனேரின்மை கொண்டான் என்று மட்டுமே பல கல்வெட்டுக்களில் ஆட்சியாண்டுகள் குறிக்கப்பட்டுள்ளன. 'திருபுவனச் சக்கரவர்த்தி கோனேரின்மை கொண்டான்' என்று பொதுவாகப் பலஇடங்களில் காணப்பட்டாலும்,கோவில்பாளையம் கல்வெட்டு ஒன்றில் 'ஸ்ரீ வீர கேசரி' என்ற பட்டப் பெயருடன் குறிக்கப்பட்டுள்ளது கவனத்திற்குரியதாகும். கொங்குச் சோழ அரசர்கள் வீரகேசரி, பரகேசரி என்ற பட்டங்களை எந்த முறையில் பயன்படுத்தினார்கள் என்ற ஆய்வு அவர்களுடைய கால்வழியை உறுதி செய்யத் துணை செய்யும்.

வடபரிசார நாட்டைச் சேர்ந்திருந்த அவினாசிக்கும் எகிப்துக்கும் இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பிருந்தே வணிகத் தொடர்பு இருந்திருக்கவேண்டும் என்று வரலாற்றறிஞர் வால்கவுஸ் கருதுகிறார் [3 : 235] கொங்கு நாட்டின் பிற பகுதிகளிலிருந்த வெள்ளலூர், கலையம்புதூர், கரூர் பொள்ளாச்சி போன்ற இடங்களில் கிரேக்க, ரோமானிய நாடுகளுடன் அகஸ்டஸ் (கி.மு.44-14) காலம் முதல் கான்ஸ்டன்ட்டினஸ் (கி. பி. 323-337] காலம் வரை

வணிக உறவு சிறப்பாக நடைபெற்று வந்ததைக் குறிக்கும் வகையில் நாணயங்கள் பல கிடைத்துள்ளன. எனினும் வடபரிசார நாட்டுப் பகுதிகளில் அத்தகைய புதைபொருள் சான்றுகள் அதிகமாகக் கிடைக்கவில்லை. வடபரிசார நாட்டில் கி. பி. எட்டாம் நூற்றாண்டுக்குப் பிறகே அதிகமாக மக்கட் குடியேற்றமும் குடியிருப்பும் நிகழ்ந்தது என்று கருதலாம். கி. பி. பத்தாம் நூற்றாண்டுக்குப் பிறகு ஏறத்தாழ நான்கு நூற்றாண்டுகள் காலப்பரப்பினைச் சேர்ந்த பல கல்வெட்டுக்கள் இப்பகுதியில் கிடைத்துள்ளன. அவற்றுள் முக்கியமான இடங்கள் பின்வருமாறு :

**சேவூர்:**

அவிநாசியிலிருந்து ஏழு கிலோ மீட்டர் தொலைவில் உள்ள சேவூர், சேவூரான செம்பியன் கிழானடி நல்லூர் என்று கல்வெட்டுக்களில் குறிக்கப்பட்டுள்ளது. இவ்வூரில் உள்ள பெருமாள் கோவில், கபாலீசுவரர் கோவில், அனுமந்தராயன் கோவில் ஆகிய மூன்று கோவில்களில் முப்பது கல்வெட்டுக்கள் காணப்படுகின்றன. [5 : 12] கொங்கு சோழர், கொங்கு பாண்டியர், ஒய்சளர்கள் ஆகிய அரச மரபினரைச் சேர்ந்த கல்வெட்டுக்கள் இவை. வீரராஜேந்திரன் (ஒன்று) வீரசோழன் (ஒன்று) குலோத்துங்க சோழன் (ஒன்று) வீரபாண்டியன் (ஒன்று) சுந்தரபாண்டியன் (ஏழு) வல்லாள தேவன் (இரண்டு) வீரநஞ்சன் (ஒன்று) ஆகிய அரசர்களின் கல்வெட்டுக்கள் இக்கோவில்களில் காணப்படுகின்றன. கோனேரின்மை கொண்டான் என்ற பெயரில் ஒன்றும், திரிபுவனச் சக்கரவர்த்தி என்ற பெயரில் ஒன்றுமாக இரண்டு கல்வெட்டுக்கள் காணப்படுகின்றன. இக் கோவில்களில் பெருமாள் கோவிலில் சோழர் கல்வெட்டுக்கள் ஒன்றுகூட காணப்படவில்லை என்பதைக் கொண்டு பெருமாள் கோவிலே காலத்தால் பிற்பட்டது என்று கருதலாம். பெருமாள் கோவில் திருமேற் கோயில் எனவும், சுந்தரபாண்டிய விண்ணகரம் எனவும் கல்வெட்டுக்களில் குறிக்கப்படுகின்றன. இதில் எழுந்தருளிய இறைவன் அழகப் பெருமாள் என்று குறிக்கப்படுகிறார். பெருமாள் கோவில் கல்வெட்டுக்களில் நந்தாவிளக்கெரிக்கவும், அமுதுபடி செய்யவும் மானியங்கள் விடப்பட்ட செய்திகளே அதிகம் காணப்படுகின்றன. வெள்ளிக்கிழமை தோறும் தேங்காய் அளிப்பது பற்றிய கல்வெட்டும் வடபரிசார நாட்டு வியாபாரிகள் அனைவரும் ஒன்றுசேர்ந்து மணவாள ஆழ்வாரையும் திருநாச்சியாரையும் கருவறையில் எழுந்தருளச் செய்து நாளொன்றுக்கு இரண்டு திருமாலைகளை அணிவிப்பதற்

காக ஆண்டுக்கு நாற்பது பொன் மானியம் அளிக்கும் செய்தியைக் குறிக்கும் கல்வெட்டும் குறிப்பிடத்தக்கதாகும். இப் பெருமாள் கோவிலில் ‘‘மண்ணுறுதியாக விற்ற நிலம்’’ என்ற குறிப்புடன் நிலத்தின் எல்லைகளை வரையறை செய்து ‘‘மேல் நோக்கிய மரமும் கீழ்நோக்கிய கிணறும்’’ என்ற தெளிவான குறிப்புரைகளுடன் செம்பிலும் சிலையிலும் வெட்டி எல்லைக்கல்லும் நாட்டி நிலம் விற்பனை செய்யப்பட்ட செய்தியை ஒரு கல்வெட்டு குறிக்கிறது. அது அக்காலத்தில் விற்பனைப் பதிவு எத்துணை ஒழுங்கு முறையுடன் இருந்தது என்பதைக் காட்டும் சான்றாகும்.

கபாலீசுவரமுடையார் கோவிலில் உள்ள இறைவன் திருக்கபாலீசுவ்ர முடையார் என்றும் ஆளுடையார் என்றும் கல்வெட்டுக்களில் குறிக்கப்படுகின்றார். இக்கோவிலில் சந்தியாதீபம் எரிப்பதற்காகவும் அமுதுபடிக்காகவும் மானியங்கள் பல்வேறு மக்களால் விடப்பட்ட செய்திகளைக் கல்வெட்டுக்கள் காட்டுகின்றன.

தற்பொழுது அனுமந்தராயன் கோவில் என்று அழைக்கப்படுவது முன்னர் அக்க சாலீசுவரமுடையார் என்று அழைக்கப்பட்டது. இக்கோவிலில் உள்ள இறைவி திருப்பள்ளியறை நாச்சியார் வடிவுடை மங்கை என்று குறிக்கப்படுகிறார். இக்கோவிலில் சந்திவிளக்கு எரிக்கவும், அமுது படிக்காகவும், திருவெண்ணெய்க் காப்புக்காகவும், பொன்னும், நிலமும் மானியங்களாக விடப்பட்டது கல்வெட்டுக்களில் குறிக்கப்பட்டுள்ளன. வட பரிசார நாட்டில் உள்ள ஒவ்வொரு செக்கிலிருந்தும் ஓர் உழக்கு எண்ணெய் அக்க சாலீசுவரம் உடையாருக்கு அளிக்கப்படவேண்டும் என்ற விதி இருந்ததை ஒரு கல்வெட்டு குறிக்கின்றது. இக்கோவிலில் சிவராத்திரித் திருவிழா மிகச் சிறப்பாகக் கொண்டாடப்பட்டதைக் கல்வெட்டுக்கள் உணர்த்துகின்றன.

## அவினாசி:

கோவையிலிருந்து நாற்பது கிலோ மீட்டர் கிழக்கே அமைந்துள்ளது இவ்வூர். இது திருப்புக் கொளியூர் அவினாசி என்றும் அழைக்கப்படும். இங்குள்ள அவினாசி லிங்கேஸ்வரர் மற்றும் அம்மன் கோயில்களில் இருபத்தி எட்டு கல்வெட்டுக்கள் காணப்படுகின்றன. இக் கல்வெட்டுக்கள் வீரசோழன் (நான்கு), குலோத்துங்கசோழன் (ஆறு), வீரஇராஜேந்திரன் (எட்டு), விக்கிரமசோழன் (மூன்று), வீரபாண்டியன் (ஏழு), சுந்தரபாண்டியன், வீரவல்லாளன் வீரநஞ்சைய உடையார் ஆகியோர் காலத்தைச் சார்ந்த கல்வெட்டுக்கள் காணப்படுகின்றன. இக் கல்வெட்டுக்களும் பெரும்பாலும்

கோயிலில் நடைபெறும் விழாக்களுக்காகவும், பூஜைகளுக்காகவும், நந்தா தீபம், சந்தியா தீபம் போன்ற விளக்குகளை எரிப்பதற்காக வும் அளித்த தானங்களைப் பற்றியதாகவே உள்ளன. கொங்கு நாட்டில் வேறு எங்கும் குறிக்கப்பட்டிருக்காத பசு தானம் பற்றிய செய்தி ஒன்றைக் கோயில் கருவறையில் உள்ள கல்வெட்டு ஒன்று குறிப்பிடுகிறது. குலோத்துங்க சோழ தேவனுடைய பன்னிரண்டாம் ஆட்சி ஆண்டில் அவினாசி உடையாருக்கு பால் அமுது அளிப்பதற் காக முப்பது பசுக்கள் அளிக்கப்பட்ட செய்தியை இக் கல்வெட்டு குறிப்பிடுகிறது. பொதுவாக அவினாசி கோயில் கல்வெட்டுக்களில் நிவந்தங்கள் அல்லது மானியங்களைப் பற்றிய செய்திகளே அதிகம் இருந்தாலும் இக் கல்வெட்டுக்களின் வாயிலாக அக்காலத்தில் வழங்கப்பட்ட நாட்டுப் பிரிவுகள், சமய நம்பிக்கைகள் சமுதாயப் பழக்க வழக்கங்கள் ஆகியவற்றைக் காணலாம். கொங்கு மண்டலம், சோழ மண்டலம், பாண்டிய மண்டலம் ஆகிய மூன்று மண்டலங் களும் வட பரிசார நாடு முதலிய பதினான்கு நாடுகளும் இக்கோயில் கல்வெட்டுக்களில் காணப்படுகின்றன. இவற்றுள் தெக்களும்பி நாடு, சோழ மாராய நாடு ஆகியவை வேறு பிற்காலக் கல்வெட்டுக் களில் அதிகம் காணப்படவில்லை. வடபரிசார நாடு என்ற குறிப்பு பன்னிரண்டு கல்வெட்டுக்களில் காணப்படுகிறது. பரகேசரி, இராச கேசரி, வடபரிசார நாட்டு கால் ஆகியவை நிலங்களை அளக்கும் போது பயன்படுத்திய அளவுப் பெயர்களாக காட்டப்படுகின்றன. [ 4 : 68 ]

### *திருமுருகன் பூண்டி:*

திருப்பூர் அவினாசி நெடுஞ்சாலையில் திருப்பூரில் இருந்து எட்டு கிலோ மீட்டர் தொலைவில் திருமுருகன் பூண்டி அமைந்துள் ளது. இவ்வூரில் உள்ள முருகநாதர் கோயிலில் நாற்பத்தி எட்டு கல்வெட்டுக்கள் காணப்படுகின்றன. உத்தம சோழன் (ஒன்று), குலோத்துங்கன் (ஒன்று), வீரசோழன் (ஒன்று), வீரஇராஜேந்திரன் (எட்டு), விக்கிரம சோழன் (ஒன்று), சுந்திரபாண்டியர் (ஒன்று) மற்றும் கோனேரின்மை கொண்டான் (நான்கு) ஆகியோருடைய காலத்தைச் சார்ந்த கல்வெட்டுக்கள் காணப்படுகின்றன. பெரும் பாலான கல்வெட்டுக்கள் கோயிலின் ஆளுடைய நாயனாருக்குப் பல்வகை மானியங்கள் அளிக்கப்பட்ட செய்திகளையே கூறுகின் றன. இக் கோயில் கல்வெட்டுக்களில் காணப்படும் செய்திகளில் நாயனாருக்குப் பூந்தோட்டம் அமைத்துக்கொடுத்தது, சனி தோறும் எண்ணெய்க் காப்புக்காக மானியம் அளித்தது குலோத்துங்க சோழ மண்டலத்தில் வசூலிக்கப்பட்ட வரியை மூன்றில் இரண்டு பங்கு

அவினாசி ஆண்டார் கோயிலுக்கும், இரண்டில் ஒரு பங்கை திருமுருகன் பூண்டி மகாதேவற்கும் அளித்தது. நைவேத்தியத்திற்காக நெல், பொன் மற்றும் பிறவகைப் பொருள்களை மானியங்களாக அளித்தது ஆகியவை குறிப்பிடத்தக்கன. பொதுச் செய்திகளில் தேவர் அடியார்க்குச் சலுகைகள் வழங்கப்பட்டது, கோயில் பணியாளர்களுக்குச் சலுகைகள் வழங்கப்பட்டது, இறைவனை நீராட்ட ஐம்பது குடம் நீர் அளிக்கப்பட்டது, தேவர் அடியார்கள் கோயிலுக்குப் பணத்தை நன்கொடையாக அளித்து அதற்குப் பிரதியாக இறைவன் கோயிலில் பணி செய்யும் உரிமைகளைப் பெற்றது, முன்பு இழந்த உரிமைகளை மீண்டும் பிராமணர் பெற்றது ஆகியவை பற்றிய கல்வெட்டுக்கள் குறிப்பிடத்தக்கவையாகும்.

புரவு வரி அதிகாரி, வணிகர் போன்றவர்கள் தூண்கள் நட்டுவிப்பதற்காகவும், கோயிலைப் பழுது பார்ப்பதற்காகவும் அளித்த மானியங்களை ஐந்து கல்வெட்டுக்கள் குறிப்பிடுகின்றன. இக் கோயிலில் வைகாசி விசாகத் திருவிழாவும், சிவராத்திரித் திருவிழாவும், சனி எண்ணெய்க் காப்புத் திருவிழாவும் சிறப்பாகக் கொண்டாடப்பட்டன என்று கல்வெட்டுக்கள் குறிப்பிடுகின்றன. சோழீசுவர நாயனார் கோயில், அழியா விரதம் கொண்டான் குளம் ஆகியவை கல்வெட்டுக்களில் குறிக்கப்படுகின்றன, ஆனால் அவை இப்போது எங்கே உள்ளன என்று அறிய இயலவில்லை. திரிபுவனச் சக்கரவர்த்தி கோனேரின்மை கொண்டானின் பதினாறாம் ஆட்சி ஆண்டு கல்வெட்டு ஒன்று இக்கோயிலில் உள்ள திருக்காமக் கோட்ட நாச்சியார்கோயில் வழிபாட்டிற்கும், பழுதுபார்த்தலுக்கும், வட பரிசார நாட்டுத் தென்கரை நியமமாகிய வீர இராஜேந்திர நல்லூர் என்னும் கிராமத்தை மானியமாக அளித்ததைக் குறிப்பிடுகின்றது.

## நடுவச்சேரி :

இவ்வூர் அவிநாசியில் இருந்து நான்கு கி. மீ. தொலைவில் உள்ளது. கல்வெட்டுக்களில் பதக்கப்பள்ளி, வடக்கேபள்ளி, வடச்சீர் பள்ளி, வடக்கில் பள்ளி என்று குறிக்கப்படுகிறது. செவ்வில் பூண்டி, செவ்விளை பூண்டி, சேவலபூண்டி என்றும் கல்வெட்டுக்களில் இவ்வூர் காணப்படுகிறது. தற்சமயம் கோடீசுவர சிவாலபுரியம்மன் கோவில் என்று அழைக்கப்படும் கோவில் கோதை பிராட்டீசுவரமுடையார் கோவில் என்று கல்வெட்டில் குறிக்கப்படுகிறது. இக் கோவிலில் ஏழு கல்வெட்டுக்கள் காணப்படுகின்றன. கோராஜகேசரி பன்மரான சக்ரவர்த்தி குலோத்துங்க சோழ தேவன் (13, 15

ஆட்சியாண்டு) திரிபுவனச் சக்ரவர்த்தி வீரராஜேந்திரன் (45, 4 ஆட்சியாண்டு) கோனேரின்மைகொண்டான் ஆகியோர் காலத்தைச் சேர்ந்த கல்வெட்டுக்கள் இவை. கோதை பிராட்டீசுவரர் கோவிலில் திருநாள் கொண்டாடுவதற்காகவும், சந்தி விளக்கு எரிப்பதற்காக வும், ஆயிரம் மக்களுக்குச் சோறு அளிப்பதற்காகவும் பொன்னும் நிலமும் அளித்ததைப் பற்றிய பொதுவான செய்திகளையே இக் கல்வெட்டுக்கள் குறிப்பிடுகின்றன. இங்குள்ள கல்செக்கில் மிகப் பிற்காலத்திய சாசனம் ஒன்று காணப்படுகின்றது. கலியுக சகாப்தம் காரி வருஷம் கார்த்திகை மாதம் என்ற காலக் குறிப் புடன் இச்செக்கில் கல்வெட்டு காணப்படுகின்றது.

### *அன்னூர்:*

கோவையிலிருந்து ஏறத்தாழ முப்பது கிலோ மீட்டர் தொலைவில் இருக்கும் அன்னூரில் உள்ள மன்னீஸ்வரர் ஆலயத்தில் ஐம்பத்தி ஆறு கல்வெட்டுக்கள் படியெடுக்கப்பட்டுள்ளன. (A. R. 581 to 636 of 1922) இக் கோவிலில் வீர ராஜேந்திரன் (பதினெட்டு), விக்கிரம சோழன் (பதினாறு), குலோத்துங்கன் (ஏழு), வீரபாண்டியன் (மூன்று), கோனேரின்மை கொண்டான் காலக் கல் வெட்டுக்கள் காணப்பட்டன. 'கோ வீர பராக்கிரம சோழ தேவர்' என்ற மன்னன் பெயரில் ஒரு கல் வெட்டு கிடைத் துள்ளது. விக்கிரம சோழன் ''கலிமூர்க்க விக்கிரம சோழ தேவர்'' என்றும், வீரபாண்டியன், ''கோ வீர ராசகேசரி பன்மரான திருபு வனச் சக்கரவர்த்திகள் வீர பாண்டிய தேவர்'' என்றும் பட்டங் களால் குறிக்கப்பட்டுள்ளது கருதத்தக்கது ஆகும்.

அன்னூர் கல்வெட்டுக்கள் விளக்கு தானம், நாள் பூஜை, சந்தி பூஜை, வைகாசி விசாகம், பிறந்த நாள் பூஜை போன்றவற் றையே அதிகம் பேசுகின்றன. இரண்டு கல்வெட்டுக்கள் செப்புத் திருமேனிகள் வழங்கப்பட்டதைக் குறிப்பிடுகின்றன. இறை, புறவு, சிற்றாயம், எழுவை , உகவை, தண்டக் குற்றம், சுமை சுங்கம், சாரிகை, மன்று பாடு போன்ற வரிகள் குறிக்கப்பட்டுள்ளன. ஒரு கல்வெட்டு, மன்னியூர் ஆண்டவனுக்கு இராஜாதி என்ற ஊரினைத் தேவதானமாக அளித்த செய்தியைக் குறிப்பிடுகிறது. அவ்வாறு அளிக்கப்படும் பொழுது அந்த ஊரின் பெயர், யாழ் வல்ல சோழ நல்லூர் என்று பெயர் மாற்றம் செய்யப்பட்டு அளிக்கப்பட்டது. பல கல்வெட்டுக்கள் நிலத்தானமாகவோ, ஊர் தானமாகவோ கோயிலுக்கு வழங்கப்பட்ட செய்திகளைக் குறிக்கின்றன. இத் தகைய தானங்களை அரசர்களும், தனியார்களும் அளித்ததோடு

அல்லாமல் வெள்ளா நாடு, பூலுவ நாடு போன்ற மக்கட் சபை அமைப்புகளும் வழங்கி உள்ளன. கொங்கு நாட்டிலேயே அன்னூர் மன்னீஸ்வரர் கோயிலுக்குத்தான் நிலதானம் அதிகமாக அளிக்கப் பட்டுள்ளது என்று கருதப்படுகிறது, [6 : 37] அன்னூர் கோயிலில் திருவிழா மிகச் சிறப்பாக நடைபெற்று வந்திருக்கிறது. அருகில் உள்ள கருவலூர், கவயன் புத்தூர் போன்ற ஊர்களிலிருந்து மக்களை ஒன்று திரட்டி திருவிழா நடத்திய செய்தியை இக்கோயில் கல்வெட்டு ஒன்று தெரிவிக்கிறது. திருஞானசம்பந்தர் மடம் ஒன்று அன்னூரில் இருந்ததையும், கோயிலின் பாதுகாப்பைப் படைவீரர் கள் ஏற்றுச் செய்ததையும், கோயிலுக்கு அளிக்கப்பட்ட கொடை களை முறையாகக் கணக்கெடுத்து வைத்திருக்கும் பழக்கம் இருந் ததை ஏறத்தாழ நூறு ஆண்டுகளில் நூற்றி இருபத்து ஒன்பது விளக்குகள் தானம் அளிக்கப்பட்டன என்று கூறும் செய்தியையும் வெளிப்படுத்தும் கல்வெட்டுக்கள் குறிப்பிடத்தக்கதாகும்.

### *இடிகரை :*

கோவையிலிருந்து வடக்கே பதினைந்து கிலோ மீட்டர் தொலைவில் உள்ள இடிகரையில் உள்ள ஈஸ்வரமுடையார் கோவி லில் பதினெட்டு கல்வெட்டுக்கள் உள்ளன. விக்கிரம சோழன் (ஐந்து), வீர பாண்டியன் (எட்டு), சுந்திர பாண்டியன் (நான்கு), வீர வல்லான் (ஆறு) மற்றும் கோனேரின்மை கொண்டான் ஆகி யோர் காலத்தைச் சார்ந்த கல்வெட்டுக்கள் இவை. இக் கல்வெட் டுக்கள் அனைத்தும் இக் கோயிலில் உள்ள வில்லீஸ்வரமுடையா ருக்கு வைத்த நிவந்தங்களையே குறிப்பிடுகின்றன. சந்தி விளக்கு எரிப்பதற்குப் பணம் பத்து மானியமாக அளித்தது, அமுது படிக்கு இருபது வராகன் அளித்தது ஆகியவை பன்னிரண்டு கல்வெட்டுக் களில் குறிப்பிடப்படுகின்றன. இக் கோயிலுக்கு மானியம் அளித் தவர்களில் ''பாண்டி மண்டலத்து மிழிலைக் கூற்றத்துக்கீழ்க்கூற்று வனான இராஜராஜ நல்லூர்'' என்று ஒரு தொடர் காணப்படுவது குறிப்பிடத்தக்கதாகும்.

இடிகரை வில்லீசுவர முடையார் கோவிலைப் பற்றிய குறிப்பு கோவில்பாளையம் கல்வெட்டிலும் காணப்படுகிறது. சேவூரைச் சேர்ந்த வணிகர்கள் இடிகரை வில்லீசுவரமுடையார்க்கு சந்தியா தீபம் எரிக்க மானியம் அளித்ததை இரு கல்வெட்டுக்கள் கூறுகின்றன. சேவூருக்கும் இடிகரைக்கும் நெருங்கிய போக்குவரவு இருந்ததை இது உணர்த்துகிறது. தனிப்பட்ட மனிதர்களே அல்லாமல் ஊர் மக்கள் ஒன்று சேர்ந்து நிவந்தம் அளித்ததை

மூன்று கல்வெட்டுக்கள் காட்டுகின்றன. ''ஊரும் ஊராளிகளுங் குடி மக்களும் ...'' எனவும் ''இடிகரையலுரு மூராளிகளோம் எங்களூர் நாயனார்க்கு ...'' எனவும் கல்வெட்டுக்களில் காணப் படுகின்றன.

### கோயில் பாளையம்:

கோவையிலிருந்து அன்னூர் செல்லும் வழியில் இருபது கிலோ மீட்டர் தொலைவில் இவ்வூர் உள்ளது. சோழன் பூர்வ பட்ட யத்தில் கவயன்பதி என்று குறிப்பிடப்படுவதும், கொங்கு மண்டல சதகத்தில் கவசை என்று குறிப்பிடப்படுவதும் இதுவே. அவினாசி கோயிலில் முன்மண்டபத்தில் அவினாசி லிங்கற்கு அண்ட கள மண்டபம் ஒன்றைக் கவயம்புதூர் காளியப்ப கவுண்டர் கட்டிக் கொடுத்ததாகக் காணப்படுகிறது. இவ்வூரில் காலகதிசுவர ஆல யத்தில் ஏறத்தாழ இருபத்தி மூன்று கல்வெட்டுக்கள் இருந்ததை 1922ஆம் ஆண்டு கல்வெட்டுத் துறையினர் படியெடுத்துள்ளனர். தற்சமயம் இக் கோயில் பழுதுபார்க்கப்பட்ட பின்னர் கல்வெட்டுக் கள் சிதைந்துவிட்டன. இக் கல்வெட்டுக்களிலும் வடபரிசார நாட்டு கவயன் புத்தூர் என்று பல இடங்களில் காணப்படுகிறது. இங்கு கிடைத்த கல்வெட்டுக்களில் வீர நாராயணன் (இரண்டு), வீர இராஜேந்திரன் (நான்கு), விக்கிரமன் (ஏழு), சுந்திர பாண்டியன் (ஒன்று), வீர வல்லாளன் (இரண்டு) மற்றும் கோனேரின்மை கொண்டான் (ஏழு) ஆகியோர் பெயர்கள் காணப்படுகின்றன. இக் கோயிலில் எழுந்தருளியுள்ள இறைவனுக்கு கால காலீஸ்வர முடையார் என்று பெயர் குறிப்பிடப்பட்டுள்ளது. காலகால தேவர், ஆளுடையார் காலகாலர் என்றும் சில இடங்களில் குறிக்கப்படு கின்றன. சந்தியா தீபம் எரிப்பதற்காகத் தானம் அளித்ததை ஏழு கல்வெட்டுக்களும், திருமண மண்டபத்துக்கு நாயகத்தூண் கட்டு வதற்குத் தானம் அளித்ததை இரண்டு கல்வெட்டுக்களும், திருவாதிரை விழாவிற்குப் பொன் அளித்ததை ஒரு கல்வெட்டும் குறிப்பிடுகின்றன. ஒரு கல்வெட்டு வானவன் மாதேவி நல்லூர் என்னும் ஊரை காலகால தேவனுக்குத் தேவ தானமாக வழங்கி யதைக் குறிக்கிறது. இக் கோயில் கல்வெட்டுக்களில் வளையலூர் நாட்டு கருவலூர், இடிகரை, துடியலூர், கூடலூர், சூரலூரான அரிய பிராட்டி நல்லூர், அரசூர், கூடலூர் அகஸ்தீஸ்வரமுடையார் கோயில், காரயபாடி போன்ற பல பெயர்கள் காணப்படுகின்றன. பூலுவர், வெள்ளாளர், கைக்கோளர், சிவ பிராமணர் போன்ற சமூகங்கள் பற்றிய குறிப்புகள் காணப்படுகின்றன. வட பரிசார

நாட்டில் பூலுவர்கள் அதிகமாக வாழ்ந்திருந்தனர் என்பதற்கு இத்தகைய கல்வெட்டுக்கள் சான்றுகள் ஆகும்.

பொதுவாக, கொங்குநாட்டில் இருந்த பிற நாடுகளுக்கும், வட பரிசார நாட்டுக்கும் ஒரு முக்கியமான வேறுபாடு உண்டு. சமூக வளர்ச்சி மாற்றம் என்பது சோழ, பாண்டிய நாட்டிலிருந்து வந்த அரசு அதிகாரிகள், வணிகர்கள், வீரர்கள் போன்றவர் களைச் சார்ந்திருந்தது. ஆனால் வடபரிசார நாட்டில் சமூக அமைப்பு வளர்ச்சி இங்கிருந்தே உருவாகிறது. பூலுவர்களும்; வெள்ளாளர்களும் தத்தம் சமூக அமைப்புகளை உருவாக்கிக் கொண்டு நிலை அமைவுச் சமூகங்களாக இக்காலக் கட்டத்தில் உருவாக்கினர். பூலுவநாடு, வெள்ளா நாடு, ஆகிய சமூக சபை களைப் பற்றிய குறிப்புகள் வடபரிசார நாட்டுக் கல்வெட்டுகளில் மிக அதிகமாகக் கிடைக்கின்றன. கோயில் மற்றும் சமூக நிர்வாகப் பொறுப்புகளை சித்திரமேழிப் பெரியநாடு, சாலியா நகரத்தார், வாணிக மடிகை, அக்க சாலையார், அடிக்கீழ்த் தளத்தில் மூத்த சமக்கட்டுக் கைக்கோளார் போன்ற சபைகள் மேற்கொண்டு நடத்தியதை வடபரிசார நாட்டுக் கல்வெட்டுக்கள் பரவலாகக் காட் டுகின்றன.

அடிக்கீழ்த்தளம் என்பது பெருவழிகளில் வேறு வேறு ஊர் களில் இருந்து வந்த வணிகர்கள் தங்கி இருக்கும்போது அவர் களுக்குக் காவலாக இருந்த வணிக வீரர்களைக் குறிப்பதாகும். அவ்வாறு தங்குபவர்கள் தமக்குள் ஒரு சபையை ஏற்படுத்திக் கொண்டு நிர்வாகப் பொறுப்பை மேற்கொண்டதை அடிக்கீழ்த்தளம் என்ற சொல்லால் குறிக்கப்படும் சபை எடுத்துக் காட்டுகிறது. ஆடு, மாடுகளை வளர்த்தும், வேட்டைபாடியும் திரிந்த பூலுவர்கள் படிப்படியாக வேளாண்மையில் ஊன்றத் தொடங்கிய செய்தியை வடபரிசார நாட்டுக் கல்வெட்டுக்கள் உணர்த்துகின்றன.

வட பரிசாரநாட்டுப் பகுதிகளில் கிடைக்கும் கல்வெட்டுக் களைப் பற்றிய ஒரு அடிப்படைப் பொது அறிமுகம் இதுவரை தரப்பட்டது. பல கல்வெட்டுக்கள் முறையாகத் தொல்பொருள் துறையினரால் படியெடுத்துப் பதிவு செய்யப்பட்டுள்ளன. ஆனால் இன்னும் பல கல்வெட்டுக்கள் முறையாகப் பதிவு செய்யப்படவோ, வெளியிடப்படவோ இல்லை. ஒரு சில, பார்வைப்படிகளாகப் பதி வாகியுள்ளன. இக் கல்வெட்டுக்கள் அனைத்தையும் முறையாகத் தொகுத்து, வகைப்படுத்தி ஆராயும்போது வடபரிசார நாட்டு வரலாறு பற்றிய தெளிவு கிடைக்கும். கொங்கு அரசியல் வரலாறு மட்டுமன்றி கொங்குச் சமூக வரலாற்றில் சமூக அமைப்புக்கள்

நிலைபேறு அடைந்த தன்மை, அரசு நிர்வாகத்தில் அவர்கள் பெற்ற இடம் போன்றவை பற்றிய புதிய செய்திகளும் கிடைக்கும்.

**துணைச் சான்றுகள்:**


1) 1950 : "சோழன் பூர்வபட்டயம்" — கீழ்த்திசைச் சுவடி நூலகம், சென்னை.

2) 1972 : இராமச்சந்திரன் செட்டியார், சி.எம்., கொங்கு நாட்டு வரலாறு (பகுதி 1, 2) பேரூர் தமிழ்க் கல்லூரி — கோவை.

3) 1983 : Vaidyanathan, K. S. "The Ancient Geography of Kongu Country" Coimbatore.

4) 1984: விசாலாட்சி, அ., "அவினாசி கோவில் கல்வெட்டுக்கள்: ஓர் ஆய்வு எம்.பில். ஆய்வேடு, பாரதியார் பல்கலைக் கழகம்.

5) 1986 : அமிர்தசோதி, "சேவூர் கல்வெட்டுக்கள் : ஓர் அறிக்கை." ஆய்வுக் கோவை-17, அகில இந்திய பல்கலைக் கழகத் தமிழாசிரியர் மன்றம், அண்ணாமலை நகர்.

6) 1987 : புவனேசுவரி, க. அ. "அன்னூர் வரலாறு" புவியரசி பதிப்பகம். சூலூர், கோவை.


---


☐ இக்கட்டுரை ஆக்கத்திற்குத் துணைபுரிந்த தலை சிறந்த கல்வெட்டறிஞரான திரு. ஆர். பூங்குன்றன் அவர்களுக்கு கட்டுரையாசிரியரின் நன்றி.




# 23. கோங்குநாட்டுப் பழங்குடிகள்

எம். பத்மநாபன்
பாரதியார் பல்கலைக் கழகம்

''வடக்குத் தலைமலையாம் வையாவூர் தெற்கு
குடக்கு வெள்ளிப் பொறுப்புக் குன்று
குழித்தண்டலை சூடும் காவிரி நன்னாடாம்
குழித்தண்டலை யாவும் கொங்கு''[1]

எனப் பாடப்பெற்ற கொங்குநாடு, தமிழகத்தின் துளுநாடு, சேர நாடு, சோழநாடு, பாண்டியநாடு, தொண்டைநாடு ஆகிய ஆறு நாடுகளுள் ஒரு தனிநாடு[2]. இது சங்க காலத்தின் பின் 24 பிரிவு களாக[3] பிரிந்து விளங்கி வருகிறது. இது பற்றிய குறிப்பு சிலம்பு உரைபெறு கட்டுரையில்.

''கொங்கிளங் கோசரும் தங்கள் நாட்டகத்து நங்கைக்கு
விழா வொடு சாந்தி செய்ய
மழை தொழில் என்றும் மாறாதாயிற்று[4]'' என்றும்,

''கொங்குக் குடகட லோட்டிய ஞான்றை[5]'' என்ற பாடல் மூலமும், பூழியனுதியன் கொங்கன் பொறையன்[6] என்ற பிங்கல நிகண்டுச்செய் தியின் மூலமும், போற்றப்பட்டுள்ள கொங்கு, 'மயிலுக்குப் போர்வை ஈந்த பேகன், அதிகன், ஓரி, ஆய், முதிரமலை ஆண்ட அன்னைத் தமிழ் வாழ அவ்வைக்கு அருள்நெல்லி ஈந்த அதியமான், தலை கொடுத்து அறம் காத்த குமணன் எனும் தலைசிறந்த வள்ளல் பெருமக்களுடன் பெருந்தலைச் சாத்தனார். செங்குன்றூர்க்கிழார், கொங்கு வேளிர் எனும் பெரும்புலவர்களாலும் வாழ்த்தப்பட்டு, வாழ்வு பெற்றதுடன் நில்லாமல், ஈராயிரம் ஆண்டுகட்கு முன்பே பல்லாயிரம் மைல்களுக்கப்பாலிருந்த உரோமனியப் பேரரசர்களான அகஸ்டஸ், நீரோ, காரகுலா, பைசேண்டியன்வமிச[7] அரசர் களுடன் வாணிபத் தொடர்பு கொண்டு, சீன அறிஞர் மாஹீர வானால் (கி. பி. 1451) குறிப்பிடப்பட்டு, டைவெண்டக்காலும், பெலியோ, பிலிப்ஸாலும் ஏற்றுக்கொள்ளப்பட்டதுமான கொங்கு

மண்டலம், அப்பர், சுந்தரமூர்த்தி நாயனார், மதுகரவி ஆழ்வார், அருணகிரிநாதர் ஆகியோரால் பாடப் பெற்று 8—9 நூற்றாண்டுகளில் சேர பாண்டிய மன்னர்களாலும், 1292ஆம் ஆண்டில் ஹொய்சாளா வீரவல்லாளனால் ஆளப்பட்டு, தலைக்காட்டு இரண விக்ரமனாலும், முதலாம் ராஜேந்திரசோழன் காலத்தில் அதிராஜ ராஜன் மண்டலம் அல்லது சோழ கேரளமண்டலம்[8] என்ற பெயரிலும், கி, பி. 1489—1517 வரை தெற்கநாம்பி எனும் விஜயநகர அரசர்களாலும், 1704 வரை சிகக தேவராய மைசூர் மன்னர்களாலும், மதுரை நாயக்க மன்னர்களாலும் ஆளப்பட்டு 1761ல் ஹைதர்அலியின் ஆதிக்கப்பிடியில் சிக்கி, 1799வரை சீரங்கப்பட்டின திப்புசுல்தானின் ஆதிக்கத்தின்கீழ் இருந்த கொங்கு மண்டலம், வெள்ளைத் தளபதிகள் கர்னல்வுட் (1768) கர்னல் லாங் (1783) கர்னல் புல்லர்டன், ஜெனரல் மீடோஸ், கர்னல் லாங்கு[9] போன்றவர்களின் போர்ப்பரணிகளைச் சந்தித்ததோடு, கொங்குமண்டல கட்டபொம்மன், தீரன்சின்னமலை, பாளையக்காரன் சிககப்பகவுடர் போன்ற வீர மறவர்களின் விளை நிலமாகவும் திகழ்ந்த கொங்கு மண்டலத்தின் தலையாய நகரமான கோயபுத்தூர் என்பதே 'கோவன்' என்னும் இருளர்[10] பழங்குடி இனத் தலைவனால் ஏற்படுத்தப்பட்டதே என்பதும், இதன் மூதாதை ஆதிப்பழங்குடிகள் இருளர்களே என்பதும், பூவலியர், மாவலியர், காவலியர், வேடர். வேட்டுவர்[11] குறும்பர், குன்றவர் நாகர்[12] இனப் பழங்குடிகளோடு, ஏரை, ஆதி, தங்கன், கட்டி, பூன்றுரை, எயினன் என்ற ஆதிவாசிப் பழங்குடிசளாலும் சூழப்பட்டிருந்தது, வாழ்ந்திருந்தனர் என்ற ஆதாரங்களையும் கருத்தில் கொள்ளல் இன்றியமையாதது. இவற்றை மனதில் கொண்டு கொங்கு நாட்டுப் பழங்குடிகளைப் பற்றிய ஆய்வைத் தொடங்குவது சாலப் பொருத்தமானது மட்டுமன்றி பல்வேறு ஆராய்வுகட்கும் அடிகோலும் என நம்பலாம்.

## தற்போதைய கொங்குநாட்டுப் பழங்குடிகள் :

முற்காலத்தில் இருந்த பழங்குடிகளாகிய பூவலியர், மாவலியர், வேடர், வேட்டுவர், நாகர், இருளர், எயினர் இவர்களில் இருளர் தவிர மற்றவர்கள் தற்போது எந்த இனக் குழுவோடு திரிபுபட்டு வாழ்கின்றனர். அவர்களின் எச்சங்கள் வேறு எந்தப் பழங்குடியினரிடமாவது தொக்கி நிற்கின்றனவா, தொடர்பு உள்ளனவா, என அலசி ஆராய்வதற்கான தக்க சான்றுகளோ, வரலாற்றுக் குறிப்புகளோ உள்ளனவா என்றே தெரியாத நிலையில், ஆதாரங்கள் இல்லை என்ற நிலையில், 'கிழக்கு ஆப்பிரிக்காவில் ஏறத்தாழ 25 பழங்குடி இன மக்களிடையே வழங்கிவரும்

'முருங்கு'[13] என்ற கடவுளுக்கும், தாய்த்தமிழகம் விளங்கிய பக்ருளி ஆறு பாய்ந்த லெமூரியாக் கண்டத்தின் கொங்குநாட்டு எல்லை குடக்கு பழனி மலைத் தொடர் பேரியாற்றங்கரை செங் நன்றத்தில் மால்மருகனை வழிபாடு செய்த குரவர்களும், குரவப் பழங்குடிகளும் ஒன்றா என்ற ஐயங்களுக்கெல்லாம் விடைகாண இயலா நிலை யிலேயே கேள்விகளை மட்டும் எழுப்பிவிட்டு இக்கட்டுரை தொடங்குகிறது.

காலத்திற்குக் காலம் மாறிவரும் சூழலில் மலையாள மக்கள் என்பது காட்டுமிராண்டி, ஆதிவாசி, ''காட்டாள்' 'காட்டுமனிதன்' மலைசாதியினன், ''கிரிஜன்'', வன்யசாதி என்பன பல்வேறு பொருளைக் குறிப்பதால், இங்கு பின்னால் விவரிக்கப்படும் பழங் குடியினர் இந்திய அரசியலமைப்புச் சட்டம் 342ன்கீழ் பிரிவு செய் யப்பட்ட வரையறுக்கப்பட்ட (Scheduled Tribes) பழங்குடிகளைப் பற்றி மட்டும் விவரிக்கிறது. அதிலும் பூர்வ கொங்கு மண்டலத் தின் எல்லைக்குட்பட்ட சேலம் மாவட்டம், பச்சைமலையாளிகள். பெரியார் மாவட்ட சோலகர், ஊராளியர்கள். பழனிமலை பளியர்கள், கோவை மாவட்டத்துப் பெயர்பெற்ற பழங்குடிகளாகிய இருளர், முதுவர், காடர் இவர்களைப் பற்றியும், பலசர், புலயர், மலமலசர் பற்றியும் மட்டுமே விவரிக்கிறது. கொங்குப் பழங்குடி களை ஆராயப் புகுமுன் தமிழகத்துப் பழங்குடிகளைப் பற்றியும் ஒரு சில மேலோட்டமான தகவல்களை அறிந்து கொள்ளல் அவசிய மாகிறது. இந்திய நாடு முழுதும் அரசியல் ஆணைப் பிரிவின்படி கண்டறியப்பட்டுள்ள பழங்குடிகளின் எண்ணிக்கை 3,80,15162 (6.94%) (1971); இவர்கள் 314 பழங்குடிப் பிரிவினராக வாழ் கின்றனர். இந்த 314 பழங்குடிகளில் தமிழகத்தில் மட்டும் 33 பிரி வினர் உள்ளனர்; அவர்களின் மொத்த எண்ணிக்கை 3,11,515 ஆகும்; தமிழகம் இந்திய மொத்தப் பழங்குடியினர் தொகையில் 76 விழுக்காட்டினைக் கொண்டுள்ளது. இதில் குறிப்பிடத்தக்க பழங்குடியினர் காடர்கள், பழியர்கள், முதுவர்கள், இருளர்கள் ஆவர்;

## முதுவர்கள் :

மந்திரம், கல்வி, பொருளாதாரம், பண்பாட்டுச் சிறப்புக் கூறுகளைக் கற்பிக்கும் பள்ளியாகவும், திருமணத்தின் பின் பாலுறவு நெறிகளை, முறைகளை சரியான முறையில் கற்பித்து சமூகமயமாக்கவல்ல இளைஞர் மாடங்களை அமைத்து, பொழுது விழுந்ததும் வயதுக்குவந்த இளைஞர்களையெல்லாம்

ஓர் மாடத்தினுள் பூட்டி வைத்துக் காவல் காக்கும் கட்டுப்பாடு களைக் கொண்ட முதுவர்கள் ஆனைமலைக் காடுகளில் சங்கரன் குடி, பன்னிக்குழி, ஈத்தக்குழி. காடம்பாறை போன்ற செட்டில் மெண்ட் அல்லது குடியமைப்புகளில் வாழ்கின்றனர். இவர்களின் பெண்கள் காடுகளில் கிடைக்கும் பூக்கள் அனைத்தையும் சூடிக் கொள்வர். குறிப்பாக அரசாணிக்காயின் பெரிய பூவை விருப்ப முடன் சூடிக் கொள்வர். தற்போது கூட அந்நிய ஆடவர்களைக் கண்டால் உடனே செடியிலோ. பாறையிலோ ஓடி மறைந்துகொள் ளும் அளவு ஓர் அச்சம், அதீத பீதியிலேயே வாழ்ந்து வருகின் றனர்; மலைப் பழங்குடியினரியையே இவர்கள் மிகவும் உயர்ந் தவர்கள் என எண்ணி வாழ்வதோடு, அண்மையிலுள்ள புலயர், மலசர், மலமலசர் ஆகியவர்களை 100அடி தூரத்திலேயே நிறுத்தி வைத்து விடுகின்றனர்; இவர்கள் 18ஆம் நூற்றாண்டுகளில் மதுரை மாவட்டத்திலிருந்து முகமதியப்படையெடுப்பைக் கண்டு பயந்து ஓடிவந்து ஆனைமலைக் காடுகளில் ஒழிந்து வாழ்பவர்கள் எனக் கூறப்படுகிறது. இவர்களின் கால்வழிகள் மேலக்கூட்டம், கானக் கூட்டம், பூதானிக் கூட்டம். சூசானிக்கூட்டம், காணை யாத்துக் கூட்டம், எல்லிக் கூட்டம் போன்றவை கொங்கு வேளாளர் களிடையே நிலவும் பல்வேறு கூட்டங்களுடன் ஒப்பிடத் தக்கன; நினைவூட்டுவன;

### பழியர்கள் :

பழியப் பழங்குடி மக்கள் பழனிமலைக் குன்றுகளிலும். சிறு மலையிலும் வாழ்கின்றனர். இவர்கள் எண்ணிக்கை 3108 பேர் ஆவர். இவர்கள் கல்லுப்பழியர், மேல்மலைப்பழியர் என்று இரு பிரிவுகளாக வாழ்கின்றனர். பெரும்பாலான பழியர்கள் நாடோடி களாகவே வாழ்கின்றனர். இவர்கள் குடியிருப்பின் தலைவன் ''பெருந்தனக்காரன்''. இவன் முத்திரி, நாட்டாண்மை, காணிக் காரன் என்று அழைக்கப்படுகிறான். இவனது உதவியாளன் 'கம் பளியன்' என்பவன் ஆவான். ஆவியுலகக் கோட்பாட்டில் (Animism) அதீத நம்பிக்கையுடை இவர்கள் வனப்பழிச்சியம்மன், தென்மலைக் கறுப்பு இவற்றை 10 ஆண்டுக்கொருமுறை குலதெய் வமாக வழிபடுகின்றனர். இத்துடன் ஆண்டிசாமி, கருப்பசாமி, வேலப்பசாமி, மாயாண்டி, இவைகளை வழிபடுவதுடன் ஆந்திர மாநிலம், அடிலாபாத் பகுதி ராஜ்ஜாகாண்டுகளைப் போன்ற'' பென்கோமிட்டா[14] (Penkomta), இருளப் பழங்குடியினரின்[15]', பிசாசுமிடா or ''குசான்கோன''வழிபாட்டுடன் ஒன்றுபட்ட''நாட்டு

மன்சால்'' என்ற ஆவி வழிபாட்டையும் மிகப்பயபக்தியுடன் வழிபடுகின்றனர். இந்த மூன்றிலும் வீட்டின் ஒரு மூலையில் பெரிய பானைகளில் தெய்வத்தை வைத்து வழிபடுவது ஆழ்ந்த திராவிட ஆவி வழிபாட்டு ஆராய்வுக்கான சிந்தனையை அளிக்கிறது.

இவர்கள் புலிக்கு வாய்க்கட்டுப் போடுவதிலும், ஆடு மாட்டுக் கூட்டத்தைச் சுற்றி காவல் கட்டு, நரிக்கட்டு போன்ற மந்திரக் கட்டுகள் போடுவதில் கை தேர்ந்தவர்கள்; இவர்கள் கட்டுமந்திரம் சொல்லி 4 திசைகளிலும் நரியின் வாலைப் பாடம் சொல்லிக் கட்டி வைப்பர். இதுபற்றிய ஏராளமான செய்திகளை இவர்களது ஆதிவாசிப் பாடல்களில் காணலாம். பழனி, சிறுமலைப்பகுதிப் பழியம் பெண்கள் பருவமடைந்ததும் 30 நாள் அவர்களை ஆண்களைப் பாராத வண்ணமும், பேசாத வகையிலும் குடிசையில் வைப்பர்; குடிசை வைத்த முதல் நாளே ஆடவர்கள் வேட்டைக்குச் செல்வர். வேட்டை கிடைத்தால் பெண் கற்பு நெறி வழுவாதவள் என்றும், வேட்டை கிடைக்கவில்லை எனில் உடன் அந்தக் குடிசையைத் தீயில் எரித்துப் புதுக் குடிசை கட்டி அதில் பெண்ணைக் கொண்டு வைப்பர்.

30 நாள் கழிந்ததும் ஊற்றிலிருந்து நீர் கொண்டுவந்து பெண்ணைக் குளிப்பாட்டி, ஏழு உருண்டை பசு மாட்டு சாண உருண்டைகளையும், மஞ்சள்உருண்டைகளையும்சாப்பிடச்செய்வர். பின் அப் பெண்ணின் தீட்டினை விலக்க, தாய்மாமன் ஒரு விளாரினால் அப்பெண்ணை அடிப்பான். அப்பெண் தீட்டு நீங்கக் குளித்துவிட்டு ஆற்றிலிருந்து புறப்படும் போது மழை பெய்தால் அப்பெண் கற்பு நெறி தவறாத பெண்ணாக நடப்பாள் என்று பழியர்கள் கருதுகின்றனர். இவைகள் எல்லாம் ஆண் வழிச் சமூகத்தில் ஆணின் ஆதிக்கம், அதிகாரத்தைக் காட்டுகின்றன.

*மலையாளிகள் :*

தமிழகத்து ஆதிவாசிகள் எண்ணிக்கையில் முதலிடம் பெறுபவர்கள்; இவர்களின் தொகை 1,59,426 பேர் ஆவர். இவர்கள், ''மலையாளிகள்'', ''மலைவெள்ளாளர்'', காஞ்சி மண்டலத்தார், மலைக்கவுண்டன், பெரிய மலையாளி, கொல்லி மலையாளி, பச்சை மலையாளி எனவும் அழைக்கப்படும் இவர்கள் சேலம், வடஆற்காடு, தென்ஆற்காடு, கொல்லி மலை, ஜவ்வாது மலை, ஏலகிரி மலை, பச்சை மலை, பவள மலை, கல்ராயன் மலை, சேர்வராயன் மலை இவற்றில் பரந்து வாழ்கின்றனர். இவர்கள் பழங்குடிகளாகக்

கருதப்பட்டாலும் சுமார் 400 ஆண்டுகட்குமுன் காஞ்சிபுரத்திலிருந்து குடியேறி சேலம், ஆற்காடு மாவட்ட மலைப் பிரதேசங்களில் குடியேறியவர்கள் எனத் திட்டமாகக் கருதப்படுகிறது. இவர்களுடன் கோவை மாவட்டப் பகுதிகளிலிருந்து குடியேறியவர்களும் கலந்திருக்கலாம் என்ற எண்ணம், கொல்லி மலையாளிகளிடையே காணப்படும் 'கொங்கர்' 'கொங்க கவுண்டன்', 'கொங்கி', 'கொங்காயி', 'கொங்களாயி' எனும் குறிப்புகளால் தோன்றுகிறது. மலையாளிகள் கரியராமர், தர்மராஜா, அய்யனார், பிடால, சாளவம்பன், கொங்கன், திருமஞ்சிப் பாட்டன் நாச்சி, பூட்டை மாரியம்மன், பூவாரி, தீர்த்தகரியன் இவற்றை ஆடு வெட்டிப் பொங்கலிட்டுக் கும்பிடுகின்றனர். இவர்கள் மழைக்காக வேண்டுதல் செய்யும் போது பிள்ளையாரை சாணக்குழியில் புதைத்து, ஒருவரை ஒருவர் சாண உருண்டைகளால் அடித்துக்கொள்வர். மழை பெய்தால் பிள்ளையாரை சாணிக்குள்ளிருந்து விடுதலை செய்வர்; அவசரச் சட்டப் பிரகடனக் காலத்தின் முன் கொத்தடிமைகளாக, ஜாகீர்தார்களால் அடிமைப்படுத்தப் பட்டிருந்த இவர்கள் தற்போது முற்றும் ஜாகீர்களின் பிடியிலிருந்து விடுவிக்கப்பட்டுள்ளனர்.

**காடர்கள் :**

முன்பற்களை உளியாலோ, அரத்தாலோ செதுக்கி, புலிப் பல் போல் கூராக்கினால் அது மணப்பெண்ணுக்கும், மணமகனுக்கும் முகத்தில் அற்புதமான அழகைக் கொடுக்கும் என்ற எண்ணத்தில், சீனா, ஆஸ்திரேலிய, நியூ ஹெப்ரைட் தீவு 'மொபோட்டுகளைப்' போன்று 'பல் குத்துதல்' எனும் பழக்கத்தையுடைய காடர்கள் ஆனைமலைக் காடுகள், டாப்சிலிப், பரம்பிக்குளம், வால்பாறை மலைக் கானகங்களில் வாழ்ந்து வருகின்றனர். இவர்களின் எண்ணிக்கை 830, இன்னும் பல காடர்கள் திருவாங்கூர் கானகங்களில் வாழ்ந்து வருகின்றனர். இவர்களில் 830 பேர்களில் ஒரே ஒரு பெண்மட்டும் 9 ஆம் வகுப்புவரையும்' 4 ஆடவர்கள் 10 ஆம் வகுப்பு மட்டும் படித்துள்ளது சிந்தனைக்கும் தக்க செயல்பாட்டுக்கும் உரியது.

சுதந்திரத்துக்கு முன் வனத்தின் பொருட்கள் முழுதையும் முழுச் சுதந்திரமாக உண்டு உயிர்த்து வந்த இவர்கள் தற்போது உணவு தேடி அலையும் (Foot gathering) பழங்குடிகளாகவே வாழ்ந்து வருகின்றனர்;[10] வனத்திலுள்ள பல்வேறு பொருட்களும் அந்நியமாகிவிட்ட நிலையில் இவர்கள் தமது குழந்தை, சிறுவர்களை அழைத்துக் கொண்டு 10—15 மைல்களுக்கு அப்பால்

கூட நடந்து சென்று தேயிலைத் தோட்டங்களில் வேலை கிடைத்த போது செய்துவிட்டு, இல்லாத காலங்களில் காட்டுப் பட்டை, கிழங்கு. தேன்போன்றவற்றைச்சேகரிக்க வாரக் கணக்கில் வீட்டை விட்டு தொலைதூரம் சென்றுவிடும் இவர்கள் தமது வன உரிமை எனும் ''அமுத சுரபியை'' அடகு வைத்த ஆபுத்திரர்களாகவே அலைந்து வருகின்றனர்.

வெளியாட்களின் தொடர்பாலும், ஆதிக்கத்தாலும் காடர்களின் பழங்குடிப் பஞ்சாயத்துகள் வலு இழந்து, இதன் மூப்பர்கள் தம் மக்கள் மேல் கட்டுப்பாடு இழந்து வருகின்றனர்; இதனால் இவ்வினப் பெண்கள் வெளிஆடர்களுடன் கொண்டுள்ள தொடர்பு மிகவும் அதிகரித்து வருகின்றது. தீட்டு வீட்டின் பக்கத்தில் போனால் கூட கண்ணில் நோய் வந்துவிடும் எனக் கருதிய காடர்கள் குறைந்தது நான்கு ஐந்து பேர்களுடனாவது தொடர்பு கொண்டுள்ளமை அவர்களது கலாசார சிதைவையே காட்டுகிறதோ என எண்ணத் தோன்றுகிறது. காடர்கள் தமது அண்மையில் வாழும் மலசர், புலயர் இவர்களைவிட உயர்வானவர்கள் எனக் கருதுகின்றனர். எனவே புலயர், மலசர்களைத் தம் வாசலிலேயே நிறுத்திவைத்து தனியான பாத்திரத்திலேயே உணவு படைப்பது மலையின மக்கள்மீது சாதியத்தின் சாயலும், தாக்கமும் கொண்டுள்ள தன்மையை விளக்கும்; முதுவர்களைக் காடர்கள் தம் வீட்டினுள் வைத்து உபசரிக்கின்றனர். ஆனால் காடர்களை முதுவர்கள் தம் வீட்டு வாசலிலேயே நிறுத்தி விடுகின்றனர். ஏனெனில் முதுவர்கள், தாம் முன்னொரு காலத்தில் மதுரை மாவட்டத்தில் வேளாளக் குடிகளாக இருந்து 18 ஆம் நூற்றாண்டில் முகலாயர்களிடமிருந்து தப்ப மலைக்கு வந்தவர்கள் என்று உறுதியாக எண்ணுகின்றனர்.

### *இருளர்:*

திருமணத்திற்கு முன்பே தனது எதிர்கால மாமனார் வீட்டில் சென்று தங்கி அங்கேயே இருந்து பெண்ணிற்கும், பெண்ணின் பெற்றோருக்கும் உதவியாக இருந்து உழைத்து இயன்ற போது திருமணம் செய்துகொள்ளும் 'பொண்ணு சேரல்' முறையைப் பின்பற்றி வரும் இருளர்களின் எண்ணிக்கை கொங்கு நாட்டில் மட்டும் 10,598 (1971 census) ஆகும்; இவர்கள் குறிப்பாக ஆனைகட்டி, மருதமலை, சிறுவாணி, வெள்ளியங்காடு, அட்டப்பாடி மலைகள், போளுமாம்பட்டி மலைகள் இவற்றிலும், சமதரைப் பகுதிகளிலும் வாழ்கின்றனர்; கர்னாடகத்தில் இவர்கள் 'இருளிகா' என்று

வழங்கப்படுகின்றனர். கேரள மாநிலம் பாலக்காட்டு மாவட்டத்தில் அகழி, முக்காலி, சோலையூர், கோஞ்சித்துறை, முள்ளி போன்ற இடங்களிலும் பரவலாக வசித்து வருகின்றனர். செங்கல்பட்டு மாவட்டத்தில் வாழும் 'வில்லியர்கள்' இருளர் என அழைக்கப் பட்டாலும் குல முறை ஒருமை இவர்களிடையே இல்லை. இவர் களின் வீடுகளை பல பயன்களுக்காக காட்டு வீடு, பரண் வீடு, தீட்டு வீடு எனக் கட்டி அவற்றில் வாழ்கின்றனர்; இருளர்களின் பஞ்சாயத்து மூப்பன், மண்ணுக்காரன், வண்டாரி. குறுதலை, இளந்தாரி ஆகியவர்களைக் கொண்டது. இதில் மண்ணுக்காரன் விவசாயம் சம்பந்த வேலைகளையும், வண்டாரி சாவு, திருமணச் செய்திகளைக் கொண்டு செல்லும் தூதுவனாகவும், குறுதலை இளந்தாரி இவர்கள் சமய வழிபாட்டுக்கான முன்னேற்பாடுகளைச் செய்பவர்களாகவும், மூப்பன் சகல சண்டை, சச்சரவுகளைத் தீர்ப்ப வனாகவும் திகழ்கிறான்; இவர்களின் குலப் பெருங்கால் வழிகள் 12 ஆகும். அவை சம்பெ, பேராதர, குறுநகெ, புங்கே, கொடுவே, கரட்டிக, தேவனெ, குப்பெ என்பன. இந்தப் பெருங்கால் வழிகளில் அமைந்துள்ள சிறுகால் வழிகளில் (clan) குறும்ப சம்பெ, முடுக சம்பெ, தொட்டி சம்பெ, கவுண்ட சம்பெ போன்றவை இருளர்கள் தமது சுற்றுப்புறத்திலிருந்த சாதியினருடன் கொண்டத்தக்க தகாத உறவின் விளைவாக ஏற்பட்டவையோ என்ற கருத்தை ஏற்படுத்து கின்றது. இக்கருத்து, இருளன் ஒருவன் இறந்தால் குறும்ப இனத் தவன் மொட்டை அடித்துக் கொள்வதிலிருந்தும், கவுண்ட இன மக்கள் அறுவடை நோன்பான மல்லாண்டி வழிபாட்டின் போது இருளர் பெரும் முக்கியத்துவத்தாலும் வலுப்பெறுகிறது. இவர்கள் நீக்ரிடோ இனத்தை சார்ந்தவர்கள் என ஒரு சில மானிடவியல் அறிஞர்களாலும், ஆஸ்திரேலிய இனத்தைச் சார்ந்தோர் என பிறராலும் கருதப்படுகின்றனர்; இவர்களில் ''புங்கெ'' பெருவழி சார்ந்தவர்கள் புங்க மரக்கிளைகளையும், ''கொடுவ'' வழியினர் கரும்பினையும், ''குப்பெ''யினர் ''பலா'' மரக்கிளையையும் புனிதமாகப் போற்றுவதிலிருந்து இவர்கள் 'தாவர குலக்குறி (Plant to fems)யைப் பின்பற்றி வந்தனரோ எனும் ஆழ்ந்த கேள்வியை மனதில் ஏற்படுத்துகிறது. இவர்கள் ஒடியன் எனும் மலையாள மாந்திரீகத்திற்கு குலை நடுங்குபவர்கள்; ஆனால் மருள் வந்து குறி சொல்லும் பறைக் குளித்தலில் (oracl/divination) வல்லவர்கள் எனக் கருதப்படும் இவர்கள் பெரும்பாலும் பண்ணை அடிமைகளாய், விறகு வெட்டிச்சென்று விற்பவர்களாய் அவலமான நிலையிலேயே வாழ்கின்றனர்.

இவர்கள் கரட்டியம்மன், கடம்பச்சி, குங்காத்தம்மா, உத்தியம்மன், மணியரசியம்மா, கோடியூர்பகவதி, கோடிமல்லம்மா, மடுப்பள்ளியம்மா, வீரபத்ரன், கொல்லங்கடவுபாலமலை ரங்கன், ராமசாமிமுடி, ஏலமலைத்தாயார் போன்ற தெய்வங்களை வழிபடுகின்றனர்.

முன் விவரித்த பல்வேறு மலையின மக்களாகிய காடர்கள், இருளர்கள், முதுவர்கள் மேனாட்டு மானிடவியலறிஞர்களால் நீக்ரிட்டோ, நீக்ராய்டு, ஆஸ்ட்ரலாய்டு இனத்தவர் என வருணிக்கப்பட்டாலும், அது பல முன்னாள், இன்னாள் அறிஞர்களால் அது ஏற்றுக் கொள்ளப்பட்டிருந்தாலும், இருளர்களிடமும், காடர்களிடமும் அவர்களின் முன்னாள் வரலாற்றைக் கேட்டு ஆராயும் போது அவர்கள் அனைவரும் தாங்கள் பல நூறுஆண்டுகளுக்கு முன் நடந்த போர்களின் போதும், பல்வேறு படையெடுப்புகளின் போதும் பாதுகாப்புக்காக அடர்ந்த காடுகளுக்குள் தஞ்சம் புகுந்து தப்பி உயிர் வாழ்ந்துவரும் சமவெளி மக்களே என்று உறுதியாகக் கூறினாலும், வெளியாட்களின் குருதித் தொடர்பால் பல்வேறு மலையின மக்களும் சமவெளியினரைப் போன்றே காணப்பட்டாலும், ஆனைமலையின் உள்ளார்ந்த அடர் வனங்களில் வாழும் காடர்களும், அட்டப்பாடியில் வாழும் சில இருளர்களும் உலக அளவில் ஏற்றுக் கொள்ளப்பட்ட நீக்ரிட்டோப் பழங்குடியினரின் சர்வ உடற் கூறுகளையும் கொண்டவர்களாய் இருப்பது வியப்பிற்கும், மேல் ஆய்விற்கும் வித்திடும்.

**மேற்கோள் நூல்கள் :**


1 ந. சி. கந்தையா பிள்ளை 'தமிழர் பண்பாடு' பக் - 25

2 சீனி, வேங்கடசாமி 'கொங்கு மண்டல வரலாறு'

3 தி. அ. முத்துசாமிக் கோனார் 'கொங்கு மண்டல சதகம்'

4 சிலம்பு உரை பெறு கட்டுரை, ப - 21

5 புறப்பாடல் பா - 160

6 பிங்கல நிகண்டு பா - 745

7 Subramanya Iyer "Ancient Dekhan"

8 'பேரூர் புராணம்' 'திருவாவடுதுறை ஆதீனம்' ப - 649

9 "Imperial Gazetteer of India" Vol : 2 P - 68-9

10 South Indian Inscriptions Vol. 5 232/556/93

11 டி. கே. சக்திதேவி 'கொங்குவெள்ளாளர்வரலாறு' ப - 25

12 டி. கே. சக்திதேவி 'கோவை நகர வரலாறு' ப - 5

13 டாக்டர் க.ப. அறவாணன் 'தமிழரின்தாயகம்' ப - 43

14 Furer Haimendorf, C. Vo 'The Gonds of Andhra pradesh P - 40

15 M. Padmanabhan, A study of the Irula tribes of Coimbatore District" M prhil thesis P - 240

16 Vani Venkatram 'Problems and Perspectives of South Indian tribes p - 6

17 அறிஞர் சு. சத்திவேல் 'தமிழ்நாட்டுப்பழங்குடிகள்' p - 53




# பாரதியார் பல்கலைக்கழக வெளியீடுகள்

1. பாரதி [illegible] (ரூ. 18—00)
2. வயது வந்தோர் [illegible] — [illegible]முதல் நூல்
3. அறிவியல் தமிழ்[illegible] — தொகுப்பு (ரூ. 20—00)
4. பாரதி ஆய்[illegible]க்கோ[illegible] — தொகுப்பு (ரூ. 28—00)
5. தமிழாய்வு [illegible] அ[illegible]கள் (ரூ. 8—00)
6. மொழியிய[illegible]
7. Folklore of India
8. Journal of Bhara[illegible] University

   (Arts) Vol. 1 – 20

   Vol. 2 – 25
9. Questionn[illegible]ire for the s[illegible] of Multilingualism

---

நூல்கள் விற்பனைக்கும் [illegible] :

பதிவாளர்,
பாரதியார் பல்கலைக் கழகம்
கோவை 641 046